# பொருள் அடக்கம்

என்றும் நாம் யாவர்க்கும் இடைவோம் அல்லோம்
இருநிலத்தில் எமக்குஎதிரா வாரும் இல்லை
சென்றுநாம் சிறுதெய்வம் சேர்வோம் அல்லோம்
சிவபெருமான் திருவடியே சேரப் பெற்றோம்
ஒன்றினாற் குறையுடையோம் அல்லோம் அன்றே
உறுபிணியார் செறல்ஒழிந்திட்டு ஓடிப் போனார்
பொன்றினார் தலைமாலை அணிந்த சென்னிப்
புண்ணியனை நண்ணியபுண் ணியத்துளோமே.

—அப்பர்

# முகவுரை

சைவ சமயம் இந்தியாவில் அனாதிகாலமாக வழங்கிய சமயம். இது அன்று முதல் இன்றுவரை, வழிபாடு மட்டும் செய்கின்ற ஒரு **மதம்** என்றில்லாமல், மக்கள் வாழ்க்கையின் எல்லாத் துறைகளையும் செம்மைப் படுத்திய ஒரு **வாழ்க்கை நெறி**யாக இருந்து வந்திருக்கிறது. புலால் உண்ணாமைக்கே சைவம் என்பது பெயர்; எவ்வுயிருக்கும் அன்பு செய்பவனே சைவன். இவை சைவம் பற்றிய இரு சிறந்த கருத்துக்கள்.

இன்று சைவமக்களில் அனேகர், வாழ்க்கையில் நல்ல நியமம் கொண்டிருக்கிறார்கள். காலையில் எழுந்து நீராடித் திருநீறு அணிந்து தங்கள் இல்லத்தில், பூசை அறையிலோ வேறிடத்திலோ, தாங்கள் வைத்திருக்கும் தெய்வத் திருவுருவுக்கு அல்லது படத்துக்கு மலரிட்டுப் பூசை செய்து சில பாடல் பாடி வழிபட்டுப் பின் உணவு கொண்டு, தம் வேலைகளைப் பார்க்கச் செல்லுகிறார்கள். இன்றிருக்கும் வாழ்க்கை நெருக்கடியில்—அகவிலை, நேர நெருக்கடி, பணத் தட்டு, உணவுப் பொருள் முட்டுப்பாடு, பிரயாண நெருக்கடி இத்தனைக்குமிடையில்—பலர் இந்த நியமம் கொண்டிருப்பது மிகவும் பாராட்டுதற்குரியது. மிகப் பெரும்பாலோருக்கு இந்த நியமம் இல்லை. எனினும், நியமம் உள்ளவர்கள் இல்லாதவர்கள் ஆகிய இரு திறத்தாரிடையும், தங்களுடைய சமய தத்துவம் யாது, ஆசாரியர் யார், சமய நூல் யாது, தங்கள் வழிபாட்டு முறைகள் யாவை, இந்து சமயம் என்று சொல்கின்ற சமயத்தின் பிரிவுகளில் தங்களுடைய நிலை யாது என்பது சிறிதளவும் தெரியவில்லை. இவற்றை இயன்ற அளவு எளிய முறையில் உணர்த்துவதே இப்புத்தகத்தின் நோக்கமாகும். இது சாமானியக் கல்வி அறிவுடைய சைவ

மக்களுக்கும், மாணுக்கருக்கும், சைவத்தைப் பற்றிப் புதிதாய் அறிய விரும்புவோருக்கும் ஏற்ற முறையில் எழுதப் பட்டுள்ளது. இது சைவ சமயத்தின் எல்லாத் துறைகளையும் ஓரளவு தழுவிய ஆரம்ப நூலாக இருக்கும்.

இந்த நூல் எட்டு அத்தியாயங்களாக அமைந்துள்ளது. முதல் அத்தியாயம் புலால் உண்ணுமை, எல்லா உயிர்களுக் கும் அன்பு செலுத்துதல், சைவத்தின் சமரசம், சைவத்தின் பழமை, சைவத்தால் விளைந்த வளம் ஆகியவற்றைக் கூறும். சைவ சாத்திரங்கள் என்ற பகுதி, தமிழில் திருமுறைகளையும் மெய்கண்ட சாத்திரங்களையும் வடமொழியில் சிவாகமங் களையும் குறிப்பிட்டு, வேதங்களும் உபநிடதங்களும் பிற வடமொழிச் சாத்திரங்களும் எந்த அளவு சைவர் கொள்ளத் தக்கன என்பதை விளக்கும். சைவ ஆசாரியர் என்ற பகுதி, அவர்கள் யார் என்பதை நன்கு கூறி, அவர்களுடைய வரலாற்றையும் சுருக்கித் தந்து, அவர் அல்லாதவர் ஆசாரியர் ஆகார் என்ற உணர்வை ஊட்டும்; சில அற்புதங்களை நிகழ்த் திக் காட்டுவோர் நிலை சைவ ஞான மார்க்கத்தில் இன்னது என்பதையும் திட்டமாய்க் காட்டும்.

சைவ வழிபாடு என்ற பகுதி, பொதுவாக ஆலய வழி பாட்டை விளக்கும்; ஒருதெய்வ வழிபாட்டை வற்புறுத்தும், சிறு தெய்வ வழிபாட்டைக் கண்டிக்கும். உருவ வழிபாட்டின் அவசியத்தை இப் பகுதியில் தெளிவுபடுத்திச் சொல்லி யிருக்கக் காணலாம்.

சைவச் சடங்குகள் என்ற அத்தியாயத்தில், சைவர் தனிப்பட்ட முறையிலும், சமூகமாகவும், வீட்டிலும் சிவாலயத் திலும், செய்யத்தக்க கிரியைகளுக்கு ஒரு விளக்கம் சொல்லப் பட்டுள்ளது. சைவ தருமம் என்பது, அடுத்த பகுதி; 'மேன்மை கொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்' என் பது ஆன்றோர் வாக்கு. இந்தச் சைவ நீதியையே தருமம்

என்று குறிப்பிட்டிருக்கிறேம். வருணம், ஆசிரமம் ஆகிய தருமங்கள்; சைவக் கண்கொண்டு சொல்லப்பட்டுள்ளன.

அடுத்த இரு அத்தியாயங்களும் சமய நுட்பங்களுக்குள் செல்வன. சைவ சாதனம் என்பது, நால்வகை மார்க்கங்களை யும் சிவ சின்னங்களையும் விளக்கி உரைப்பது. சைவ சமயத் தத்துவம் என்பதே சைவ சித்தாந்தம். இப் பகுதியில் சைவ சித்தாந்தக் கோட்பாடுகளில் அடிப்படையானவை ஓரளவு தெளிவாக்கப் பட்டுள்ளன. இது சுருங்கிய நூலாதலால், அதிக விளக்கம் சாத்தியமில்லை. ஆரம்ப நிலையில் உள்ள வர்கள் இதன் முக்கிய பகுதிகளை மட்டும் அறிந்தால் போதும்.

சுருங்கக் கூறும் அவசியம் பற்றி, இங்கு மேற்கோட் பாடல்களையும் ஆதாரங்களையும் குறிப்பிடவில்லை. அது போல, சமய விளக்கமே எமது நோக்கமாதலால், ஓரிடத் திலும் கால ஆராய்ச்சியிலோ விவாதத்திலோ புகவில்லை. சைவத்தில் எல்லாப் புறக் கிரியைகளுக்கும் அமைப்புக்களுக் கும் தத்துவார்த்தம் கூறமுடியும். ஆயினும் இடமின்மை கருதி அவை முழுமையும் இங்குச் சொல்லப் பெறவில்லை. உருவ வழிபாட்டு விளக்கம் முன்னமே குறிப்பிட்டோம். பிற வற்றை அறிய விரும்புவோர், வேறு விரிந்த நூல்களையும் சாத்திரங்களையும் பயில வேண்டும்.

மந்திரங்கள் முதலியவற்றைக் குறிப்பிட நேர்ந்த இடத்து, 'குருமுகமாய் அறிக' என்று குறிப்பிட்டிருக் கிறேம். இது போன்ற ஆரம்பநூலில் அவற்றை விளக்கி உரைக்கவும் முடியாது; எழுத்தால் விரித்து எழுதுவது சமய மரபுக்கு முரணும் ஆகும். இவை ஆசாரியன் உபதேசத் தால் அறிய வேண்டியவை. இவை போலவே யோகத்தைக் குறித்துச் சொல்லால் விளக்கப் புகுதல் சிறிதும் பொருந் தாது. யோகமும் அதன் மூலம் வரும் அனுபவமும், அப் பியாசத்தினுலும், திருவருளினுலும் கைவர வேண்டியவை. எழுத்தால் இவற்றை விளக்கப் புகுதல் ஏட்டுச் சுரைக்

காயாய் இருக்குமேயன்றி, உண்மையைக் கூறியதாக ஆகாது.

சைவ சமயம் அநாதியாக இருந்து பல பிரிவுகளைக் கொண்டு விளங்கியது. சைவப் பெருஞ்சமயத்தின் அகச் சமயங்களாக பாடாணவாதம், பேதவாதம், சிவ சம வாதம் சிவ சங்கிராந்த வாதம், ஈசுவர அவிகார வாதம், சிவாத்து விதம் என்ற ஆறும், அகப்புறச் சமயங்களான பாசுபதம் மாவிரதம் காபாலம் வாமம் வைரவம் ஐக்கியவாத சைவம் என்ற ஆறும், பண்டைச் சமய நூல்களில் சொல்லப் பட்டுள்ளன. இவை ஆராய்ச்சியில் மட்டிலும் உள்ளனவே யன்றி, இவற்றுள் ஒன்றேனும் அனுட்டானத்தில் இல்லை. அனுட்டானத்தில் இருப்பது சைவ சித்தாந்தம் ஒன்றே; இதை ஒட்டியே தமிழ்நாட்டில் உள்ள பல்லாயிரம் சிவாலயங் களும் அவற்றின் வழிபாட்டு முறைகளும் விழாக்களும் இன்று வரை அமைந்துள்ளன. சைவ சமயம் என்ற இப் புத்தகம் சைவசித்தாந்த மரபை ஒட்டியே எழுதப் பட்டுள்ளது.

இங்குக் கூறப்பட்டுள்ள சைவம் பூரணமான வைதிக சைவமே. வைதிகத்திற்கு மாறுபட்டு எதுவும் சொல்ல வில்லை. எனினும், விரிந்த மனப்பான்மையோடு எல்லாப் பேருண்மைகளையும் தழுவிய சைவமே சொல்லப்படுகின்றது. இச்சைவம் என்றைக்கும் உள்ள சைவமாகும். எல்லாருக் கும் உடன்பாடான கருத்துக்களை மட்டும் சொல்வது எமது நோக்கமன்று. உண்மையை உணர்த்துதலே எமது நோக்கம். வடமொழி பற்றியும் சிவாசாரியர் பிராமணர் பற்றியும் குறிப்பிட்டுள்ள கருத்துக்கள் இவ்வாறு சொல்லப் பெற்றவை.

இறுதியில் ஒரு கருத்தைச் சொல்லாமல் இருக்க முடிய வில்லை. "நெய் பால் தேன் கட்டி கருப்பென்றால் தித்தியா காண் நீ" என்று ஒரு ஞானி பாடினர். அது போல, சைவ

சமய நூலைப் படித்தால் அனுபவம் வந்ததாக ஆகாது. உண்மையனுபவம், உண்மையாசான் அருளால் தோன்றும் போது தான் விளையும்; எனினும், அதற்கான தகுதியை உண்டு பண்ணிக் கொள்ளும் வழிகள் சில. சிவ சின்னங்களும் திருவைந்தெழுத்தும் வழிகள். இவற்றோடு மற்றொரு சிறப்பு வழி, எளிதான வழி, திருமுறை ஓதுதல். திருமுறைகளை முறையாக ஓதுதல் உண்மையில் காலக்கிரமத்தில் ஒரு பரவச நிலையைத் தோற்றுவிப்பது அனுபவபூர்வமான உண்மை. இதனால் வேறு பலன்களும் விளைகின்றன. அருட்பாசுரங்களான திருப்புகழ் போன்றவையும் உடன் கூறத் தக்கவை.

இவற்றோடு இங்கு நாம் குறிப்பிட விரும்புவது, சிவ ஞான சித்தியார் என்ற சித்தாந்த சாத்திரம். இந்த நூலில் எட்டாம் சூத்திரம் தொடங்கிப் பாடம் கேட்பது ஒரு மரபு. இப் பகுதி, தீக்ஷைகள் தொடங்கிக் குரு லிங்க சங்கம வழிபாட்டில் முடிகிறது. பாடல்கள் யாவும் எண்சீர் ஆசிரிய விருத்தங்கள். பாடல்கள் படிக்கவும் இசையோடு பாடவும், மனத்திற்கே மிக்க ஆறுதல் தருவனவாகும். இப் பகுதியில், சைவ சித்தாந்தத்தில் இலக்கணம் கூறும் பகுதிகள் நீங்கலாக, ஏனைய பகுதிகள் அடங்கியுள்ளன; பொருள் உணர்வது எளிது. இசையோடு சொல்லிப் பொருள் வழி மனத்தைச் செலுத்தினால், சைவசித்தாந்தக் கருத்துக்களை நன்கு தெரிந்துகொள்ளமுடியும். இவ்வாறு இசையும் பொருள் உணர்வும் கூடித் தரும் சுகத்தில், ஓரளவு பொருள் காட்டுகின்ற வாழ்க்கை அனுபவங்களும் எளிதாகச் சித்திக்கும். இது பலர் அனுபவத்தில் கண்ட உண்மை. ஆதலால் சைவ அன்பர்கள் இந்த நூலைப் பயிலும் பழக்கம் மேற்கொள்வார்களாக; பயிலும்போது இந்த வழியே நூல்களைப் பயில்வார்களாக.

சென்ற தலைமுறை வரையில், நூல் கற்றார் என்றால் மனப்பாடம் செய்தார் என்றே பொருள். மனப்பாடம்

செய்த பின், ஓய்ந்திருக்கும் போதெல்லாம், பாடல்களை மீண்டும் மீண்டும் மனத்தில் சொல்லிப் பார்த்து, அதனால் வரும் இன்பத்தையும் அனுபவத்தையும் பெருக்கிக்கொள்ள முடியும். ஆதலால், நூல்களை உணர வேண்டும் என்று நினைக்கிறவர்கள், தவறாது மனப்பாடம் செய்து, இசையோடு சொல்லிப் பழகுவார்களாக. 'கோழை மிடறாக கவி கோளும் இலவாக இசை கூடும் வகையால்—ஏழை அடியா ரவர்கள் யாவை சொன்ன சொல் மகிழும் ஈசன்' அல்லவா?

இந்நூலிறுதியில் திருமுறைகளிலிருந்தும் சித்தாந்த சாத்திரங்களிலிருந்தும் தொகுத்த சில பாடல்கள் சேர்க்கப் பட்டுள்ளன. இவை நூலகத்துவரும் சமயக் கருத்துக்களை உரைக்கும் பாடல்களாகும்; சிறந்த பாடல்களைத் தொகுக் கும் நோக்கத்துடன் இவை திரட்டப் பெறவில்லை.

இந்து சமய விளக்கமாகப் பல நூல்கள் ஆங்கிலத்தில் வெளி வந்திருக்கின்றன; சமயக் கோட்பாடுகளுக்குட் புகுந்து பரிபாஷையைப் பெருக்காமல் பேருண்மைகளைச் சொல்லிய நூல்கள் பல. சைவம் பற்றி அவ்வாறு வெளி வந்த நூல்கள் மிகவும் குறைவு. யாழ்ப்பாணத்துப் பெரியார் எழுதிய சைவசமயம் என்ற ஆங்கில நூல் இங்கிலாந்தில் வெளியிடப்பட்டது. கதிரேசு என்பார் எழுதிய ஆங்கில நூல் சென்னையில் வெளியாயிற்று. தமிழில் வந்த நூல்கள் இன்னும் குறைவு. மேலையூர் சுவாமிகள் எழுதிய சைவ சமய அறிமுகம் சமீப காலத்தில் வெளியாயிற்று. இவை சமய தத்துவத்தையே பேசுபவை.

இப்போது வெளிவரும் இந்த நூல் இவ்வாறு தத்துவக் கருத்தினுள் அதிகம் புகாது எழுதப் பெற்றது. திருவருள் துணைசெய்தால், இதுவே ஆங்கிலத்தில் வெளியிட எண்ண முண்டு.

# சைவ சமயம் என்பது யாது?

உலகத்திலே வழங்கும் சமயங்கள் பல. அவை யாவும் காலத்துள் கட்டுப்பட்டு உள்ளன. சைவ சமயம் ஒன்று தான், சரித்திர காலத்தைக் கடந்து நின்று இன்றுவரை நிலவுவது. இது ஒரு காலத்தில் ஒருவரால் உண்டாக்கப் பட்டதன்று. இதன் வரலாற்றைப் பின்னே கூறுவோம்.

## புலால் உண்ணாமை

சைவம் என்ற சொல் மிகச் சிறந்த கருத்தைத் தன்னுள் அடக்கியுள்ளது; தமிழ்நாட்டில் உள்ள எல்லா மக்களுக்கும் —நகரம் நாட்டுப்புறம், படித்தவர் படிக்காதவர், மேல் வகுப்பு கீழ் வகுப்பு, ஏழை பணக்காரன், ஆடவர் பெண்டிர் என்ற வேற்றுமை எதுவுமின்றி—நன்கு தெரிந்த விரிந்த கருத்துடைய ஒரு சொல். சைவம் என்பது புலால் நீக்கிய வாழ்க்கை; அசைவம் என்பது புலால் உண்ணும் வாழ்க்கை. இதுவே பாமர மக்கள் நாவில் வழங்கும் சொல்லும் பொருளும். சமயத்தினுள் புகாமலே இப்படிப்பட்ட கருத்தை நாம் காண்கிறோம். சைவன் என்றால் பரம்பரையாக மாமிசம் உண்ணாதவன், ஆகவே அவன் உயர்ந்தவன் என்ற ஒரே கருத்து ஆழ்ந்து நிலைபெற்றிருக்கிறது. 'கொல்லான் புலாலை மறுத்தானைக் கை கூப்பி—எல்லா உலகும் தொழும்': தலை முறை தலைமுறையாகப் புலால் அறியாத சைவன் தொழத் தக்கவன், சைவம் தொழத் தக்கது. சைவம் என்ற சொல் லுக்கு ஏற்றம் தருவது இதனினும் வேறொன்றில்லை.

அன்றியும், எல்லோரும் வழிபடும் இறைவன் அருள் வடிவானவன்; அவனை அடைய எண்ணும் மனிதரும் அன்பு நிரம்பி அருள் வடிவாக வேண்டும். அந்த நிலையில் 'தன்

ஊன் பெருக்கத்திற்குத் தான் பிறிது ஊன் உண்பான்— எங்ஙனம் ஆளும் அருள்?' என்பது சிந்திக்க வேண்டும். இவன் புலாலே விடாத வரையில் ஒரு காலத்திலும் இறை நிலை அடையும் தகுதி பெற மாட்டான்.

புலால் உண்ணுமையை இந்திய மண்ணில் தோன்றிய எல்லாச் சமயங்களும் அனுதி காலமாக வற்புறுத்தி வந்திருக்கின்றன. ஒளி இருக்குமிடத்தில் இருள் இருப்பது போலவும், மெய்யைச் சூழ்ந்து பொய் பெருகுவது போலவும், சைவ உணவைச் சூழ்ந்து புலால் உணவும் வழங்கியே வந்திருக்கிறது. சைவ சமயத்தில் புலால் ஒழித்தலுக்குப் பெரும் சிறப்பு. புலால் ஒழிப்பதே சைவம் என்று மக்கள் கருதுவார்களேயானுல் அச் 'சைவம் எவ்வளவு எளிமையானது, ஆனுல் எவ்வளவு உயர்ந்த குறிக்கோளைக் கொண்டிருந்தது என்று நாம் நன்குணர்தல் வேண்டும். சைவ சமயத்தில் தான், புலால் ஒழித்தல் என்பது, சமயத்திலும் மொழியிலும் வாழ்க்கையிலும் இரண்டறக் கலந்துவிட்டது. இந்த ஒரு காரணம் பற்றி, புலால் உண்பவர்கள் சைவர்களை மிக மிக உயர்வாக நினைக்கின்றனர்.

### அன்பே சிவம்

புலால் மறுத்தல் என்று எதிர் மறையாகச் சொல்வதை உடன்பாட்டு முறையில் சொல்வதானுல், உயிர்களிடத்து அன்பு செய்தல் என்று சொல்லக் கூடும். சைவ மரபின்படி 'இலங்கும் உயிர் அனைத்தும் ஈசன் கோயில்.' ஈசன் வழிபாடு இரண்டு வகை. ஒன்று ஆலய வழிபாடு, மற்றொன்று எல்லா உயிர்களிடத்தும் அன்பு செலுத்துவதாகிய உயிர் வழிபாடு. ஆலயமும் உயிரும், முறையே படமாடும் கோயில் நடமாடும் கோயில் என்று திருமூலர் கூறுவார். இவ்விரண்டினுள் நடமாடும் கோயில் வழிபாடே சிறப்புடையது. 'எவ்

வுயிரும் நீங்காது உறையும் இறை சிவன் என்று—எவ்வுயிர்க்கும் அன்பாய் இரு' என்பது ஒரு சாத்திரம்.

உயிர்களுக்குள் உயர்வு தாழ்வு, சாதி பேதம் இல்லை. இதைப் பெரிய புராண நாயன்மார் வரலாறுகள் நன்கு விளக்கும். எந்தச் சமயத்துக்கும் இதற்கு ஒப்பான சிறந்த இலக்கணம் சொல்லுதல் அரிது.

அன்பே சிவம் என்று திருமூலர் இதைக் குறிப்பிட்டார். இறைவனுடைய அருங்குணங்களில் கருணை ஒன்று. இறைவனுடைய பெருங் கருணையே திருவருள் என்று சொல்லுகிறோம். இறைவனுடைய கருணை எல்லா உயிர்களையும் தழுவியது. அது போல, அன்பே சிவம் என்று சொல்லும்போது, மனிதன் உயிர்களிடத்துப் பூண்டொழுக வேண்டிய அன்பைச் சிவத் தன்மை என்று சொல்லுகிறோம். மனிதன் கடவுளிடத்துப் பக்தியோடு ஒழுகுவது மாத்திரம் அல்ல; எல்லா உயிர்களிடத்தும் பயன் கருதாத அன்பு பூண வேண்டியவன். மனிதன் காட்டுவது அன்பாகவும், கடவுள் காட்டுவது அருளாகவும் ஆகிறது; இதுவே சிவம்.

இந்தக் கருத்து இருபதாம் நூற்றாண்டிலும் பெரும் தத்துவமாக இருந்தமையை நாம் அறிவோம். மகாத்மா காந்தி தம் வாழ்க்கையில் தம்மை நெறிப் படுத்த அஹிம்சை, சத்தியம் என்ற இரு பெரும் தத்துவங்களைக் கொண்டிருந்தார். இரண்டையும் அவர் வெவ்வேறாகக் கருதவில்லை. ஒரு காசின் இரண்டு பக்கங்களாகவே அவர் கருதினார். அகிம்சையே அன்பாகும். அதிகம் வற்புறுத்தி அவர் சொல்லியது, சத்தியமே கடவுள் என்ற கருத்து. பல நூறு ஆண்டுகளுக்கு முன் அன்பே சிவம் என்று திருமூலர் கூறிய கருத்தும், இன்று சத்தியமே கடவுள் என்று மகாத்மா கூறிய கருத்தும், இவ்வாறு ஒன்றையொன்று நிறைவு செய்கின்றன என்பதை நன்கு காணலாம்.

## செம்மை தருவது

*சிவம் என்ற சொல், இன்று சிவபெருமான், சைவ சமயத்திற்கு மூலமான சிவ பரம்பொருள் என்ற கருத்தில் சிறப்பாக வழங்குகிறது. ஆனால் இதன் பொதுவான கருத்து, செம்மை அளிப்பது, மங்களத்தைத் தருவது என்ப தாகும். இப்பொருளில் இச்சொல் வேதத்தில் காணப் படுகிறது என்பர். இக்கருத்து ஒரு வகையில் சமயங் கடந்த ஓர் ஆனந்த நிலையைச் சுட்டியது போலும். மேலானது எதையும் சிவம் என்றே சொல்லி வந்தார்கள். 15ஆம் நூற்றுண்டு வரையில் கூட, வீட்டுலகு என்று குறிப்பிடும் போது சைன நூல்கள் சிவகதி என்றே சொல்லிவரக் காணலாம். தீதறு சிவகதி சேர்க யாம், அருளுளம் புரிகுவராயின் இருளறு சிவகதி எய்தலோ எளிதே, சிவகதிக்கு வேந்து என்பன போன்ற தொடர்கள் மிகப்பல. ஆதலால், சிவம் என்ற கருத்து, மேலான ஒரு செம்மையை, பேரின்ப நிலையைச் சுட்டியது என்று கருது வது பிழையாகாது. இதுவே சைவ சமயம் குறிக்கோளா கக் கொண்ட சிவத் தன்மையும் சிவ பரம் பொருளுமாகும்.*

## உலக சமயம்

*இனி சைவ சமயத்திற்கு ஆன்றோர்கள் சம்பிரதாய மாகச் சொல்லி வந்த இலக்கணமும் மிகவும் சிறப்பாய்க் கருதத் தக்கதாகும். சைவம் பிறரைப் பழிக்காதது, பிறரைக் குறை கூறுதது. ஊர் ஒன்று தான்; அதற்கு வழிகள் ஆறு உள; அறுவகைச் சமயங்களும் இறைவனை அடைவதற்கு வெவ்வேறு வழிகளாவன. பசுக்கள் பல வண்ணமாயிருப்பினும், அவற்றின்பால் ஒரே வண்ணமாய் இருப்பது போல, சமயங்கள் பலவாயினும் அவை கூறும் முடிவான பொருள் ஒன்றே—என்பன சைவ சாத்திரம் கூறும் கருத்துக்களிற் சில. விரிவிலா அறிவுடையவர்கள் புதிதாக ஒரு சமயத்தைப் பகையுணர்ச்சியால் தோற்றுவித்*

தாலும் கூட, அதுவும் எம்பிரானுக்கு ஏற்றதாகும் என்பர் அப்பர் சுவாமிகள். அறுவகைச் சமயத்தோர்க்கும் அவ்வவர் பொருளாயிருப்பதோடு, இறைவன் அவற்றைக் கடந்து அப்பாலான தன்மையுடையவனுமிருக்கிறுன். "உலகிலுள்ள சமயங்களும் அவற்றில் கூறப்படும் தத்துவங்களும் அவற்றின் ஆதார நூல்களும் தம்மில் பெரிதும் முரண்பட்டுள்ளன. இருப்பினும் எந்த ஒரு சமயமானது, இது தான் சமயம், இது தான் பொருள், இது தான் நூல், வேறென்றும் அல்ல என்று உரைத்துப் பிறவற்றைத் திட்டவட்டமாய் மறுக்கிறதோ அது சமயமுமல்ல, பொருளுமல்ல, நூலுமல்ல ; எது இவ்வேறுபாடுகளை யெல்லாம் தனக்குள் ளடக்கி ஒற்றுமை காண முயல்கிறதோ அதுவே சமயம், பொருள், நூல்; சைவம் இவ்வாறு காண முயல்கிறது" என்று சைவ சாத்திரம் கூறுகிறது.

சைவத்தின் மற்றொரு தனிச்சிறப்பு, சைவம் பெண் குலத்துக்குத் தரும் பெருமை. கடவுள் படைப்பில் எல்லாம் சமம் என்ற கருத்துடைமையால், பெண்ணுக்குப் பெண்பால் என்ற காரணத்தினுல் எவ்விதக் குறைபாடும் இல்லை. நாயன்மார் வரலாறுகள் இதை நன்கு விளக்கும். சைன சமயத்தில் பெண்ணுக்கு முத்திநிலை எய்துவதற்கான உரிமை இல்லை. மற்று, அடுத்த பிறவியிலேனும் ஆணுய்ப் பிறந்து தான் அவள் முத்திநிலை பெறுவதற்கான யோக்கியதை அடைகிறுள் என்பது சைனர் கூற்று. ஆனுல் இந்து மதத்தின் மற்றெல்லாப் பிரிவுகளும், சிறப்பாகச் சைவ சமயமும், பெண்ணுக்குச் சமயத் துறையில் எல்லா உரிமைகளும் அளித்துள்ளன.

### சைவத்தின் தொன்மை

இனி, சைவ சமயத்தின் தோற்றுவாயை அறிய நாம் முயல்வோமாயின், நம் முயற்சி, இந்தியா இந்து மதம் என்ற பெயர்களுக்கும் முற்பட்ட காலத்துக்குச் செல்ல வேண்டும்.

நாம் வசிக்கும் நாடு இந்திய நாடு. இதற்கு இந்தியா என்ற பெயர் வந்த கதையே விநோதமானது. வடமேற்கிலிருந்து வந்தவர்கள், சிந்து நதிக்குக் கிழக்கே வாழ்ந்த மக்கள் எல்லாம் சிந்துக்கள் என்று பெயரிட்டார்கள். நாளடைவில் இது ஹிந்து என்றாயிற்று; இவர்கள் மதம் ஹிந்து மதம் ஆயிற்று; இவர்கள் வாழ்ந்த நாடு இந்திய நாடு. இப்படியாக இப் பெயர்கள் எல்லாம் அன்னியர் வைத்த பெயர்களே. இவர்கள் புதிதாய் ஹிந்து மதம் என்று பெயரிட்டது, இவர்கள் வருமுன்னமே இந்நாட்டில் நிலவிய தெய்வக்கொள்கைக்கே.

வடமொழி இந்தியாவுக்கு வருமுன்னமே தமிழ் மக்கள் இந்தியாவின் பல பாகங்ளிலும் வாழ்ந்து வந்தார்கள். இயற்கையில் நிலம் அமைந்திருந்த முறையை ஒட்டி ஆங்காங்கு வாழ்ந்த மக்களையும் அவர்களுடைய ஒழுக்கத்தையும் அவ்வப் பகுதிகளுக்குரிய தெய்வத்தையும் ஒழுங்குபடுத்திக் கொண்டிருந்தார்கள். நிலமும் ஒழுக்கமும் மலை—குறிஞ்சி எனவும், காடு—முல்லை எனவும், வயல்—மருதம் எனவும், கடற்கரை—நெய்தல் எனவும், வறண்ட சுரம்—பாலை எனவும், இவற்றிற்குத் தெய்வங்கள் முறையே முருகன், திருமால், இந்திரன், வருணன், கொற்றவை எனவும், அமைத்துக் கொண்டிருந்தார்கள். இவ்வமைப்பு, பல்லாயிரம் ஆண்டுகளாக, கற்றோரிடையிலாவது வழங்கி வந்தது என்பது மறுக்க முடியாத உண்மை.

இந்தத் தெய்வங்களுக்கு மேலாக ஒரு பரம்பொருள் இருந்தது என்ற உண்மையை எல்லோரும் அறிந்திருந்தார்கள். அப்பரம் பொருளுக்கு அவர்கள் குறிப்பிட்டிருந்த பெயர் இன்னதென்று தெரியாவிட்டாலும், ஆலமர் செல்வன், நீலமணி மிடற்று ஒருவன் என்பன போன்ற தொடர்களால் மிக்க பழங்காலத்திலேயே சிவபரம்பொருள் குறிப்பிடப் பட்டிருந்தது என்று அறிகிறோம்.

இவ்வாறு சுட்டப்பட்ட பொருளே சிவம், இவ்வாறு பொதுப்பட நிலவிய கடவுள் கொள்கையே சைவம் என்பது தெளிவு. இதுவே பெயர் அறியாத அன்னியரால் ஹிந்து மதம் என்று புதிய பெயரிடப் பெற்றது. மேலே குறிப் பிடப்பட்ட முருகன் திருமால் முதலிய தெய்வ வழிபாடுகள் காலக்கிரமத்தில் பல பிரிவுகளாகத் தனித் தனியே பிரிந்து போயின. இவை யாவும் சேர்ந்ததே ஹிந்து மதம் என்ற கருத்துப் பின்னர் நிலவலாயிற்று. உண்மையில், இவை யாவும், வரையறை செய்யப் பெருத சைவ சமயம் என்ற அனுதியாக உள்ள ஒரு சமயத்தில் பிற்காலத்தெழுந்த பிரிவுகள் என்று கொள்வதே பொருத்தமாகும்.

சிந்து வெளியில் அகழ்ந்து புதை பொருளை ஆராய்ந்து கண்ட ஆராய்ச்சியாளர், ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே இந்நாட்டில் பரவியிருந்த புராதன நாகரிகத்தில் இலிங்க வழிபாடும், சிவபெருமானுடைய வாகனமாகிய இடபமும் இருந்தமை தெரிய வருகிறது என்று சொல்லுகிருர்கள். இச் செய்திகள், இந்திய நாட்டின் புராதன சமயம் சைவ சமயமே, பெயர் தெரியாமையால் இதற்குப் பிற்காலத்தில் இந்து சமயம் என்று அன்னியர் பெயர் வைத்தார்கள் என்ற கொள்கைக்கு ஆதரவு தருகின்றன.

தமிழ் நாட்டில் அனுதி காலம் தொடங்கி நிலவிய சமயம் சைவ சமயமே, ஏனையவை யாவும் பின்னுல் இணைந்தவை என்றக் கருத்தைத் தெளிவாக உணர்வதற்கு இரண்டு கருத்துக்கள் இங்குக் குறிப்பிட முடியும்.

ஒன்று, தமிழ்நாட்டில் அன்றும் இன்றும் உள்ள பல்லாயிரக்கணக்கான கோயில்கள் சிவன் கோயில்களே. பிற சமயக் கோயில்கள் மிகச் சிலவே. எனவே, நாட்டில் பழைய பொதுச் சமயம் சைவம் என்பது தேற்றம். மற்றக் குறிப்பு, இந்த நாட்டில் சைவம் ஒரு சமயமே பிற சமயத் தினரைத் தன் கூட்டத்துள் சேர்க்க முயலாதது. காரணம்

வெளிப்படை. ஆதி காலத்தில் நாட்டிலிருந்த சமயம் சைவம் ஒன்றுதான். ஆகவே, பிறர் என்ற சொல்லுக்கு அங்கு இடமில்லை. சுமார் இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன் சைனமும், பௌத்தமும் தோன்றின. இச்சமயங்கள் புதிதாக உண்டாகி வளர்ந்தபோது, இவற்றுள் சென்று சேர்ந்தவர்கள் யாவரும் சைவத்திலிருந்து சேர்ந்தவர்களே. சமணத்தின் கொடுமை அதிகமான காலத்தில் திருஞான சம்பந்தர் தோன்றிச் சமணக் குறும்பை அடக்கினர்; மத மாற்றம் என்றுமே சைவத்தின் நோக்கமாக இருந்ததில்லை. இராமானுசர் திருமண்ணளித்து வைணவராக்கிய மக்கள் யாவரும், அவர்கள் எக்குலத்தவராயினும், சைவராய் இருந்தவர்களே. பிற்காலத்தில் கத்தியைக் காட்டியும் பணத்தைக் காட்டியும் பதவியைத் தந்தும், வேறு வகையிலும் செய்த மாற்றங்கள் யாவும் சைவத்திலிருந்து செய்யப்பெற்றவையே. இவற்றால் சைவம் ஒன்றே இந்நாட்டில் நிலவிய தாய்ச்சமயம் என்பதை நன்குணரலாம்.

சைவத்தின் பழமையைக் குறிப்பிட மற்றுமொரு குறிப்பும் தரமுடியும். சங்க நூல்களில் காணும் மதுரை வெள்ளியம்பலத்தைப் பற்றிய குறிப்பு அதன் பழமையை உணர்த்தும். அதற்கு முன்னதாகத் தில்லைப் பொன்னம்பலம் இருந்ததனால் தான் வெள்ளியம்பலம் புதியதாக ஏற்பட்டது. அன்றியும், கோச்செங்கட் சோழர் எழுபத்தெட்டு மாடக் கோயில்கள் கட்டினர் என்பது அப்பர் சுவாமிகளுடைய தேவாரக் குறிப்பு. திருமங்கையாழ்வார் இச்சோழர் கட்டிய திருநறையூர் மணிமாடம் என்ற திருமால் ஆலயத்தைக் குறிப்பிடும் போது, அவர் சிவபெருமானுக்கு எழுபது மாடக் கோயில்கள் கட்டினர் என்பதைக் குறிப்பிடுகிறார். "இருக்கு இலங்கு திருமொழிவாய் எண் தோள் ஈசற்கு, எழில்மாடம் எழுபது செய்து உலகம் ஆண்ட—திருக்குலத்து வளச் சோழன் செய்த கோயில், திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே" என்பது அவர் பாசுரம். இக்கோயில்கள் யானை

புகமுடியாத அமைப்புடையன. எனினும், யாவும் பெருங் கோயில்கள். இச்சோழ மன்னருடைய வரலாறு சங்க நூல் களில் பயில்கிறது. இவர் கி. பி. இரண்டாம் நூற்றாண்டுக்கு முன் வாழ்ந்தவர்; அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவ ராயும் இவர் போற்றப் பெற்றுள்ளார். இவர் கட்டியவை கற்கோயில்கள்; அவற்றுக்கு முன் இருந்தவை செங்கற் கோயில்கள். அவற்றுக்கு முன் மண்ணால் கட்டிய கோயில் களும் மரத்தால் கட்டிய கோயில்களும் இருந்தன என்றால் சைவக் கோயில்கள் எவ்வளவு பழமையானவை என்பதை நாம் ஒருவாறு யூகிக்க முடியும். தமிழ்நாட்டின் (இந்திய நாட்டின்) ஆதிச் சமயம் சைவமே என்று இதிலிருந்து நன் குணரலாம்.

## சைவ தத்துவம்

மேலை நாட்டு முறைப்படி, தத்துவ சாஸ்திரம் வேறு, சமயம் வேறு. சமயம் என்பது இறைவன் உள்நின்று உணர்த்துவது; தத்துவ சாத்திரம் என்பது பகுத்தறிவினால் தர்க்க ரீதியாக ஆராய்ந்து காண்பது. உலகத்தில் காணும் துன்பங்களிலிருந்து தப்ப எல்லோரும் எண்ணுகிறார்கள். இப்படித் தப்புவதற்கான முயற்சி தர்க்க ரீதியாக நடை பெறும்போது, தத்துவ ஆராய்ச்சியாக அது வளர்ந்து, சமயத்தில் போய் முடிகிறது.

இந்திய மண்ணின் சிறப்பு, இவ்விரண்டும் ஒன்றாக இணைந்திருப்பது. இந்த இணைப்பினால்தான், தத்துவ ஆராய்ச்சி வறட்டு வேதாந்தம் ஆகாமலும், சமய உணர்ச்சி மூடநம்பிக்கையாகப் போகாமலும், உள்ளன. பிற மதங்கள் வாழ்க்கை முழுவதும் பாவமே நிறைந்தது என்று சொல்ல, இந்திய சமயங்கள் மட்டுமே பாவம் அல்லது தீமையைப் பொருளாகச் சொல்லவில்லை. வாழ்க்கை நிலையற்றது, அது தரும் இன்பம் நிலையற்றது, ஆகவே, அழிகிற வாழ்க்கையை விட்டு, நிலைத்த இன்பத்தை, அறிவு பெற்ற மனிதன் தேட

வேண்டும் என்று இவை உபதேசிக்கின்றன. இதனால் நிலையற்ற வாழ்வில் ஒரு தருமத்தையும் நியாயத்தையும் கடைப்பிடிக்க வேண்டும் என்ற கொள்கை நிலவுகிறது. இதன் பயனாக, இந்து சமயமும் சைவ சமயமும் வெறும் சமயங்கள் மாத்திரமல்ல, வாழ்க்கை வாழ்வதற்கான ஒரு வாழ்க்கை முறையுமாகின்றன. உபநிடதங்களும் சமயாசாரியர்களும் ஒரே கருத்தைச் சொல்கிறார்கள். அதாவது, சத்தியம் என்பது ஒன்று; இதைப் பலர் பல கோணங்களிலிருந்து காண்பார்கள்; பார்வைக்கு வெவ்வேறாக இருப்பினும், இவை யாவும் ஒரே பொருளில் போய் முடிகின்றன என்பதே அவற்றின் சாரம்.

புலால் ஒழித்தவர் சைவர் என்ற ஒரு கருத்தைக் குறிப்பிட்டோம். இது உலக வழக்கில் இருந்த போதிலுங்கூட, சிவனையே பரம்பொருளாகக் கொண்டவர் சைவர் என்ற கருத்தை இங்கு வலியுறுத்திச் சொல்ல வேண்டும். சைவர் என்ற சொல் ஒரு சாதியாரைக் குறிப்பதன்று. விஷ்ணுவை வழிபடுபவர் வைணவர் என்பதுபோல. சிவபெருமானை வழிபடுபவர் சைவர். வேதியச் சிறுவரான சம்பந்தரும் அவர் திருக்கூட்டத்தில் யாழ் வாசித்த பாணரான நீலகண்டரும் சைவரே. நந்தனாரும் தில்லைவாழ் அந்தணரும் சைவரே. இன்றைய உலக வழக்கில் சைவர் என்ற சொல் ஒரு சாதியாரைக் குறிக்க வழங்குகிறது; அவராவார் வேளாளர் என்ற பிரிவில் பரம்பரையாகப் புலால் உணவு உண்ணாதவர்கள். தமிழ்நாடு முழுமையும் இவ்வழக்கு உண்டு. இது சைவம் என்ற சமயத்தின் விரிந்த பொருளையும், அச்சமய ஒழுக்கத்தில் அன்பு நெறியின் வெளிப்பாடாகிய புலால் நீத்தலுக்கு உள்ள சிறப்பையும் புலப்படுத்துவதாகும்.

சைவ சமயத்தின் அடிப்படைத் தத்துவங்களைச் சுருக்கிச் சொல்லி இப் பகுதியை முடிப்போம். இறைவன் ஒருவனே. அவன் சிவன் என்னும் பெயருடையவன். படைத்தல்,

காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களையும், உயிர்களிடத்துப் பிறந்த கருணையால் தன்னிலும் வேறல்லாத சக்தி மூலமாக அவ்விறைவன் நடத்துகிறான். உயிர்கள் பல. புல் பூண்டு முதல் மனித வர்க்கம் வரையில் எல்லாம் உயிர்களே. உயிர்கள் தங்கள் தங்கள் வினைக்கு ஈடாக உலகில் பிறந்து இறந்து உழல்கின்றன. வினை செய்யும்போது புண்ணிய பாவம் விளைகிறது; மீண்டும் மீண்டும் பிறப்பும் இறப்பும் ஏற்படுகின்றன. தன் சிற்றறிவு குறைந்து இறையறிவு சிறிதே விளக்கம் பெற்ற ஆன்மா, திருவருளைப் பெற வேண்டும் என்ற உணர்வோடு, செய்யும் கருமத்தைச் சிவன் பணி என்றே செய்து, வினையும் பயனில் பற்றின்றி வாழ்ந்து, சிவனடியாரோடு உறவு பூண்டு, சிவாலயத்தில் இறைவன் திருவடிவை வழிபட்டு வந்தால், உரிய காலத்தில் இருவினைகளும் அனுபவித்துக் கழியும். அடியார் சேவையும் சிவலிங்க வழிபாடும், வினைவந்து பற்றாதபடி காக்கும். மாயை நீங்கவே, யான் எனது என்னும் ஆணவ முனைப்பும் பரிபாகமடையும். அப்போது அவ்வான்மாவினிடத்துத் திருவருள் பதிதலாகிய சத்தி நிபாதம் ஏற்படும். இதன்பின் கரணங்களெல்லாம் சிவகரணங்களாகவும், ஆன்ம போதம் நீங்கிச் சிவபோதமாகவும் மாற, செயல்களெல்லாம் சிவன்செயல்களாகச் செய்து, உரிய காலத்தில் உடலை விட்டு உயிர் நீங்கவே, உயிரானது மீண்டு வாராத முத்திப் பேறு அடையும்.

# சைவ சாத்திரங்கள்

பொதுவாக இந்திய நாட்டில், இலக்கியமெல்லாம் தெய்வ சம்பந்தம் உடையது. நூலின் பயன் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப் பொருள்கள் நான்கையும் உணர்த்தவேண்டும் என்பது ஆன்றோர் கருத்து. இந் நான்கில் முடிவாகிய வீடு சிறப்பானது. முத்திப்பேறு என்ற நிலைக்குச் செலுத்துவதாகிய இறை வழிபாடு எல்லா நூல் களிலும் சொல்லப்பட்டுள்ளது. இந்த நூற்றாண்டின் தொடக்கம் வரையில் எல்லா நூல்களுக்கும் வாழ்க்கைக் குமே, இதுவே முதன்மையான குறிக்கோள். ஆதலால் எல்லா நூல்களிலும், சமயமும் சமய தத்துவமும் பின்னி யிருத்தல் வியப்பன்று.

## வேதம்

இந்திய மண்ணில் தோன்றிய இந்து சமயப் பிரிவுகள் அனைத்துக்கும் மூலநூல் வேதம். வேதம் நெடுங்காலமாகக் 'கேட்டல்' வழி வந்தது. ஆதலால் சுருதி என்பது பெயர். (சுருதி-கேட்கப்படுவது.) வேதங்கள் ஒருவரால் செய்யப் பட்டவை அல்ல ; இறைவனால் ஞானிகளுக்கு உணர்த்தப் பெற்றவை. வேதங்கள் நித்தியமானவை. இறை உண் மையைக் கண்டவர் ரிஷி எனப்பட்டார். வேதம் என்ற சொல்லுக்கு ஞானம் என்பதே பொருள். வேதங்கள் நான்கு-இருக்கு, யஜுஸ், சாமம், அதர்வணம் என்பன. நான் கினுள் மிகவும் பழமையானது இருக்கு ; அது மந்திர ரூப மானது. காலத்தால் மிகவும் பிற்பட்டது, அதர்வணம். இதில் பலதிறப்பட்ட கோட்பாடுகளும் உபாசனைகளும் கலந்துள்ளன ; பொதுவாக வேதத்தைக் குறிப்பிடும்போது, முதல் மூன்றுமே பொருளாகும்.

ஒவ்வொரு வேதத்திலும் நான்கு பாகங்கள் உள்ளன— மந்திரம், பிராம்மணம், ஆரண்யகம், உபநிஷத் என மந்திரம் என்ற பகுதி, வேத தெய்வங்களைத் துதிப்பது. இது வாழ்க்கையில் சுகமும் செல்வமும் பெறுவதை நோக்கமாய்க் கொண்டது. பிராம்மணம் என்ற பகுதி அக்காலத்துக் கொண்ட தெய்வங்களைப் பிரீதி செய்வதற்காக எழுந்த யாகக் கிரியைகளைச் சொல்வதாகும். ஆரண்யகம் என்ற பகுதி, அக்கிரியைகளுக்குத் தத்துவார்த்தங்களை விளக்குவ தாகும். முடிவான பகுதியாகிய உபநிடதம் என்பது, இறை உண்மையை உணர்த்தும் பகுதி. உபநிஷதம் என்ற சொல் அருகில் இருத்தல் என்று பொருள்படும்; ஆகவே, அருகி லிருந்து பெறும் உண்மை உபதேசம் என்பது கருத்து. இந்து சமயத் தத்துவங்கள் அனைத்திற்கும் உபநிடதமே பூரண அடிப்படை. உபநிடதம் வேதத்தின் அந்தமானபடி யால், வேதாந்தம் எனப்படும்.

உபநிடதங்கள் எண்ணற்றன, நூற்றெட்டு என்ற மரபும் உண்டு. அவற்றுள் சிறப்பானவை ஆதிசங்கரர் விளக்கவுரை செய்த பன்னிரண்டும் ஆகும். அவை ஈச, கேன, கட, பிரசின, முண்டக, மாண்டூக்கிய, ஐதரேய, தைத்திரீய, சாந்தோக்கிய, பிருகதாரண்யக, கௌசீதகி, சுவேதாசுவதரம் என்பன. இவற்றுள் இறுதியான சுவேதாசுவதரம் ஒன்றே சைவ சித்தாந்திகளுக்கு உடன் பாடு. ஏனையவை ஏற்ற பெற்றி கொள்ளப்படுமேயன்றி, பொருள் வகையில் முழுமையும் கொள்ளப்படா.

வேதாந்தம் சைவத்துக்கு உடன்பாடு; சைவ சித் தாந்தம் வேதாந்தத்தின் தெளிவு என்று தன்னைக் கூறிக் கொள்ளும்.

வேதங்களைச் சைவ சமயம் கொள்ளும்போது, ஒரு வரையறைக்கு உட்பட்டே கொள்ளுகிறது. வேதத்தில் மூன்று காண்டங்கள் சொல்லப்படும்—அவை கர்ம காண்டம்,

உபாசனு காண்டம், ஞானகாண்டம் என்பன. "சைவன் வேதத்தைக் கொள்ளும்போது, கர்ம காண்டத்தில் காம்யார்த்தமான கருமங்களைக் கொண்ட பகுதியையும், உபாசனு காண்டத்தில் பஞ்சாக்கரத்துக்கு மாறுன வேறு வித்தைகளைக் கூறும் பகுதியையும், ஞானகாண்டத்தில் சீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் ஐக்கியம் கூறும் பகுதியையும் விலக்க வேண்டியவன்" என்பது சைவசாத்திரம்.

சைவ மக்களுக்கு ஸ்மிருதிகள் ஆதார சாத்திரங்கள் அல்ல. இவை ஆரிய-தமிழ்க் கலப்பு ஏற்படாத காலத்தில் வாழ்ந்த மக்களுக்குப் பொருந்துவன ஆகலாம். சைவ்ராகிய தமிழ் மக்களுடைய கலப்பு ஏற்பட்ட பிறகு, ஸ்மிருதி கூறும் சட்டதிட்டங்கள் சிறிதும் பொருந்துவன அல்ல; சைவன் இவற்றின் ஆட்சியை ஒப்புக்கொண்டவன் அல்லன்.

## ஆகமம்

வேதங்களைப் போலவும், இன்னும் சிறப்பாகவும், சைவ சமயம் கொள்ளுகின்ற மூல நூல்கள் சைவாகமங்கள் எனப்படும். சைவ மூலாகமங்கள் 28. இவைகளே சிறப்புப் பிரமாண சைவ சாத்திரங்கள். இவற்றின் உபாகமங்கள் 207. அவையும் கொள்ளப்படும். ஆகமங்களுக்குச் சிவாசாரியர் பலர் விரிவுரை எழுதியுள்ளனர். சைவர்களுக்கு, வேதம் பொது, ஆகமம் சிறப்பு நூலாகும்.

சைவாகமங்கள் நான்கு பிரிவுகளைக் கொண்டிருக்கும். இவை வித்தியா பாதம்(ஞானபாதம்), கிரியா பாதம், யோக பாதம், சரியாபாதம் என்பன. வித்தியா பாதமானது, கடவுள் உயிர் உலகு என்பனவற்றையும், பாச இலக்கணத்தையும் விளங்கக்கூறி, ஆன்மா பாசங்களினின்றும் விடுபடச் செய்வதற்கான சாதனை முறைகளையும் உணர்த்தும். கிரியா பாதம், ஆன்மார்த்தம், பரார்த்தம், நித்தியம், நைமித்திகம் ஆகிய பூசைகளையும், ஆலயப் பிரதிட்டை, விழா முதலிய

முறைகளையும் விளக்கமாய்க் கூறும்; உருவச் சிற்பம், கட்டிடச்சிற்பம், நடனம் முதலிய கலைகளுக்கு மூலம் ஆகமமே. யோக பாதம் அட்டாங்க யோகத்தையும் பிராசாத யோகத்தையும் விளக்கிக்கூறும். அட்டாங்க யோகம் எல்லா இந்துச் சமயங்களுக்கும் பொது. இப் பிராசாத யோகம் சைவ சமயத்துக்கே உரியது; இதுபற்றி வடமொழியிலும், தமிழிலும் அனேக சாத்திர நூல்கள் உள்ளன. சரியா பாதம், சைவருடைய நித்தியகரும விதிகளைக் கூறும்.

பிற்காலத்தில் சிவாசாரியர் பலர் சைவ சமயக் கருத்துக்களில் சில தனிப் பகுதிகளை விளக்கி வடமொழியில் அஷ்டப் பிரகரணம் முதலான சில தனி நூல்கள் செய்தார்கள். இவைகளும் சைவத்துக்கு ஆதார நூல்கள் என்று கருதப்படும். அப்படியே, சிவாசாரியர் பலர் செய்த பத்ததிகள் (வடமொழி) சைவச்சடங்குகளுக்கு ஆதார நூல்கள்.

**பிரம்ம சூத்திரம்**

வியாசர் தொகுத்த பிரம்ம சூத்திரங்கள் எல்லா இந்து சமயங்களுக்கும் மூலாதாரம். இவற்றுக்கு ஆசாரியர் செய்த பாஷ்யங்களை ஒட்டிச் சமயக்கருத்துகள் வேறுபட்டும் மாறுபட்டும் வந்துள்ளன. சங்கரர், இராமானுசர், மத்துவர் ஆகியோர் செய்த பாஷ்யங்களை ஒட்டி, இவர்கள் பெயரால் வெவ்வேறு சமயப் பிரிவுகள் ஏற்பட்டன. நீலகண்ட சிவாசாரியர் தம் பெயரால் ஒரு பாஷ்யம் செய்தார். அதில் பெரும் பகுதி சைவமக்கள் கொள்வார்கள்; சிவ சமமாகச் சொல்லுகின்ற பகுதியைக் கொள்ளமாட்டார்கள். பிற சமயங்கள்—சங்கரருடைய அத்துவைதம், இராமானுசருடைய விசிஷ்டாத்துவைதம், மத்துவருடைய துவைதம் என்பன—மேற்குறித்த ஆசிரியர்களால் வகுக்கப் பெற்றவை. சைவ சமயம் அவ்வாறு வகுக்கப்பெறவில்லை; இது அநாதியானது; மனிதரால் உண்டாக்கப் பெற்றதன்று.

உபநிடதக் கொள்கைக்கும் பிரம்ம சூத்திரக் கொள்கைக்கும் வேறுபாடு உண்டு என்று ஆராய்ச்சியாளர் கூறுவர். பிரம்ம சூத்திரம் செய்தவர் வாதராயணர் என்பர்.

அத்துவைத மரபில், உபநிடதம், பிரம்மசூத்திரம், பகவத்கீதை ஆகிய மூன்றும் பிரஸ்தானத்திரயம் எனப்படும்; இவை சமயக் கொள்கைகள் அனைத்துக்கும் அடிப்படை என்று கருதப்படும். சங்கரர், இராமானுசர், மத்துவர் ஆகிய மூவருமே இவ்வாறு கொண்டனர். சைவ சமயமானது, முன்கூறிய வரையறைகளுக்குட்பட்டு, உபநிடதம், பிரம்ம சூத்திரம் இரண்டையும் கொள்ளும்; பகவத்கீதையைக் கொள்ளாது.

## புராண இதிகாசம்

இனி, இந்து சமயத்தில் சம்பிரதாயமாகச் சொல்லுகின்ற புராண இதிகாசங்கள், சைவத்திலும் ஏற்றுக் கொள்ளப் படுவன. பதினெண் புராணங்களில் சைவ புராணங்கள் பத்து. அவை சைவம், ஸ்காந்தம், லிங்கம், கூர்மம், வாமனம், வராகம், பவிஷ்யம், மச்சம், மார்க்கண்டேயம், பிரமாண்டம் என்பன. சிலவே முழுமையும் தமிழில் உள்ளன. அதிகமாக ஆட்சியில் உள்ளது ஸ்காந்த மகா புராணம். ஸ்காந்தத்தின் பகுதியான சூத சங்கிதை சைவர்களுக்கு மிகவும் சிறப்பானது. இது வட மொழியில் 5000 சுலோகங்களுடையது. இதை ஆதி சங்கரர் பதினெட்டு முறை ஓதிய பிறகே பிரம்ம சூத்திர பாஷ்யம் செய்யத் தொடங்கினர் என்று ஆன்றோர் கூறுவர். இக்கூற்று இந்நூலின் சிறப்பை நன்குணர்த்தும். பிற்காலத்தில் மிகப் பலவான புராணங்கள் தமிழில் செய்யப்பட்டன. இவற்றுள் எல்லாச் சிறப்பும் வாய்ந்தவை கச்சியப்ப சிவாசாரியர் செய்த கந்தபுராணமும் பரஞ்சோதி முனிவர் செய்த திருவிளையாடற் புராணமும் ஆகும். பெரிய புராணம் பெயரளவில் புராணம் என்று அமைந்து இருப்பினும், சிவனடியார்

வரலாறு கூறுவது; ஒரு திருமுறையாகக் கொள்ளப்பட்டது. இது பற்றிப் பின்னே கூறுவோம்.

[மச்சபுராணம், கூர்மபுராணம், இலிங்கபுராணம், வாயு சங்கிதை, காசிகண்டம், பிரமோத்தர காண்டம், உபதேச காண்டம் போன்றன சிவசரித்திரம் கூறும் இதிகாசங்களாகவும் சிவ புண்ணியம் காண்டம் முதலான புராணங்கள் கூறும் சாத்திரங்களாகவும் செய்யுள் வடிவில் எழுதப்பட்ட பெருநூல்கள். விரிவஞ்சி இத்தகைய தமிழ் நூல்களை மேற் குறிப்பிட்ட வரிசையில் சேர்க்கவில்லை.]

இராமாயண மகாபாரத பாகவதங்கள், இதிகாசங்கள் என்ற அளவில் இந்திய மக்கள் அனைவருக்கும் பொது என்பது உண்மை. இவை, சமய இதிகாசம் என்று பேசும் போது, சைவர்களுக்கு நூல்களாகா; சிவ மகாபுராணம், ஸ்காந்தம், சிவ ரகசியம் ஆகியனவே சைவ இதிகாசங் களாகும்.

## திருமுறை—தமிழ் வேதம்

மேற் கூறியவற்றுள் கண்ட தமிழ்ப் புராணங்கள் தவிர ஏனையவை யாவும் வடமொழி ஆதார நூல்கள். தமிழில் தோன்றிய தேவாரம் முதலிய நூல்கள் தமிழ் வேதம் எனப் படும். மூல வேதங்களை அறிந்தவர் அரியர். ஆனால் இத் தமிழ் வேதங்களே, தோன்றிய நாள் முதல் சைவ மக்களை நன்னெறிப் படுத்த உறுதுணையாய் இருந்து வந்திருக் கின்றன. இன்றும் இருந்து வருகின்றன.

தேவாரம் போன்ற அருட் பாசுரங்களுக்குச் சைவத் திருமுறைகள் என்ற பெயர் ஏற்பட்டது. சைவப் பெரியார் செய்த அருட் பாசுரங்களைப் பன்னிரண்டு புத்தகங்களாகத் தொகுத்தார்கள். ஒவ்வொரு புத்தகமும் திருமுறை எனப் படும். தேவாரம் என்பது சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய மூன்று நாயன்மாரும் தலங்கள் தோறும் சென்று பாடின

பாடல்களின் தொகுப்பு. பத்துப் பாடல்கள் கொண்டது பதிகம் எனப்படும் இன்று கிடைப்பன, சம்பந்தர் பாடிய பதிகங்கள் 384; பாடல்கள் 4147; இவை திருமுறை 1, 2, 3. அப்பர் பாடிய பதிகங்கள் 312; பாடல்கள் 3066; இவை திருமுறை 4, 5, 6. சுந்தரர் பாடிய பதிகங்கள் 100; பாடல்கள் 1026. இவை ஏழாம் திருமுறை. மாணிக்க வாசகர் பாடிய திருவாசகமும், அவர் பாடியதாக வழங்கும் திருக்கோவை யாரும் எட்டாந் திருமுறை; பாடல்கள் 1056. திருமாளிகைத் தேவர் முதலான அடியவர் ஒன்பது பேர் பாடிய திருவிசைப் பாவும் திருப்பல்லாண்டும் ஒன்பதாம் திருமுறை; பதிகங்கள் 29, பாடல்கள் 301. திருமூலர் பாடிய திருமந்திரம் பத்தாம் திருமுறை; இதனுள் 3047 பாடல்கள் உள்ளன. இறையனுர் அருளிய திருமுகப் பாசுரம் தொடங்கி நம்பியாண்டார் நம்பி எழுதிய பதிகங்கள் இறுதியாக, பன்னிரு ஆசிரியர் செய்த 1400 பாடல்கள் கொண்ட 40 நூல்கள் பதினெராந் திரு முறை எனப்படும். சிவனடியார்களின் சரித்திரங்களை விரித்துச் சேக்கிழார் பாடிய திருத் தொண்டர் புராணம் என்பது, தன் பெருமையால் பெரிய புராணம் எனப் பெயர் பெற்றுப் பன்னிரண்டாம் திருமுறையாகத் தொகுக்கப் பெற்றது; இதன் பாடல்கள் 4286.

## மெய்கண்ட சாத்திரம்

இதுவரையில் சொல்லப்பட்ட திருமுறைகள் பெரிய புராணம் நீங்கலாக, தோத்திர நூல்களாகும். இவை சைவ சமயக் கருத்துக்களை ஆங்காங்கே உள்ளடக்கிக் கூறு கின்றன. தேவார திருவாசகங்களில் கடவுள், உயிர், உலகு பற்றிச் சொல்லப்பட்டுள்ள அடிப்படைக் கருத்துக்கள் சைவ சித்தாந்தக் கருத்துக்கள் எனப்படும். இவை சில நூற்றுண்டு களின் பின் தனியே எடுத்துச் சாரமாக மெய்கண்டாரால் உரைக்கப்பட்டன. இவர் செய்த சிறு நூல் நாற்பது வரிகள் கொண்ட பன்னிரண்டு நூற்பாக்களால் ஆனது. இதுவே

சிவஞான போதம் என்று பெயர் பெறும். இப் பன்னிரண்டு சூத்திரங்களும், பொது உண்மை என்ற பிரிவுகளாய், பிரமாண இயல், இலக்கணவியல், சாதன இயல், பயனியல் என்ற நான்கு பகுதிகளாக அமைந்துள்ளன. இவை முறையே இறை நிலையையும் உலகின் நிலையையும் உயிரின் நிலையையும் கூறி, உயிர், உலகாகிய பாசத்தின் நீங்கி, உடையவனாகிய இறைவனின் நிலையை அடைவதற்கான சாதனையை விளக்குகின்றன. சூத்திரங்களின் கருத்தை 81 உதாரண வெண்பாக்கள் விளக்கிக் காட்டுகின்றன. இன்றுள்ள சைவ சமய தத்துவஞானத்துக்கு இத்தமிழ்ச் சிவஞான போதமே மூல நூல்.

மெய்கண்டாருடைய முதல் மாணாக்கராகிய அருள் நந்தி சிவாசாரியர் செய்த சிவஞான சித்தியார் என்பது மிக விரிந்த நூல். சைவ சித்தாந்த சமயக்கருத்துக்கள் அனைத் துக்கும் அரணாகவும் விளக்கமான ஆதாரமாகவும் உள்ள மூலநூல் இதுவே. பிறர் மதத்தைக் கூறி மறுப்பது இதன் முதல் பகுதியாகிய பரபக்கம் என்பது; 301 பாடல் உடையது. இங்கு உலகாயதன் முதல் பாஞ்சராத்திரி வரையிலுள்ள பதினான்கு சமயவாதிகளுடைய கருத்துக்கள் சொல்லி நிராகரணம் செயயப்பட்டுள்ளன. அடுத்து, தமது சைவ சித்தாந்த சமய உண்மைகளைச் சொல்லுகின்ற பகுதி சித்தியார் சுபக்கம் என்பது; 328 பாடல்கள் உடையது. இந்நூல் தன் பெருமை காரணமாக, 'பார் விரித்த நூலெல்லாம் பார்த்தறியச் சித்தியிலே, ஓர் விருத்தப் பாதி போதும்,' 'சிவனுக்கு மேல் தெய்வமில்லை; சித்திக்கு மேல் சாத்திரமில்லை'—என்று பழமொழியாக வழங்குவது. இவரே செய்த மற்றொரு நூல், இருபா இருபது என்பது; 20 பாடல் உடையது; தம்முடைய குருவைச் சில வினாக்கள் வினவி, அவர் கூறும் விடைகளை உரைப்பதாக அமைந் துள்ளது. மெய்கண்டாரின் மற்றொரு மாணாக்கராகிய மன வாசகங் கடந்தார் என்பவர் 54 வெண்பாக்கள் கொண்ட

உண்மை விளக்கம் என்றொரு சிறுநூல் செய்தார். இது சைவ சித்தாந்த சமயத்தில் கொள்ளப்படுகின்ற 36 தத்துவங்களின் இலக்கணத்தையும் தோற்றம் ஒடுக்கங்களையும் சுருக்கமாக நன்கு உரைப்பது, சைவ சித்தாந்த சமயத்துக்கு மிகவும் பிரதானமான ஒரு கருவி நூல்.

அருள் நந்தியின் மாணுக்கர் கடந்தை மறை ஞான சம்பந்தர். இவருடைய மாணுக்கர் உமாபதி சிவாசாரியர். இவர் செய்த நூல்கள் எட்டு. அவற்றுள் சிவப்பிரகாசம், திருவருட் பயன் என்ற இரண்டும் மிக்க சிறப்புடையவை; முறையே 100 விருத்தங்களும், 100 குறட் பாக்களும் கொண்டவை. திருவருட் பயன் ஆரம்பநூல்; சிவப்பிரகாசம் முதிர்ந்த நிலைக்கு உரியது. இவர் செய்த பிற நூல்கள் வினு வெண்பா, போற்றிப் பஃறொடை, நெஞ்சுவிடு தூது, கொடிக்கவி, உண்மைநெறிவிளக்கம் (செய்தார் சீகாழி தத்துவநாதர் என்பர்) சங்கற்ப நிராகரணம் என்பன. இறுதியாகச் சொன்ன சங்கற்ப நிராகரணம், மாயாவாதியையும் சைவத்தின் உட்பிரிவாக உள்ள ஒன்பது சமய வாதிகளின் கொள்கையையும், மறுத்துரைப்பது.

மெய்கண்டாருக்கு முன் தோன்றியிருந்த திருவியலூர் உய்ய வந்த தேவர் செய்த திருவுந்தியாரும், திருக்கடவூர் உய்ய வந்த தேவர் செய்த திருக்களிற்றுப்படியாரும் முதிர்ந்த சிவானுபவச் சாத்திர நூல்கள்.

இங்கே கூறிய பதினுன்கு நூல்களும் இன்று தமிழ் நாட்டுச் சைவ சித்தாந்தத்திற்குரிய சிறப்பான மூல ஆதார நூல்கள். இவை சைவ சித்தாந்த சாத்திரம் என்றும், மெய்கண்ட சாத்திரம் என்றும் வழங்கும். மேலே கூறிய வேதம் முதலானவை பொது என்றும், இவை சிறப்பு என்றும் கருத வேண்டும். அவை வடமொழி, இவை தமிழ்.

## மற்றவை

இந்த நூல்களோடு மறைஞான சம்பந்தர் செய்ததாகக் கருதப்படும் சதமணிக் கோவையும், சிற்றம்பல நாடி செய்த துகளறுபோதமும், சித்தாந்த சாத்திரங்களாகவே கொள்ள வேண்டும். இவைகளோடு சாத்திரங்கள் பதினன்கிற்கும் பல வேறு உரையாசிரியர்கள் செய்த விரிவுரைகளும் முதன்மை உடையனவாகக் கருதப்பட்டு வருகின்றன. சிறப்பான உரைகள் இரண்டு. ஒன்று, சிவஞான போதத்திற்கு சிவாக்கிரயோகி வடமொழியில் செய்த 12000 கிரந்தம் கொண்ட சிவாக்கிர பாஷ்யம். மற்றது, சிவஞான முனிவர் தமிழில் செய்த சிவஞான போதமா பாடியம்.

நூலாசிரியரின் கருத்துக்கு உரை காண முற்படும் பொழுது ஓர் எச்சரிக்கை நினைவில் இருக்கவேண்டும். ஆசிரியர் எந்தக் கருத்தோடு சொன்னர் என்று பார்க்க வேண்டுமேயன்றி, மாறுபட்ட கருத்துக்களை அந்த நூலில் புகுத்தக் கூடாது. சித்தாந்த நூலுக்குச் சிலர் வேதாந்த உரையும் கூறுகிறுர்கள். இது பொருந்தாது. மரபு கோலித் தந்த வரம்புகளுக்கிடையே தான் உரை செல்ல வேண்டும்.

இனி, மேலே குறித்தவை யாவும் சைவ மக்களுக்கு வேதம் போன்ற சிறப்புடையன. சில நூல்கள் பின் வந்தவை ஆயினும், அவை போலவே கொள்ளத்தக்கன. இவற்றுள் முதன்மையானவை ஞானமார்க்கத்தில் ஞானமிர்தமும் சிவநெறிப் பிரகாசமும்; யோக, கிரியா மார்க்கத்தில் தத்துவப் பிரகாசம்; சரியா மார்க்கத்தில் சிவதருமோத்தரமும் சைவ சமய நெறியும்; பக்தி மார்க்கத்தில் அருணகிரி நாதர் நூல்களும், தாயுமானவர் பாடல்களும்.

மூல சாத்திரங்களின் வரையறை பழமையான ஓர் அளவோடு நிற்கவேண்டியது. மேலும் பெருகிக் கொண்டே போக முடியாது. இது எங்கும் மூலத்துக்கு அமையத்தக்க

ஓர் இயல்பு. இம்முறையில், திருமுறைகள் 12 சித்தாந்த சாத்திரங்கள் 14 என்ற வரையறை ஏற்பட்டு நிலைபெற்றிருக்கிறது.

## வட மொழியின் நிலை

வட மொழியைக் குறித்து ஒரு வார்த்தை கூறி இப்பகுதியை முடிப்போம். சைவத்துக்கு வடமொழி நூல்களும் தமிழ் நூல்களும் இரண்டு கண்கள்போன்றவை. இரண்டுமே சாத்திரங்கள். சைவ சாத்திர வட நூல்கள் பிராமணர் செய்தவை அல்ல; இவற்றுள் பல சிவாசாரியர் செய்தவை, சில சைவரே செய்தவை. இரண்டையும் கொள்வதால் தமிழுக்குக் குறைவு, அல்லது பிராமண ஆதிக்கம் ஏற்படும் என்று நினைப்பது அறிவுடைமையாகாது. சில நூற்றாண்டுகளுக்கு முன் வரை சமய நூல் கற்ற சைவர் இரு மொழி வல்லவராகவே இருந்தார்கள். ஆகவே, அவர்கள் தாங்களே வடமொழியில் நூல் செய்ததில் வியப்பில்லை. அன்றியும், முற்காலத்தில் சமய நூல்களை வடமொழியில் தான் எழுத வேண்டும், தமிழில் எழுதக் கூடாது என்ற உணர்வு இருந்தது. அது காரணமாகவே தமிழ் நாட்டில் மட்டுமின்றி இந்திய நாடெங்கும் சமய நூல்களும் வியாக்கியானங்களும் வட மொழியில் எழுதப்பட்டன.

வைதிக சமயமொன்றுமே இந்திய மண்ணில் நிலவிய பழங்காலத்தில், இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன், சீர்திருத்த சமயங்களாகிய பௌத்தமும் சைனமும் எழுந்தன. இவற்றைத் தோற்றுவித்தவர்கள் வட நாட்டில் பிறந்தவர்கள். ஆதலால் அவர்களும் அவர்கள் சீடர்களும் தங்கள் சமய நூல்களை வட மொழியிலேயே எழுதினார்கள். சிறிது பிற்பட்டு இச்சமயங்களில் பொருந்தாத கொள்கைகளைக் கண்டிக்க முற்பட்ட வைதிக சமய நூலாசிரியர்கள், அதே வடமொழியில் நூலெழுதிக் கண்டித்தார்கள். அப்போதும் பின்னரும், தென்னாட்டவர் அச் சமயங்களைக்

கண்டிக்கவும் தங்கள் கொள்கைகளை விளக்கவும் நூலெழுதத் தொடங்கியபோது, வடமொழியிலேயே எழுதத் தொடங்கினர்கள். சமயநூலை வடமொழியில் எழுதுதல் என்ற மரபு இவ்வாறு தொடங்கி நிலை பெற்றுவிட்டது.

சைவ சமயத்தில் வடமொழியில் நூல் எழுதினோர் தமிழ் நாட்டவரே. இதில் பிராமண ஆதிக்கம் இல்லை. ஏனெனில் பிராமணருக்கு உரியது சங்கருடைய அத்துவைத வேதாந்தமேயன்றி, சைவ சித்தாந்தமன்று. தாங்களாகச் சில பிராமணர் விரும்பிச் சிவ வழிபாட்டையும் ஆலய வழிபாட்டையும் சைவ நூல்களையும் கற்றனர். இவர்கள் சிவவேதியர் எனப்பட்டனர். சைவருக்குச் சொல்லியதெல்லாம் இவர்களுக்கும் பொருந்தும். சிவவேதியர் சைவரெனக் கொள்ளத் தடையில்லை.

# சைவ ஆசாரியர்

## சிவபெருமான்

சைவ மரபில், சிவபெருமானே ஆசாரியனாக வந்து ஆட் கொள்ளுகின்றான் என்பது அடிப்படைக் கருத்து. சிவால யத்தில் பரம குருவாயுள்ளவர் தக்ஷிணாமூர்த்தி. இப் பெருமான், கைலையில் கல்லால நிழலில், வாக்கிறந்த பூரண மாய், மறைக்கு அப்பாலாய் இருந்து, சகல கல்வி கேள்வி களிலும் வல்ல முனிவர்களான சனகர் சனந்தனர் சனாதனர் சனற்குமாரர் என்ற நால்வருக்கும், பரஞானத்தை வாக்கினாற் சொல்லாமல் தாம் இருந்த நிலையினாலேயே உணர்த்தி, வீடு பேறளித்தனர். இப்பெருமான் வலக்கையில் பிடித்த சின் முத்திரை இக் கருத்தைப் புலப்படுத்தும். பெருவிரல் இறைவனையும் முதல் விரல் ஆன்மாவையும் குறிப்பிடும். நடுவிரல், மோதிரவிரல் சிறுவிரல் மூன்றும் ஆன்மாவைப் பந்தித்த பாசங்களாகிய ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்றையும் முறையே குறிக்கும். ஆன்மா இந்தப் பாசங் களிலிருந்து விடுபட்டு இறைவனது தாளில் வந்து அடங்க வேண்டும் என்பதை இந்த முத்திரை உணர்த்துகிறது. முத்திரையில் பார்த்தால் மூன்று விரல்கள் தனியே பிரிந்து நிற்க, முதல் விரல் மட்டும் பெருவிரல் அடியில் வந்து அடங் குவது தெரியும்.

தக்ஷிணாமூர்த்தியாகிய பரமாசாரியர் கைலாயத்தில் உள்ளவர். பூலோகத்தில் சைவ சமயத்தில் சமயாசாரியர் நால்வர், சந்தான ஆசாரியர் நால்வர் என்று சொல்லுவது மரபு. சமயாசாரியர் ஆவார் திருஞான சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்போர். சந்தான ஆசாரியர்

ஆவார் மெய்கண்டார், அருள் நந்தி, மறைஞான சம்பந்தர், உமாபதி என்போர்.

## சமயாசாரியர்

சமயாசாரியர் நால்வரும் தமிழ்நாட்டில் ஏழு, எட்டு ஒன்பது ஆகிய நூற்றுண்டுகளில் தோன்றிச் சிவபக்திப் பயிர் வளர்த்தார்கள். பரசமயக் குறும்பை அடக்கிஞர்கள். இவர்களுடைய வாழ்க்கையின் தத்துவத்தைச் சைவப் பண்டிதர்கள் பலவாருக விரித்துக் கூறிய போதிலும் கூட, இவர்கள் மிகவும் சிறப்பாகப் பக்தி மார்க்கத்தை வளர்த் தார்கள் என்பது இங்கு உணரத்தக்கது. 'சாத்திரப்படிப்பு, குலத்தின் மேன்மை ஆகிய அனைத்தையும் விட, மெய் யன்பே அருள் பெறுவதற்கு வழி; உலகுக்கு ஒரே தெய்வம், அத்தெய்வமே சிவபரம் பொருள், உயிர் வர்க்கங்கள் யாவும் அத் தெய்வத்தை வழிபட்டுத் தங்கள் வினைகளிலிருந்து நீங்கி உரிய காலத்தில் திருவருளிலே தோய்ந்து அப்பரம் பொருளிலே இரண்டறக் கலத்தல் ஆகிய முத்திப் பேறு அடைவார்கள்' என்பதே இவர்களது பொதுவான உப தேசம். அன்று முதல் இன்று வரை இவர்கள் ஆற்றுப் படுத்திய நெறியிலேயே சிறிதும் பிறழாமல் சைவ மக்கள் ஒழுகி வருகிறுர்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது. இவர்க ளுடைய வாழ்க்கை வரலாற்றைச் சில சொற்களால் இங்குக் கூறலாம்.

## சம்பந்தர்

திருஞான சம்பந்தர் சோழநாட்டுச் சீகாழியில் தோன்றி மூன்று வயதில் உமாதேவியாரால் ஞானப்பால் ஊட்டப் பெற்று, தமிழ் நாடெங்கும் சுற்றி, தலங்கள் தோறும் இசைப் பதிகங்கள் பாடி மக்களைச் சிவநெறியிலே ஆற்றுப்படுத்தி ஞர். திருக்கோலக்காவில் சிவபெருமான் இவருக்குப்

பொன்தாளம் அருளினர். யாழ் வாசித்தலில் வல்லவராகிய திருநீலகண்ட யாழ்ப்பாணரும் அவர் மனைவியாரும் வரக் கண்டு, அவர்களைப் போற்றித் தமது திருக்கூட்டத்தில் சேர்த்துக் கொண்டு தம் பதிகங்களை யாழில் இசைக்கும் உரிமை அளித்தார். தில்லையில் தில்லைவாழந்தணர்களைச் சிவகணங்களாகக் கண்டார். குழந்தைப் பிராயத்தோடு இவர் தந்தை தோள்மீதும், சில சமயம் நடந்தும் வருவதுண்டு. நடந்து வந்த வருத்தத்தைக் கண்ட சிவபெருமான், திருநெல்வாயில் அரத்துறையில் இவருக்கு ஒரு முத்துச் சிவிகை அளித்து அதில் இவர்ந்து வருமாறு பணித்தார். முத்துச் சின்னமும் முத்துக் குடையும் அளித்தார். சில நாள் கழித்து இவர் அப்பர் சுவாமிகளுடைய தொடர்பும் பெற்றார். பின்னர் திருப்பாச்சிலாச்சிராமம் அடைந்த போது, அங்கிருந்த அரசனை கொல்லி மழவன் என்பவனுடைய பெண்ணைப் பிடித்திருந்த முயலகன் என்ற கொடு நோயைப் பெருமான் மீது பாடல் பாடிப் போக்கினர். கொங்குநாடு சென்ற போது அந்நாட்டுக் குளிர் சுரம் தம் அடியவரைத் தாக்காதபடி பெருமான் மீது பதிகம் பாடி விலக்கினர். திருப்பட்டீச்சுரம் அடைந்து, வெப்பத்தைத் தணிக்கப் பெருமானல் அருளப் பெற்ற முத்துப் பந்தர் பெற்றார். திருவாவடுதுறை அடைந்து தந்தையார் வேண்டியபடி பெருமானைக் குறையிரந்து பொற்கிழி பெற்று, "நல்வேள்வி தீது நீங்க நீர் செய்யும்" என்று தந்தையிடம் அளித்தார். திருத்தருமபுரம் என்ற ஊரில் யாழ்முரிப் பதிகம் பாடி, இறைவன் அருள் பெற்ற இசை, கருவியில் அடங்காது என்று திருநீலகண்ட யாழ்ப்பாணர் முதலியோருக்கு மெய்ப்பித்தார். திருச்சாத்தமங்கை வணங்கித் திருநீல நக்கர் உபசாரத்தைப் பெற்று, திருமருகல் அடைந்து, ஒரு வணிகப் பெண்ணின் துயர் தவிர்க்க வேண்டிப் பெருமானைக் குறையிரந்து, விடந்தீண்டி உயிர் துறந்த வணிகன் உயிர் பெற்றெழச் செய்தார். மீண்டும் அப்பரைச் சந்தித்துத்

திருவாரூர்ப் பெருமை அறிந்து அங்குச்சென்று வழிபட்டு, திருப்புகலூர் அடைந்து முருகர், திருநீலநக்கர், சிறுத் தொண்டர் ஆகியவரோடு அளவளாவிப் பின்னர் அப்பரு டன் திருவீழிமிழலை அடைந்தார்; அங்குப் பெருமான் இவருக் குத் தோணியப்பர் கோலம் காட்டினர். அங்கிருந்த பஞ்சம் தீருவதற்காகப் பெருமானிடத்தில் காசு பெற்று அடியவர் விருப்பப்படி பெருமானைப் பணிந்து மீண்டும் வாசி தீர்ந்த காசு பெற்றார். அங்குப் பஞ்சம் நீங்கவே, அப்பரோடு திருமறைக்காடு அடைந்தார். அடைத்திருந்த கதவை அப்ப ரால் திறப்பித்து வழிபட்டு மீண்டும் பாடல் பாடி அடைப் பித்தார். வாய்மூர் வழிபட்டு மீண்டபோது, பாண்டி நாட்டு ஒற்றர் வந்து அழைக்கவே, சமணர் தீமையை எடுத்துக் கூறி அப்பர் தடுத்ததைக் கோளறு பதிகம் பாடி விலக்கி, அரசி மங்கையர்க்கரசியார் மந்திரி குலச்சிறையார் விருப்பப் படிப் பாண்டிநாட்டில் சமண் போக்கிச் சைவம் பெருக்கப் புறப்பட்டார். சம்பந்தர் மதுரை சென்று தங்கிய மடத்தில் சமணர் தீயிடவும், இவர் ''பையவே சென்று பாண்டியற்காக'' என்று பாடிய மாத்திரத்தில், தீ பாண்டியனை வெப்புச் சுர மாகத் தாக்கியது. சமணரால் சுரம் தீர்க்க முடியாது போகவே, சம்பந்தர் சுரத்தைத் திருநீற்றால் போக்கினர். சமணர் நோய் தீர்க்க முடியாமற் போனது கண்டு பாண்டி யன் மனம் மாறவே, சமணர் சம்பந்தரை அனல் வாதம், புனல் வாதம் செய்யுமாறு அழைத்தனர். சமணர் அனலில் இட்ட ஏடு எரிந்து போக, சம்பந்தர் இட்ட ஏடு பச்சென்று இருந்தது. அப்படியே வைகை யாற்றில் ஏடுகளை இட்ட போது சமணர் இட்ட ஏடுகள் ஆற்று வெள்ளத்தால் அடித் துச் செல்லப்பட்டுக் கடலை அடைந்தன; சம்பந்தர் இட்ட ஏடு எதிரேறிச் சென்றது. சம்பந்தர் பெருமையுணர்ந்த அரச னும் சமணரும் சைவராயினர். பின் சம்பந்தர் மதுரை நீங்கிக் கொள்ளம் பூதூர் அடைந்து ஆற்றுவெள்ளப் பெருக்கில் ஓடம் செலுத்துவோரின்றிப் பாடலாலேயே ஓடத்தைச்

செலுத்தினர். போதி மங்கை என்ற ஊர் அடைந்தபோது, அங்கு புத்த நந்தி என்ற பௌத்த சமயத் தலைவனுடைய தொந்தரவு பொறுக்கமாட்டாத அடியவர் ஒருவர் சம்பந்தருடைய பாடலிலிருந்து திருவைந்தெழுத்தின் பெருமை கூறும் ஒரு பாடலைப் பாடிய மாத்திரத்தில், தலையில் இடி வீழ்ந்து அவன் மாய்ந்தான். பின் திருப்பூந்துருத்தி அடைந்து தம் சிவிகையை அப்ப மூர்த்திகளே தாங்கி வந்தமை கண்டு அவரைப் போற்றி, காழியடைந்து பின்னர் தொண்டை நாடு நோக்கினர். திருவோத்தூரில் ஒரு சிவனடியார் பயிரிட்ட பனைகள் யாவும் சமணர் பழிக்குமாறு ஆண் பனைகளாய் இருந்தமை கண்டு, பதிகம் பாடி அவற்றைப் பெண்பனையாக்கி, காரைக்காலம்மையார் கண்ணப்பர் தலங்களான ஆலங்காடு காளத்தி வணங்கி, மயிலாப்பூர் அடைந்தார். அங்கு தமக்கென்று சிவநேசர் என்பார் வளர்த்த பூம்பாவை விடந்தீண்டி இறந்தபின் அவர் எடுத்து வைத்திருந்த அவள் எலும்பைப் பெண்ணாக்கி, அவளுக்குத் தாம் தந்தை முறை என்பதை யுணர்த்தி, மீண்டும் சீகாழி வந்தார். திருநல்லூர்ப் பெருமணத்தில் தம் பெற்றோர் தமக்குப் பெண் பார்த்துத் திருமண ஏற்பாடுகள் நிறைவேற்றி வைக்கவே, பெண்ணைக் கைப்பிடித்து, இறைவனடி சேரவேண்டும் என்ற எண்ணத்தோடு ஒரு பதிகம் பாடினர். ஒரு சோதி தோன்றிற்று. பஞ்சாக்கரத் திருப்பதிகம் பாடி அனைவரையும் தீக்ஷையால் புனிதராக்கிச் சோதியுள் புகச் செய்து, தாமும் மனைவியைக் கைப்பிடித்தவாறே சோதியுள் புகுந்து, வைகாசி மூலத்தன்று சிவத்தில் இரண்டறக் கலந்தார்.

திருஞான சம்பந்தர் வாழ்க்கை இருபெரும் தத்துவங்களை உணர்த்துகிறது. ஒன்று அவருடைய வாழ்க்கை சற்புத்திர மார்க்கம் என்று சொல்லுகின்ற கிரியா மார்க்கத்தை உணர்த்துகின்றது. இறைவனுடைய புதல்வர் என்ற பெருந் தகுதியை இவர் பெற்றவர். மற்றது, இவர் தமக்கென்று வாழவில்லை; உயிர்களுக்கு உபகாரம் செய்யவேண்டு

மென்றே வாழ்ந்தார். இறைவன் இவருக்கு ஞானப்பால் அருளியது முதல் சோதியைத் தோற்றுவித்தது வரையில் தாமாகவே அருள் செய்தார். ஒன்றேனும் இவர் கேட்டதில்லை; ஆனால் இவர் பெருமானைக் குறையிரந்ததெல்லாம் பிறருடைய துன்பத்தைப் போக்க வேண்டியே. முயலகன் நோய் தீர்த்தது, சுரம் போக்கியது, தந்தைக்குப் பொன் அளித்தது, விடம் தீர்த்தது, படிக்காசு பெற்றது, சமணரை வென்றது, ஓடம் விட்டது, பெண்பனையாக்கியது, அங்கம் பூம்பாவையாக்கியது ஆகிய அற்புதங்கள் யாவும் உலகினருக்கு இவர் செய்த உபகாரங்களே யாகும்.

## அப்பர்

அப்பர் சுவாமிகள் என்று வழங்குபவர் திருநாவுக்கரசு சுவாமிகள்; அப்பரே என்று சம்பந்தரால் அழைக்கப் பெற்றார். இவர் நடுநாட்டில் திருவாமூரில் வேளாள மரபில் பிறந்தார். இளமையில் பல சமய ஆராய்ச்சி செய்து சைவ சமயத்திலிருந்து வழுவிச் சைன சமயம் புகுந்து இருந்த நாளில், இவர் தமக்கை திலகவதியார் தம் தம்பியை ஆட்கொள்ளுமாறு இறைவனை வேண்ட, இறையருளால் இவர் வயிற்றில் சூலைநோய் தோன்றி அதைப் போக்க வழியறியாது, இவர் தம் தமக்கையை நாடி வந்த போது திலகவதியார் திரு நீறு அளித்துத் திருவதிகை வீரட்டானேசுவரரை வழிபடச் செய்ய, சூலை மறைந்தது. இவரும் பெருமான் புகழைப் பாடும் நாவன்மையும் பெற்றார். பாடல்களின் பொருட் பொலிவு காரணமாக இறைவனால் 'நாவுக்கரசு' என்று பெயர் சூட்டவும் பெற்றார். இவர் கோயில்கள் தோறும் சென்று மனத்தினால் தியானித்து, வாயினால் புகழ் பாடி, கையினால் உழவாரப் பணி செய்து வந்தார். இவர் சைவரானமை அறிந்த சைனத் தலைவர், தமது அரசனாகிய மகேந்திரவர்ம பல்லவனிடம் சென்று சைன சமயத்துக்கு இழுக்குத் தேடிய இவரைத் துன்புறுத்தச் சொன்னபோது,

அவனும் அதையேற்று இவரை அழைத்துச் சுண்ணம்பு நீற்றறையில் இட்டான். இறைவன் திருவடி நிழலே இவர் நினைத்திருக்கவே, அறை இவருக்கு அந் நிழல்போலக் குளிர்ந்திருந்தது. பிறகு இவருக்கு நஞ்சமுது கொடுத்தனர். அதை உண்டு இவர் தீங்கின்றி இருந்தார். மதங்கொண்ட யானையை இவர் மீது ஏவினர். யானை இவரை வணங்கிச் சென்றது. கல்லில் பிணித்துக் கடலில் இட்டனர். இவர் இறைவன் திருநாமத்தை ஓதி மிதந்து திருப்பாதிரிப்புலியூரில் கரையேறித் திருவதிகை வந்து தொழுது கொண்டிருந்தார். பல்லவ மன்னன் இவர் பெருமையை யுணர்ந்து இவரை வணங்கி நல்லறிவு பெற்றுச் சைவனாகிச் சிவாலயம் கட்டினான். நாவுக்கரசர் பின் திருப்பெண்ணாகடம் அடைந்து பெருமானைப் பாடி வேண்டித் தோளில் சூலமும் இடபமும் பொறிக்கப் பெற்றார். சீகாழி அடைந்து சம்பந்தருடைய நட்பைப்பெற்றார். திருநல்லூரில் இறைவனுடைய திருவடிகளைத் தம் முடி மீது சூட்டப் பெற்றார். திங்களூர் அடைந்து, அங்கு அப்பூதி என்ற அந்தண அடியவர் நாவுக்கரசராகிய தம் பெயராலேயே பல சிவ தருமங்கள் செய்திருப்பது கண்டு அதிசயித்து அவருடன் அளவளாவி மகிழ்ந்து, விடம் தீண்டிய அவருடைய புதல்வனை உயிர்ப்பித்தார். மீண்டும் திருப்புகலூர் அடைந்து சம்பந்தர் சிறுத்தொண்டர் முதலியவர்களோடு பழகிப் பின் திருக்கடவூர் குங்கிலியக்கலயருடைய நட்பைப் பெற்று, திருவீழிமிழலை அடைந்து, அங்கிருந்த பஞ்சத்தில் தம் கைத் தொண்டின் சிறப்புக்காரணமாக வாசியில்லாக்காசு பெற்றார். திருமறைக்காடு அடைந்து மறைக் கதவு திறப்பித்து, வாய்மூர் வழிபட்டு, ஞான சம்பந்தருக்குச் சமணரின் கொடுமையைக்கூறி, அவரைப் பாண்டிநாடு போகவிட்டுப் பழையாறை அடைந்தார். அங்கு இருந்த சிவாலயம் சமணரால் மூடப்பட்டிருந்தமை அறிந்து வருந்தி உணவின்றி இருந்தபோது, இறையருளால் அரசன் சமணரைத் தொலைத்துச் சிவால

யத்தை வெளிப்படுத்தினன். திருப்பைஞ்ஞீலி போகும் வழியில் இறைவன் இவருடைய பசியையும் நீர் வேட்கை யையும் அறிந்து பொதி சோறு அளித்தான். பின்னர் கயிலை நண்ண எண்ணிக் காசி வரை நடந்து சென்ற போது, கால்கள் தேய்ந்தன, கைகள் தேய்ந்தன, மார்பும் தேய்ந்தது; புரண்டு செல்லவே உடம்பும் தேய்ந்தது; அப்பால் செல்லும் செயலற்றவர் ஆகிய போது, இறைவன் ஒரு பொய்கையைக் காட்டி இவரை முழ்கச் செய்தான். இவர் அஞ்செழுத்தை ஓதிப் பொய்கையில் மூழ்கித் திருவை யாற்றிலே எழுந்தார். அப்போது தம் கண்ணில் பட்ட சராசரங்கள் எல்லாம் சக்தியும் சிவமுமாகத் தோன்றக் கண் டார். ஐயாறப்பர் ஆலயம் கைலாயமாகக் காட்சி யளித்தது. அக் காட்சியில் மனத்தைப் பறிகொடுத்துப் பாடிப் பின்னர் திருப்பூந்துருத்தி வந்து, அங்கு சம்பந்தர் சிவிகையைத் தாங்கினர். மதுரை சென்று வழிபட்டு, மங்கையர்க்கரசி யாரையும், பாண்டியனையும், குலச்சிறையாரையும் கண்டு மகிழ்ந்து, மீண்டும் புகலூர் அடைந்தார். இறைவன் திரு வருளால் இவர் உழவாரப் பணி செய்த இடமெல்லாம் பொன்னும் மணியும் தோன்றின. அவற்றை ஓடாகவே மதித்துப் பெயர்த்தெறிந்தார். தேவ மங்கையர் தோன்றி இவர் முன் பாட்டும் ஆட்டமும் ஆடினர். அவர்களை இவர் சிவமாகவே கண்டார். முடிவில் ஒரு சித்திரைச்சதயத்தில் "புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன்" என்று ஓதிக் கொண்டே சிவபெருமானுடைய திருவடிக்கீழ் சிவானந்த ஞானவடிவாய் அமர்ந்தார்.

சைவ மரபில் அப்பர் வாழ்க்கை தாசமார்க்கம் என்று சொல்லுகின்ற சரியைப் பகுதியைப் புலப்படுத்துவது. உடல் உழைப்பின் பெருமையை என்றும் உணர்த்தியிருப்பது. நாவினல் பாடினலும் நெஞ்சினல் நினைத்தாலும் போதாது, மெய்யினல் பணி செய்ய வேண்டும் என்ற அடிமைத் திறத்தை—பேருண்மையைப் புலப்படுத்துவது.

**சுந்தரர்**

மூன்ருவது ஆசாரியர் சுந்தரமூர்த்தி சுவாமிகள். இவர் கைலேயில் ஆடி நிழலில் தோன்றிய சிவபெருமானுடைய பிம்பமாயிருந்து, மலர் கொய்த உமாதேவியாரின் சேடியர் இருவர் மீது மனம் சென்ற காரணத்தினுல், மண்ணுலகில் பிறந்தார். நடு நாட்டில் ஆதி சைவ மரபில் நம்பியாரூரர் என்ற பெயரோடு பிறந்து, நரசிங்க முனேயரையர் அரண் மனேயில் வளர்ந்தார். புத்தூரில் தமக்கு மணம் ஏற்பாடாகி யிருந்தபோது, சிவபெருமான் ஒரு முதிய வேதியராகத் தோன்றி, இவர் தமக்கு அடிமை என்று ஓலே காட்டி மணத் தைத் தடுத்துத் திருவெண்ணெய் நல்லூர் ஆலயத்துட் சென்று மறைந்தார். பழைய வரலாறு உணர்ந்த நம்பி யாரூரர், 'பித்தா' என்று பெருமானேப் பாடி, தலயாத்திரை தொடங்கிப் பதிகம் பாடிக்கொண்டு வந்தார். காழி வணங்கி ஆரூர் அடைந்து பெருமானேயே தோழராகப் பெற்ருர். அங்கு உமாதேவியாரின் தோழி பரவை என்ற பெயரோடு பிறந்திருக்கக் கண்டு காதலித்துப் பெருமான் அருளால் மணந்தார். ஆரூர் மண்டபத்தில் தொண்டர் களேக் கண்டு வணங்கித் திருத்தொண்டத் தொகை பாடி ஞர். பரவை மனேயில் ஒரு சமயம் அடியவர் உணவுக்கு நெல் இல்லாது போக அருகில் உள்ள குண்டையூர்க்கிழார் நெல்மலே அளிக்க, அதைக் கோளிலிப் பெருமான் அருளால் பூதகணங்களேக் கொண்டு பரவை மனேக்கு எடுப்பித்தார். திரு நாட்டியத்தான்குடி அடைந்து அங்குக் கோட்புலியா ருடைய பெண்களான சிங்கடி வனப்பகை என்ற இருவரை யும் தம் புதல்வியராக ஏற்ருர். திருப்புகலூர் சென்று பங் குனி உத்திரத்தில் பரவையாருக்காகப் பொன் வேண்டிப் படுத்திருக்க, இவர் தலேக்கு வைத்துப் படுத்திருந்த செங் கற்கள் பொன்ஞகை ஆயின. பல இடங்கள் வழிபட்டுத் திருமுதுகுன்றத்தில் கிடைத்த பன்னீராயிரம் பொன்னே மணி முத்தாற்றில் இட்டுப் பின்னர் ஆரூர்க் குளத்தில் அதே

பொன் அருளப் பெற்ருர். திருக்குருகாவூர் செல்லும் வழியில் இறைவன் பொதி சோறு அளித்து இவர் பசியைப் போக்கினர். மீண்டும் திருக்கச்சூரில் பெருமான் இவருக்காகக் கறி சோறு இரந்து வந்து அளித்தார். பிறகு திருவொற்றியூர் அடைந்து அங்குக் கண்ட சங்கிலி என்ற அம்மையாரை மணக்க எண்ணினர். அவர் உமாதேவியாருடைய இரண்டாவது சேடியின் பிறப்பு. இறைவன் எழுந்தருளியிருந்த மகிழ மரத்தின் கீழ், "உன்னை நான் பிரிவதில்லை" என்று சூளுரைத்து மணம் செய்தார். ஆனல் சிறிது நாளில் திருவாரூர் வசந்த விழா நினைவு வரவும் அங்கே செல்ல எண்ணித் திருவொற்றியூரை நீங்கினர். இரண்டு கண்ணும் மறைந்தது. தாம் சூளுரை பொய்த்தமையே காரணம் என்றுணர்ந்து, இறைவனை வேண்டிக் கண் அருளுமாறு உருக்கமான பல பாடல்கள் பாடினர். தரும தேவதையான இறைவன் உடனே கண் அருளவில்லை. திருவெண்பாக்கத்தில் இறைவன் ஓர் ஊன்றுகோல் அளித்தார். இன்னும் கண்ணில்லை. காஞ்சி அடைந்து போற்றிய போது இடக்கண் கிடைத்தது. இதற்கு மகிழ்ந்தபோதிலும், மற்றொரு கண்ணில்லாமை நோக்கிக் கருத்தழிந்து வரும் வழியில் திருத்துருத்தியில் பெருமான் இவருடைய உடற் பிணி ஒன்றைப் போக்கினர். பின்னர் ஆரூர் சென்று வழிபட்டபோது அங்கு வலக்கண்ணும் அருளப் பெற்ருர். பரவை வீட்டுக்கு இவர் சென்றபோது, சங்கிலியார் திருமணம் அறிந்து, அவர் இவரை வீட்டினுள் அனுமதிக்கவில்லை. அப்போது இவர் சிவபெருமானை வேண்ட அவர் பரவைபால் தூது சென்று அவர் கோபத்தைத் தணித்துச் சுந்தரரை ஏற்குமாறு செய்தார். இச்செய்தியை அறிந்த பெருமங்கலம் கலிக்காமர் என்ற தொண்டர் சுந்தரர்மீது வெறுப்புக் கொள்ள, சிவபெருமான் அவருக்குச் சூலை நோய் வரச் செய்து அதைத் தீர்க்குமுகமாக இருவரையும் நண்பராக்கினர். சுந்தரரின் பெருமையை அறிந்த சேரமான்

பெருமாள் ஆரூர் வந்து இவரோடு நட்புக் கொண்டார். இருவரும் பல தலங்கள் வழிபட்டனர். திருவையாற்றில் பாடல் பாடிக் காவிரி வெள்ளம் வழிவிடச் செய்து வழிபட்டுச் சேரமானுடன் அவர் தலைநகர் சென்றார். பின்னர் அவர் தந்த பெரும் பொருள்களோடு திருமுருகன் பூண்டி வழியே தம் மூருக்குத் திரும்புகையில், பூதகணங்கள் பொருளைக் கவர, இறைவனைப் பாடிப் பொருளை மீண்டும் பெற்றார். திருப்புக்கொளியூர் அவிநாசி அடைந்து, பெருமானைப் பாடி முதலையுண்ட பாலனை உயிர்த்தெழுந்து வரச் செய்தார். மறுபடியும் சேரநாடு அடைந்து, சேரமானால் சிறப்பிக்கப் பெற்று வாழ்ந்தபோது, கைலாயத்திலிருந்து வெள்ளை யானை வர, ஆடி சுவாதியில் சுந்தரர் அதன்மீது ஏறிக் கைலாயம் சென்றார். அன்பரான சேரமான் இதையறிந்ததும், குதிரைமீது ஏறி அதன் காதில் சிவ மந்திரம் ஓத, அதுவும் வானவீதி வழியாகக் கைலாயம் சென்றது. கைலாயம் சென்ற வழியில் தாம் செய்த பதிகங்களைச் சுந்தரர் வருணனிடம் கொடுக்க, அவன் அவற்றைத் திருவஞ்சைக் களத்தில் வெளியிட்டான்.

சுந்தரர் வாழ்க்கை சகமார்க்கம் என்னும் யோக மார்க்கத்தைப் புலப்படுத்துவது. இது தோழமை என்று சொல்லப்படுவது, அன்றியும், இறைவன் நீதி வடிவானவன், நீதியினின்றும் பிறழ்பவர் தண்டிக்கப்படுவர் என்பதை இவர் வாழ்க்கை நன்கு உணர்த்துகிறது.

## மாணிக்கவாசகர்

நான்காம் ஆசாரியர் மாணிக்கவாசகர். பாண்டி நாட்டுத் திருவாதவூரில் சிவ வேதியர் குலத்தில் வாதவூரர் என்ற பெயரோடு பிறந்த இவர், பாண்டியனிடம் முதல் மந்திரியாகி, அவனிடம் பெருஞ் செல்வம் பெற்றுக் குதிரை வாங்குவதற்காகக் கீழ் கடற்கரையை நோக்கிச் சென்ற போது, திருப்பெருந்துறை என்ற இடத்தில், குருந்த மரத்

தடியில் இவரை ஆட்கொள்வதற்காகவே வந்திருந்த சிவ பெருமானாகிய பரம குருவைக் கண்டு வணங்க, அவரும் இவரைக் கடைக்கணித்து அருளினார். அக்கணமே இவர் சிவஞானம் கைவரப்பெற்றுக் கனிவு மிகுந்த மாணிக்கம் போன்ற வாசகங்களைப் பாட, இறைவன் இவருக்கு 'மாணிக்கவாசகன்' என்ற பெயரைச் சூட்டினார். கொண்டு வந்த பொருளையெல்லாம் இவர் ஆலயத் திருப்பணியில் செல விட்டார். பாண்டியன் இவர் திரும்பி வராமை கண்டு ஆளனுப்பி அழைக்க, இவர் சென்று இறைவன் கட்டளைப் படி ஒரு மாணிக்கத்தை அவனிடம் தந்து "ஆவணி மூலத் தில் குதிரைகள் வரும்" என்றார். ஆனால் குதிரை வரும் தோற்றமே இல்லாமையால், அரசன் இவரைச் சிறை யிட்டுப் பெரிதும் துன்புறுத்தினான். இறைவன் திரு வருளையே இவர் எண்ணியிருக்க, மதுரைப் பெருமான் நரிகளைக் குதிரையாக்கி, குறித்த தினத்தில் பெரும் குதி ரைப் படையை அரசன் முன் கொண்டு நிறுத்தினார். அரசன் கண்டு மகிழ்ந்து மாணிக்கவாசகரை சிறைவிடுத்துப் பெரி தும் உபசரித்தான். ஆனால் அன்று இரவே இறையருளால் குதிரைகள் நரிகளாய் ஓட, அரசன் மிகவும் சினந்து இவ ரைச் சுடுமணலில் நிறுத்திப் பலவாறு தண்டித்தான். இறைவன்மீதே பாரத்தைப் போட்டு அவன் திருவடியையே எண்ணியிருந்த இவரது பெருமையை உலகினருக்குக் காட்ட எண்ணிய இறைவன், வைகையில் வெள்ளம்பெருகச் செய்ய, வெள்ளத்தால் மதுரை நகர் அழிவதைக் கண்ட அரசன், மாணிக்கவாசகர் பெருமையை உணர்ந்து, இவரை விடு வித்து, அருள்புரிய வேண்டினான். குடிகளுக்குக் கரையில் ஒவ்வொரு பகுதி அளந்துவிட்டு உடைப்பை அடைக்குமாறு செய்தான். வந்தி என்ற கிழவிக்குரிய பகுதி மட்டும் அடைபடவில்லை. துணையற்றவளாகிய அவளுடைய பக்திக்கு முன்னமே மகிழ்ந்திருந்த பெருமான், அவளுக்குக் கூலியா ளாக வந்து, அவள் கொடுத்த பிட்டை மட்டும் தின்றுவிட்டு

உடைப்படைக்காது விளையாடினர். அரசன் பார்த்து அக் கூலியாளைப் பிரம்பால் அடிக்கவும், அவ்வடி உலகில் உள்ள எல்லாப் பொருள்களின்மேலும் பட்டது. வந்தி கைலாயம் சென்றுள். கூலியாள் மதுரைப் பெருமானே என்பதை உணர்ந்த அரசன் மாணிக்கவாசகருக்காக இறைவன் புரிந்த திருவிளையாடலை உணர்ந்து அவர் திருவடியில் வீழ்ந்து வணங்கினன். பின் இவர் திருப்பெருந்துறை சென்றுர். அங்கு தமது குரு தில்லைக்கு வருமாறு கட்டளையிட்டு மறைய, இவரும் பல தலங்கள் வழிபட்டுப் பாடித் தில்லையை அடைந்தார். அங்குப் பெருமானை வணங்கியிருந்தபோது, ஈழ நாட்டு அரசனும், அவன் ஊமைப் பெண்ணும், தம் புத்த குருமாரோடு தில்லையடைந்து அங்குள்ளோரை வாதிற்கு அழைக்க, இவரும் பெருமான் கட்டளைப்படி சென்று அவ்வூமைப் பெண்ணே வாய் திறந்து புத்தருடைய வாதத்தை மறுத்துரைக்குமாறு செய்தார். சில காலம் கழிந்தபின் நடராசப் பெருமானே ஓர் அந்தண உருவோடு இவர் முன் தோன்றி இவரது பாடல்கள் முழுமையும் கூறு மாறு கேட்க, இவர் பாடினர். அவர் எழுதி, "மாணிக்க வாசகன் சொல்ல அழகிய திருச்சிற்றம்பலமுடையான் எழுதியது" என்று கைச்சாத்திட்டுப் படியில் வைத்தார். தில்லைவாழந்தணர், நூலை மறுநாட் காலை கண்டெடுத்து "இதன் பொருள் யாது?" என்று இவரைக் கேட்க, இவர் "இப்பெருமானே பொருள்" என்று நடராசப் பெருமானைச் சுட்டிக் காட்டி, ஆனி மகத்தில், அவனது தூக்கிய திருவடியின் கீழ்ச்சென்று பேரின்பப் பெருவாழ்வில் ஒன்றி விட்டார்.

மாணிக்கவாசகர், நால்வரில் ஞானமார்க்கம் என்ற சன்மார்க்கத்தைப் புலப்படுத்துபவர் ஆவார்.

முந்தைய ஆசாரியர் மூவர்போல, பண்டைத் தவத்தால் தோன்றிப் பெருமானல் ஆட்கொள்ளப் பெறுதல் அரிது; ஆனல் ஞானநூலை ஓதி, ஆசாரியனை நாடி சன்மார்க்க நெறி

யிலே அருள் வேட்டுநிற்ற லொன்றே அனைவரும் செய்யத் தக்கது என்பதை இவர் வாழ்க்கை உணர்த்தும். சாத்திரங்கள் உலகில் தோன்றும் பெரியோரை இரு வகையின ராகக் குறிப்பிடும். ஒன்று, பண்டை நல் தவத்தால் தோன்றிப் பரமனைப் பத்தி பண்ணுவோர்; இவர்களுக்கு இறைவனே முன்தோன்றி அருள்செய்து வீடுபேறு அளிப் பன். மற்றது, ஞானநூல் முறையாக ஓதி வீடுபேற்றிற்கான நெறியில் ஒழுகுபவர். முதல் வகையினர் சாமுசித்தர் என்றும், பிந்திய வகையினர் வைனயிகர் என்றும் பெயர் பெறுவர். இருவர் பெறுவதும் மீண்டு வாரா நெறியாகிய பரமுத்தியே. சம்பந்தர் அப்பர் சுந்தரர் மூவரும் சாமுசித்தர். மாணிக்கவாசகர் வைனயிகர். இந்த நால்வரும் சைவசமய ஆசாரியர் எனப்பெயர் பெறுவர். இவர்கள் தங்கள் அருட் பாசுரங்கள் மூலம் சைவமக்கள் வாழ்க்கையின் நிலைத்த இடம் பெற்றிருக்கிறார்கள்.

## சந்தான ஆசாரியர்-மெய்கண்டார்

இனி சைவ சந்தான ஆசாரியராக நால்வர் கொள்ளப் படுவர். இவர்கள் சைவஞான சாத்திரம் முறையாக உப தேசிக்கப்பெற்ற சந்தான பரம்பரையில் வரும் முதல் நால்வர். இவர்களுள் முதல்வர் மெய்கண்டார். இவர் பெண்ணாகடத்தில் அச்சுதகளப்பாளர் என்பவரது புதல்வ ராய்ப் பிறந்தார். இவர் தந்தையார் நெடுங்காலம் புத்திரப் பேறு இல்லாது, தம் குருவாகிய சகலாகம பண்டிதரை அடைந்து கேட்டபோது, அவர் தேவாரத்தில் கயிறு சாத் திப்பார்க்க, அதில் வந்த ''பேயடையா'' என்ற தேவா ரத்தைப் பார்த்து, அதில் திருவெண்காட்டு முக்குள தீர்த் தத்தில் நீராடி வழிபாடு செய்தோருக்குப் பிள்ளை வரம் நிச்சயம் கிடைக்கும் என்றிருக்கக் கண்டு, அவ்வாறு செய்யு மாறு சொல்ல, இவரும் அவ்வாறே செய்ய, சுவேதனப் பெருமாள் என்ற குழந்தை பிறந்தார். இக் குழந்தை மூன்று

வயதாயிருந்தபோது, ஆகாய வழியே சென்ற பரஞ்சோதி யார் என்ற சிவஞானி இவ்விடம் வந்ததும் தம் ஆகாய கமனம் தடைப்பட்டமை கண்டு காரணம் உணர்ந்து, கீழிறங்கி இக் குழந்தைக்கு உண்மை ஞானத்தைப் புகட்டினர்.

சிவபெருமானிடத்தில் உபதேசம் பெற்ற முனிவர் நால்வரில் சனத்குமாரர் ஒருவர். இவர் சத்திய ஞான தரிசனி என்ற சீடருக்குச் சிவஞானத்தை உபதேசித்தார். இவர் தாம் பெற்ற சிவஞானத்தைத் தம் மாணக்கராகிய பரஞ்சோதி முனிவருக்கு உபதேசித்தார். இவரே இப்போது திருவெண்காடு வந்தவர். தாம் உபதேசித்த குழந்தைக்குத் தம் குருவின் பெயரின் தமிழ் வடிவமாகிய மெய் கண்டார் என்ற பெயரைச் சூட்டினர். மெய்கண்டார் தம் தந்தையோடு பின்னர் திருவெண்ணெய் நல்லூரடைந்து, அங்குள்ள பொல்லாப் பிள்ளையாரை உபாசித்து அவரால் சிவஞானத் தெளிவும் முதிர்வும் பெற்றுர். இம்மெய்கண் டார் சைவ சித்தாந்த ஞான சந்தான மரபுக்கு மூலமாவார். பல மாணக்கருக்குச் சிவஞான உபதேசம் செய்திருந்து உரியகாலத்தில் பரமுத்தி அடைந்தார்.

## அருணந்தி-மறைஞானசம்பந்தர்

மெய்கண்டார் தந்தையின் குருவாயிருந்த சகலாகம பண்டிதர், மெய்கண்டாரைப் பார்த்து, "ஆணவம் எப்படியிருக்கும்?" என்று வினவ, அவர் தம்மையே காட்டக் கண்டு, அக்கணமே தமக்கு மெய்ஞ்ஞானம் வரப்பெற்று அவரிடம் மாணக்கராகி அருளுபதேசம் பெற்று, அவருக்குப்பின் ஆசாரியராய் அமர்ந்து ஞானபரம்பரையை வளர்க்கலானர். இவர் முத்தியடைந்த பின் இவருடைய மாணக்கரான பெண்ணுகடம் மறைஞான சம்பந்தர் சிவஞானப் பயிர் வளர்த்தார். இவர் ஒருநாள் தில்லை வீதியில் சென்றபோது, அங்குச் சிவிகையில் சென்ற உமாபதியை நோக்கி, "பட்ட

கட்டையில் பகல் குருடன் போகின்றான்" என்றார். இச் சொல்லைக் கேட்ட உமாபதி பரிபக்குவமடைந்து, உடனே சிவிகையிலிருந்து இறங்கி மறைஞானசம்பந்தர் திருவடியில் வீழ்ந்து வணங்கி, அவருடைய சீடராக அது முதல் ஒழுக லானார். மறைஞான சம்பந்தர் ஒருநாள் கைக்கோளர் வீதி யில் சென்று பாவாற்றும் கஞ்சியை வாங்கிக் குடிக்க, உமா பதி அவர் முழங்கை வழி ஒழுகிய கஞ்சியை ஏற்றுக் குடித்தார். சீடரது பக்குவம் உணர்ந்த மறைஞான சம்பந்தர் இவருக்கு உபதேசம் செய்து ஆசாரியராக்கி, உரியகாலத்தில் தாம் முத்தியடைந்தார்.

## உமாபதி

உமாபதி நடராசப் பெருமானைப் பூசிக்கும் பேறுபெற்ற தில்லை மூவாயிரவருள் ஒருவர். மறைஞான சம்பந்தரிடம் இவர் ஒழுகிய தன்மையறிந்து ஏனைய மூவாயிரவர் இவ ரைக் கோயிலிலிருந்து விலக்கி வைத்தனர். இவர் நகருக்குக் கீழ்பாலுள்ள கொற்றவன்குடி என்ற இடத்தில் தங்கி நட ராசப்பெருமானை வழிபட்டு வந்தார். மறுநாள் காலையில் நடராசப் பெருமான் ஆலயத்தில் அர்ச்சகர் பூசைப் பெட்ட கத்தைத் திறந்து பார்த்தபோது அங்குப் பெருமான் இல்லை. எல்லோரும் திகைத் திருக்க, " நாம் உமாபதியின் பெட்ட கத்தில் இருக்கிறோம்" என்று ஒரு குரல் எழுந்தது. எல் லோரும் வெட்கி, அவரிடம் சென்று பணிந்து மீண்டும் அவரைக்கொண்டு பூசை செய்வித்தனர். பின்னர் உமாபதி தமது மடத்துக்கு விறகளித்து வந்த பெற்றான் சம்பான் என்ற ஓர் அடியவனுக்குப் பெருமான் கொடுத்த சீட்டுப்படி தீக்ஷை அளித்து முத்திகொடுத்தார். இதன் உண்மைப் பொருள் உணராது மயங்கிய சாம்பனது சுற்றத்தாரும், அரசனும் காணும்படியாக, அவர் கோமுகை யருகே சிவ பெருமான் திரு மஞ்சன நீரில் வளர்ந்த ஒரு முள்ளிச்செடி யின்மீது தம் அருட்பார்வையைச் செலுத்திய மாத்திரத்தே,

அது ஒளிமயமாகி வானிற்சென்று கலந்தது. வந்தோர் மன அமைதிபெற்றனர். பின்னர் ஒருநாள் திருவிழாவில் கொடி யேருமை கண்டு, கொடிக்கவி பாடிக் கொடியேற்றுவித்தார். பல நூல்களும் பல சாத்திரங்களும் செய்து, உரியகாலத்தில் இவர் சிவபெருமாஞேடு இரண்டறக் கலந்தார்.

இந்நால்வரே சைவசந்தான ஆசாரியர் எனப்படு வோர் ; இவர்கள் பரம்பரையே சைவஞான சந்தானம்.

**சண்டேசர்**

இங்கு மற்ரெரு வரலாற்றைக் குறிப்பிடுதல் அவசிய மானது. அதுவே சண்டேசர் வரலாறு. இவர் விசார சருமர் என்ற பெயரோடு சேய்ஞலூரில் அந்தண குலத்தில் பிறந்து, பிறவியில் கலேஞானம் வல்லவராகி, ஆனினத்தினிடம் எழுந்த அன்பினுல் ஆ மேய்க்கும் தொழிலே மேற்கொண் டார். இவரது அன்பு நிறைந்த பராமரிப்புக் காரணமாக, பசுக்களிடம் அளவில்லாத பால் உற்பத்தியாக, அவை சென்ற இடமெல்லாம் பால் சொரிந்தன. இவர் மண்ணி யாற்றங்கரையில் ஓர் ஆத்திமர நிழலில் மணலால் சிவலிங்கம் அமைத்து, பசுக்கள் சொரிந்த பாலேக் குடம் குடமாகக் கொண்டுவந்து திருமஞ்சனம் ஆட்டினுர். ஆட்டியும், பசு உடையவருக்குக் குறைவில்லாத பால் கிடைத்து வந்தது. இவர் பால் சொரிந்ததைக் கண்ட ஒருவன் கோள் மூட்டிய தால் ஊரினர் கோபிக்க, உண்மையறிய வேண்டி இவர் தந்தை இவர் செய்கையை நேரில் காண எண்ணி வந்து பார்க்க, இவரும் அவ்விதமே செய்வதைக் கண்டு காலினுல் பாற்குடங்களே இடறினுர், பார்த்த குழந்தை அருகிலிருந்த ஒரு கோலே எடுத்து அதுகொண்டு பாதகம் செய்தவரது காலேத் துணித்தார். இவரது பக்திக்கு மகிழ்ந்த பெருமான் விடைமேல் எழுந்தருளிக் காட்சி தந்து இவரைச் சண் டேசுவர பதத்தில் அமர்த்தி அருள் செய்தார். சண்டேசர் சிவாலயத்துப் பஞ்சமூர்த்திகளில். ஐந்தாமவர். கோயிலில்

இன்றும் இவரை வழிபட்டே சைவர் சிவாலய தரிசனப் பலனைப் பெறத்தக்கார்.

## நாயன்மார்

சேக்கிழார் பாடிய பெரிய புராணம் நாயன்மார் அறுபத்துமூவர் வரலாற்றைக் கூறுகிறது. மேலே குறிப்பிட்ட சமய ஆசாரியர்களுள் முதல் மூவரும் சண்டேசரும் அறுபத்து மூவர் என்ற தொகையுள் அடங்குவர். அடியவர் வழிபாடு ஆண்டவன் வழிபாடு என்பது சைவத்தில் பிரதானமான ஒரு கொள்கை. அதற்கிணங்க, சைவ மக்கள் தங்கள் இல்லங்களில் அடியவர் முத்தியடைந்த திரு நட்சத்திரங்களில் ஆண்டுதோறும் விழாக்கொண்டாட வேண்டியவர்கள். ஆசாரியர்களுக்கும் அடியவர்களுக்கும் செய்கின்ற இந்த விழா, குருபூசை எனப்படும். குருபூசையின்போது குறிப்பிட்ட அடியவருக்கு வழிபாடு செய்து ஏழைகளாய் உள்ள சைவ அடியவருக்கு உணவளித்தல் முக்கியம். வந்திருக்கும் சிவ பக்தர்களைச் சிவமாகவே கருதிப் பூசைசெய்ய வேண்டும். மகேசுவரன் அடியவருக்குச் செய்யும் பூசையாதலால் இது மாகேசுவர பூசை எனப்படும்.

## சிவாசாரியர்

ஆலயத்தில் முப்போதும் திருமேனி தீண்டும் உரிமை பெற்றுள்ள அர்ச்சக குருக்கள்மாரைச் சிவாசாரியர் என்று சொல்லுகிறோம். இவர்களும் சைவருக்கு ஆசாரியராவார்கள். சிவாசாரியரும் சைவரும் சிவபரம்பொருள் ஒன்றையே வழிபடுபவர்கள். பிறதெய்வ வழிபாடும், சிறுதெய்வ வழிபாடும் இவர்களுக்கு இல்லை. இன்றைய பிராமணர் சிவத்திலும் பார்க்கத் திருமாலினிடத்தில் அதிக ஈடுபாடு உடையவர்கள். 'நானே பிரமம்' என்பது இவர்களது கொள்கையாதலால், எதனிடத்திலும் இவர்கள் வேற்றுமை காணுது இருப்பது இவர்கள் சமயத்திற்கு இயல்பு. இவர்கள் சைவர்

களுக்குப் புரோகிதராக இருக்கலாம். எந்த விதத்திலும் ஆசாரியர்களாக இருக்கும் தகுதி உடையவர்கள் அல்லர். இது போலவே சிவாலயத்திலும் கூட, சிவமே பரம்பொருள் என்று சொல்லும் சைவரைவிட அதிகமான எந்த உரிமையையும், நானே பரம்பொருள் என்று சொல்லுபவர்களுக்கு இருக்க முடியாது. சோழ சாம்ராஜ்யம் (பேரரசு) நிலவிய நாளில் சிவாசாரியரே சோழருக்குக் குருவாயிருந்தார்கள். பிராமணர் எவ்வளவு சிறப்பு உடையவராயிருந்தாலும், சைவருக்கு ஞான குரு ஆகார்.

# சைவ வழிபாடு

சைவ சமயத்தில் சிவாலய வழிபாடு என்பது சமய ஒழுக்கத்துக்கு நிறைவு தருகிற ஓர் அங்கம். சிவானுபவம் பெற்ற ஞானிகளும் கூட, உடலோடு இருக்கின்ற வரை, தமது சுத்த நிலையின் நீங்கி, உலகமுகப்படுதல் உண்டு; இந்நிலையில், யான் எனது என்னும் மாசு ஒட்டாதபடி செய்யத்தக்கவை, தம்மோடு ஒத்த மெய்யன்பரோடு கலந்து நிற்றலும், திருக்கோயிலில் உள்ள உருவத் திருமேனிகளையும் திருவேடத்தையும் சிவன் எனவே தெளியக் கண்டு தொழுதலுமாகும். இக்காரணம் பற்றியே, 'அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய்' என்ற வேண்டுகோளும், 'கோயில் இல்லா ஊரில் குடியிருக்கலாகாது' என்ற வழக்கும் எழுந்தன.

## கோயில் வழிபாடு

சைவராயுள்ளோர் அனைவரும் நாள்தோறும் சிவாலயம் சென்று சிவ வழிபாடு செய்யும் கடப்பாடு உடையவர். இறைவன் எங்கும் நிறைந்திருந்தாலும், அவனை மனத்தினுலே மட்டும் வழிபாடு செய்வது எல்லோருக்கும் இயல்வதன்று. இதனுலேயே வழிபாட்டில் ஆலயத்திற்குச் சிறப்பான இடம் அமைகிறது. ஆலயம், மக்கள் அனைவருடைய வழிபாட்டுக்கும் என்று அமைந்த தனி இடம். பசுவினிடம் எந்த இடத்தில் பால் தோன்றுகின்றது என்று சொல்ல முடியாவிட்டாலும், அது மடி வழியாகச் சுரப்பது போல, எங்கும் வியாபித்திருக்கும் இறைவன், சிவலிங்கத் திருமேனி மூலமாகத் தோன்றி, ஆன்மாக்களுக்கு அருள் புரிகின்றார். மார்க்கண்டேயருக்கும் கண்ணப்பருக்கும் அருள் புரிந்த வரலாறுகள் சிறந்த எடுத்துக் காட்டாகும். ஆதலால், சிவ

லிங்க வழிபாடும் திருக்கோயில் வழிபாடும் மிக்க அவசிய மாகின்றன.

திருக்கோயில் வழிபாடு செய்யும்போது, பொருள் தெரிந்து வழிபடுவது சிறப்பு. திருக்கோயிலில் பல தெய்வ வடிவங்கள் அமைப்புக்கள் இருந்தபோதிலும், அவற்றுள் ஒன்றேனும் பொருளற்றதாக இல்லை; யாவும் தத்துவார்த் தங்களை அடக்கியுள்ளன. சிலவற்றைக் குறிப்பிட்டுச் செல் வோம். சைவனுக்குத் திருவீதிகள் யாவுமே தெய்விகம் பொருந்தியவை. உள்ளே இருப்பது சூக்ஷ்ம லிங்கம், கோபுரம் ஸ்தூல லிங்கம். நெடுந்தொலைவில் புறத்தே யிருந்து பார்த்தாலே தெரியும்படியாக அமைக்கப்பட் டிருப்பது கோபுரம். எந்த நேரமும் தெய்வ நினைவு மனத்தில் இருக்க வேண்டும் என்பதற்காகவும், அக்காலத் தில் கோயிலுக்குள்ளே அனுமதிக்கப்பெருதவர் கூடத் தொலைவிலிருந்து கண்டு தெய்வ நினைவு பெறுவதற்காகவும், கோபுரமானது பெரிய வடிவமாக நிர்மாணிக்கப்பட் டுள்ளது.

தில்லை நடராசப் பெருமான் ஆலயத்தின் கோபுர மானது, சுற்றி ஐந்து-ஆறு மைல்கள் வரையில் நன்கு தெரியும். இவ்வளவு தொலைவில் வாழ்கின்ற சைவ முதிய வர்கள் அனேகர் இன்றும் கூட மாலையில் சூரியன் மறையும் நேரத்தில் அனுட்டானம் முடித்துக் கோபுர தரிசனம் செய்த பிறகே இரவு உண்ணும் நியமம் உடையவர்கள். மழைக் காலத்தில் வானம் மப்பும் மந்தாரமுமாய் இருந்து, கோபுரங்கள் மறைக்கப்பட்டுக் கண்ணுக்குப் புலப்படாமல் இருந்தால், இவர்கள் அன்றிரவு உணவு கொள்வதில்லை; மறுநாள் பொழுது புலர்ந்து கோபுர தரிசனம் ஆனபிறகு தான் உண்பார்கள்.

கோபுரத்தைத் தரிசித்து உள் நுழைந்தவுடன் கொடி மரம் காணப்படும். கொடிமரத்தில் இடபம் பொறித்த

கொடியையும் அதைக் கட்டிய தருப்பைக் கயிற்றையும் காணலாம். கொடிமரம் சிவம், கொடி ஆன்மா, தருப்பைக் கயிறு பாசம் என்பது ஒரு கருத்து.

கொடிமரத்தைக் கடந்தால் பலிபீடமும், நந்தியும், அதற்கப்பால் கருவறையினுள்ளே சிவலிங்கமும் காணப் படும். சிவலிங்கம் பரம்பொருள்; சிவலிங்கத்தை நோக்கி யிருக்கின்ற நந்தியே ஆன்மா; பலிபீடமே நாம் பலி கொடுக்க வேண்டிய மனம் அல்லது ஆணவமாகிய பாசம். பலிபீடத்திற்கும் சிவலிங்கத்திற்கும் இடையில் அமைந் திருக்கும் நந்தியானது பாசத்தை விட்ட ஆன்மா, இறைவ னுடைய அருள் ஒளியிலே கலந்து சிவமாவான் என்ற நிலையைக் காட்டுகிறது.

ஆலயத்துள் அமைக்கப்பெற்ற சிவலிங்கம் ஆன்மாக் கள் வழிபாட்டுக்காக ஏற்பட்ட பரார்த்த லிங்கம் என்பர். சிவபெருமான் அருவமாயும் உருவமாயும் இருந்து ஆன்மாக் களுக்கு அருளுகின்றார். அருவத் திருமேனியை அவனருள் பெற்ற ஞானிகளே அருட்கண்ணால் அகத்தே காண்பர். உற்சவம் கொண்டு வருகின்ற சோமாஸ்கந்தர், சந்திர சேகரர், பிக்ஷாடனர், நடராசர், கணேசர், முருகர் முதலான மூர்த்திகள் உருவத் திருமேனிகள். சிவலிங்கமானது, அருவமும் அல்லாமல் உருவமும் அல்லாமல் உள்ள ஒரு மூர்த்தம், அருவுருவம் (ரூபாரூபம்).

சிவாலயங்கள் பெரும்பான்மையானவை கிழக்கு நோக்கி இருக்கும். சில மட்டும் மேற்கு நோக்கிய சந்நிதிகள்; இவை ஞானம் அருள்பவை என்ற கருத்து உண்டு. கடம்பர் கோயில் என்ற ஓர் ஊரின் சந்நிதி மட்டும் வடக்கு நோக்கியது. சைவர், கோபுர வாயிலில் பணிந்து திரு நந்திதேவரின் விடைபெற்று உட்சென்று, முதலில் துவார விநாயகரைத் தரிசிக்க வேண்டியவர். விநாயகர் சிவபெருமானின் புதல்வர் என்று சொல்வது

உபசாரம். விநாயகர் சிவபெருமானின் அருட்சக்தியே; அவரின் வேறல்லர். விநாயகர் ஓம் என்ற பிரணவ ஒலி வடிவினர். ஆதலால், அவரை முதலாவதாக வணங்க வேண்டும். அவரை வழிபட்டுப் பின்னர் சிவலிங்கப் பெருமானை வழிபட வேண்டும். பூசா காலங்களில் சென்று கற்பூர தீப ஆராதனை நடைபெறும்போது வழிபடுவது சிறப்பு. செய்பவர், தாமும் வழிபாட்டுக்குரிய மலர், பழம், கற்பூரம் முதலியன சேர்ப்பித்து வழிபடுதல் அவசியம். வழிபடும்போது அவரவர் பெருமானை அருட்பாசுரங்களால் துதித்துத் தம் குறைகளை விண்ணப்பித்தல் தக்கது. சிவாலய வழிபாட்டில், பூசாகாலத்தின்போது சிவ சந்நிதியில் பஞ்ச புராணம் பாடுவது மரபு. தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரியபுராணம் ஆகிய ஐந்திலும் ஒவ்வொரு பாடல் பாடுவது பஞ்ச புராணம் எனப்படும். பதிகம் பெற்ற தலமாயின் தலப்பதிகம் இயன்ற அளவு ஓத வேண்டும்.

## நடராச வழிபாடு

பின்னர் நடராச தரிசனம். நடராச வடிவமானது உலகத்திலேயே மனிதனுடைய சிற்பப் படைப்புக்களில் ஒப்புயர்வற்ற பெருமையும் பேரழகும், கற்பனைத் திறனும், அருள் வடிவும் வாய்ந்தது. சைவ சித்தாந்த தத்துவக் கருத்துக்களின் பூரண அமைப்பே நடராச வடிவம். சைவ மந்திரமாகிய பஞ்சாக்கரத்தின் உருவமே நடராச வடிவம் என்பர். அவருடைய தில்லை நடனம் ஆனந்தத் தாண்டவம் என்றும் சொல்லுவர். உடுக்கை யேந்திய கையினால் மாயையைப் போக்கி, நெருப்பேந்திய கையினால் வல்வினையைச் சுட்டு, ஆணவமலமான முயலகனை ஊன்றிய பாதத்தால் போக்கி, எடுத்த கரத்தால் அருள் தந்து, தூக்கிய திருவடியினாலே ஆன்மாவை நித்தியமான பேரானந்தத்தில்

தோயச் செய்தலே நடராச நடனத்தின் பொருள்; இது பஞ்சாக்கர நடனம்.

சப்திக்கின்ற உடுக்கையில் தோன்றிய நாதத்திலிருந்து சிருட்டித் தொழில் தொடங்கிற்று. அமைத்த கரம் காத்தல் தொழிலைக் காட்டுகிறது. கையிலேந்திய அக்கினி சங்காரத் தொழிலாகும். முயலகன் மீது ஊன்றிய மலர்ப் பதம் ஆன்மாக்கள் வினைக்கீடாகக் கன்மம் அனுபவித்தல் வேண்டி, மறைத்தல் தொழில் செய்வது. தூக்கிய திருவடி அனுக்கிரகம் செய்வது. இது ஐந்தொழில் (பஞ்ச கிருத்திய) நடனம். பெருமானது அருட்சத்தி, நடராசப் பெருமான் நடனம் செய்யும்போது, சிவகாமசுந்தரி என்ற திருநாமம் தாங்கியிருப்பார்.

## பிற மூர்த்திகள்

நடராச தரிசனத்தின் பின் உமாதேவியாரைத் தரிசிக்க வேண்டும்: உமாதேவி என்று தனியாக ஒரு தெய்வம் இல்லை; சிவபிரானது அருளையே சக்தி என்று தனியாகப் பிரித்துச் சொல்லி வணங்குகிறோம். உலகுக்கெல்லாம் தாயாகின்ற சிவபிரானது கருணைத் தன்மையையே தனிப் படுத்தி அம்பிகை என்கிறோம். உமாதேவியாரை வணங் கியபின் முருகப்பெருமானை வணங்குதல் மரபு. முருகப் பெருமானைச் சைவர் சற்குரு பாவனையினால் வணங்கு வர். முருகப்பெருமான் சிவபெருமானின் புதல்வர் என்று கூறுவது உபசாரம்; அவர் சிவபிரானின் வேறல்லர். சிவ பிரானது சக்தியே முருகன். முருகனுக்கு வள்ளி அம்மை யார் இச்சா சக்தியும், தெய்வயானை கிரியா சக்தியும், கையிலேந்திய வேல் ஞானசக்தியும் ஆவர்.

முருகனை வணங்கிய பின் சண்டேசரை வணங்கல் வேண்டும். சண்டேசர் சிவாலய தரிசன பலனை அளிப் பவர் என்று கருதுதல் மரபு; ஆன்மாக்களுக்கு இறை

யருளில் பூரண நம்பிக்கை யூட்டுபவர். இப்பெருமான் சாதாரணக் குழந்தையாகப் பிறந்து வேறு நினைவில்லாத அன்பு காரணமாகச் சிவாலயந்தோறும் தனிக்கோயிலும், கிரீடமும், போனகமும், சிவபெருமானது மாலையும், ஈசன் என்ற பெயரும் பெற்றிருப்பது, ஆன்மாக்கள் அனை வருக்குமே உய்தி உண்டு என்ற பெரு நம்பிக்கையை ஊட்டு வதாகும்.

விநாயகருக்கு வழிபாடு செய்யும்போது, தலையில் குட்டிக்கொண்டு தோப்புக்கரணம் போடுவது மரபு. சண்டேசர் சந்நிதியில் விரலைச் சொடித்து அவருக்கு விழிப்பூட்டிக் கும்பிடவேண்டும். சிவபெருமான் அனுக்கிரகம் செய்ய, எந்தநேரமும் அவரது திருவருளிலே இவர் தோய்ந்திருப் பவர் ஆதலால், இவருக்கு விழிப்பூட்டி அறிவிக்க வேண்டு மென்பது கருத்து.

சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்ற நால்வர் பாடிய அருட்பாசுரங்கள் இன்று சைவத்தின் உயிர் நாடி. இப்பாசுரங்கள், ஓர் ஐந்நூறு வருஷ காலம் சோழ மன்னரைத் தமிழ் நாடெங்கும் பெருங் கோயில்களைக் கற்றளிகளாக எடுத்துப் பரிபாலிக்குமாறு தூண்டின. இக் கோயில்களாலேயே இன்று சைவசமயம் உயிர்த்தத்துவம் ததும்பிக் கொண்டிருக்கிறது. ஆகவே, நால்வருடைய கொடையே இன்றைய சைவம் என்பது பிழையாகாது. எனவே, சிவாலயத்தில் சண்டேசர் வழிபாட்டுக்கு முன், நால்வர் வழிபாடு செய்யத் தக்கது.

இந்த அளவு வழிபாடு எல்லாக் கோயில்களிலும் நிக ழத்தக்கதாகும். அம்பிகையின் கோயில் பொதுவாக சுவாமி சந்நிதியின் வடபுறத்தில் தெற்கு நோக்கி இருக்கும். ஆனால் அம்பிகை பூசித்துத் திருமணம் கொண்டருளிய தலங்களில் சுவாமி கோயிலுக்குப் பக்கத்தில் தெற்கில் அல்லது வடக்கில் அம்பிகை கோயில் கிழக்கு நோக்கி

யிருப்பதும், தலவிசேடங் காரணமாக அம்பிகை வெவ்வேறு இடத்தில் வேறுதிசை நோக்கியிருப்பதும், புறத்தே தனிக் கோயிலில் இருப்பதும் உண்டு. சாதாரணக் கோயில்கள் அனைத்திலும் அர்த்த மண்டபம், கருவறை இவற்றின் தென் புறக் கோட்டங்களில் நர்த்தன கணபதி, நடராசர் அல்லது ஜுரஹரேசுவரர் (இவரருகே பேய்வடிவங் கொண்ட காரைக்கால் அம்மையார் வடிவம் இருப்பது மரபு), அகத்தியர், தக்ஷிணாமூர்த்தி என்ற முறையில் அமைந் திருப்பர். மேல்புறத்தில் மையக்கோட்டத்தில் லிங்கோத் பவரேனும், திருமாலேனும் இருப்பர். வடபுறக் கோட்டங் களில் கோமுகையின் மீது பிரமனும், அடுத்து துர்க்கையும் இருப்பர். பின்னும் பிக்ஷாடனர் முதலியோர் இருப்பதும் உண்டு. சனி மூலையில் பைரவர், சனி, சந்திரன், சூரியன் போன்றோர் இருப்பதும் உண்டு. முதல் பிராகாரத்தில் நிருதி திசையில் தனி விநாயகர் கோயிலும், கருவறைக்கு நேர் பின்னே முருகர் கோயிலும், வாயு திசையில் இலக்குமி கோயிலும் எல்லா இடங்களிலும் இருக்கும். பெரிய கோயில்களுக்கு ஐந்து பிராகாரங்கள் சொல்வர். உட்பிரா காரத்தின் வடபுறத்தில், சண்டேசர் சுவாமி திசையை நோக்கியவாறு தனிக்கோயிலில் இருப்பர். நால்வரும் அறுபத்து மூவரும் வசதி உள்ள இடங்களில் தென் திரு மாளிகைச் சுற்றில் இருப்பர். இதுவே பொதுவான கோயில்களின் அமைப்பு. சிறப்பான கோயில்களில் இன்னும் அதிகமான மகேசுவர மூர்த்தங்கள் இருக்கும்.

## மற்றவை

சிவபெருமானுக்குரியது இடபவாகனம். இதுவும் சைவர் வழிபாட்டுக்கும், போற்றுதலுக்கும் உரியது. இந்திய மண்ணில், மனித வாழ்க்கைக்கு எல்லாவிதத்திலும் உதவி யது ஆனினம்—பசுவும் காளையும்; இரண்டையும் வழிபாட் டுக்குரியனவாய்ச் சைவர் கொண்டமை பொருத்தமே. தரும

தேவதையே இடப வடிவம் கொண்டு பெருமானைத் தாங்குகிறது; பெருமான் தருமத்தைக் காப்பவன்; ஆதலால் என்றும் அவ் இடபமே வாகனமாகும். சிவபெருமான் திரிபுர சங்காரம் செய்த காலத்தில், எல்லாத் தேவதைகளையும் உறுப்பாகக் கொண்ட தேர், அத்தேவதைகளின் கர்வம் காரணமாகப் பொடியாக நொறுங்கியபோது, காத்தற் கடவுளாகிய திருமால் இடபவாகனமாகப் பெருமானைத் தாங்கினர். இடபம் வேறு, திரு நந்தி தேவர் வேறு. இவர் சிவகணத் தலைவர், ஞான பரம்பரைக்கு முதல்வர்.

சிவாலயங்களில் நவக்கிரகங்களுக்கு இடமில்லை. நவக்கிரகங்களை ஒரு பொருளாக எண்ணி வழிபடுவது சைவருக்கு உரியதன்று. சுமார்த்தப் பிராமணக் கலப்பினுல் மிகப் பலவான கோயில்களில் இன்று நவக்கிரகப் பிரதிஷ்டை ஏற்பட்டிருக்கிறது. பெருமான் திருமணம் கொண்டருளிய கோயில்களில், நவக்கிரகங்களும் திருமணம் காண வந்தார்களென்று ஒரே வரிசையில் அமைந்திருக்கக் காணலாம். மற்றப்படியுள்ள நவக்கிரகங்கள் சிவாலயங்களில் புதிதாகச் சேர்க்கப்பட்டவையே.

சைவ சமயத்தில், திருக்கோயிலும் அதன்கண் எழுந்தருளியிருக்கும் மூர்த்தியும் அக்கோயிலுக்குரிய தீர்த்தமும் சிறப்புடையவை. பெரிய கோயில்களில் சிவகங்கையாகிய தீர்த்தம் மதில் சுவருக்கு உட்புறமே இருக்கும். மற்ற இடங்களில் சந்நிதிக்கு எதிர்ப்புறத்திலும், கோபுரவாயிலுக்கு வெளியிலும், பெரிய தீர்த்தமாக இருப்பதுண்டு. தீர்த்தத்தில் மூழ்கி வழிபடுதல் சிறப்பு. முக்குள தீர்த்த ஸ்நான விசேடத்தால் மெய்கண்டார் பிறந்தார் என்பது நினைவு கூரத்தக்கது. திருத்துருத்தி சிவகங்கைத் தீர்த்தம் சுந்தரருக்கு உடம்பின் பிணி போக்கியது. மூர்த்தி தலம் தீர்த்தம் என்ற தொடரும் காண்க. தீர்த்தச் சிறப்பைத் தலபுராணம் கூறும்.

தல விருட்ச வழிபாடும் சிறப்புடையது. தல விருட்சம் கோயில்களின் வடபிராகாரத்தில் இருப்பது பொது வழக்கு. சரித்திரம் காணுத பழங்காலத்தில், சிவபிரான் அந்தந்தத் தலத்திலும் ஒரு மரத்தினடியில் அருவுருவத் திருமேனியாக ஒரு பக்தருக்குக் காட்சியருளினர். அதுமுதல் அவ்வத் தலத்தில் சிவ வழிபாட்டோடு தலவிருட்ச வழிபாடும் ஒன்றியுள்ளது.

வழிபடச் செல்வோர் நீராடிப் புதிய ஆடை உடுத்து, திருநீறு அக்கமாலை அணிந்து, திருவைந்தெழுத்து ஓதிச் சென்று வழிபடுவது முறையும் மிக்க சிறப்புமாகும். நாள் தோறும் தரிசித்தலே முறை; இயலாதவர்கள் சிறப்பு நாட்களிலேனும் தரிசித்தல் வேண்டும். தரிசனம் முடிந்தபின் பிரதக்ஷிணம் செய்வது முக்கியம்; குறைந்தது மூன்று முறையேனும் செய்யவேண்டும். செய்தபின், பலிபீடத்தின் வெளிப்புறமாக எட்டுறுப்பும் நிலந்தோய நமஸ்காரம்செய்து, ஓரிடத்தில் அமர்ந்து சிவமந்திரத்தை முடிந்த உரு செபித்துப் பிறகு வெளியே போகவேண்டும். இங்குச் சொல்லப் பட்டுள்ள தரிசன முறைகளும், கோயிலில் செய்யத்தகாத குற்றங்கள் முதலியனவும், சைவ நூல்களில் விரிவாகச் சொல்லப்பட்டிருக்கும்.

திருக்கோயிலில் பெருமான் உற்சவம் கொண்டு வீதி உலா வரும்போது மூலவரைச் சென்று தரிசித்தல் முறையன்று; உலா வரும் பெருமானையே தரிசித்தல் வேண்டும்.

## தனி வழிபாடும் கூட்டு வழிபாடும்

ஆலயம் சென்று வழிபடுவது பற்றிச் சில கருத்துக்களை அறிவது பயனுடையது. உண்மையாக ஆண்டவனுடைய சிவலிங்க வடிவத்தையோ வேறு உருவத் திருமேனியையோ உள்ளன்போடு வழிபட எண்ணுபவர், பொதுவாக, சந்தடியில்லாத நேரத்தில் சென்று

வழிபடுவது தான் மனத்தைக் குவியச் செய்யும். இன்று நம் மக்கள் வழிபாட்டின்போது அமைதியாக வழிபடும் முறையைக் கடைப்பிடிக்க அறியார்கள். ஆதலால், கூட்டத்தோடு சென்று தரிசிக்கும்போது அமைதி கிடைக் காது. தரிசித்தோம் என்ற ஓர் நினைவு மட்டும் இருக்குமே தவிர, பூரண தரிசன பலன் கிடைப்பது அரிது. எவ்வளவு பக்குவம் உடையவராயினும், கூட்டத்தினால் ஏற்படும் ஆர வாரத்திலும் நெருக்கடியிலும் மனம் சிதறுண்டு போய், தரிசன சமயத்தில் தெய்வ நினைவு சற்றே குறைந்துதான் போகிறது. ஆதலால், ஒத்த மனத்தவர் சிலரோடு மாத்திரம் சென்று ஏகாந்தமாக வழிபடுதல் சிறப்பு; இதில் தரிசன இன்பமும் மன ஒடுக்கமும் அதிகம். முடிந்தால் தேவாரப் பதிகங்களை இசையோடு ஓதவல்லவர் உடன் இருந்து ஓதுவது மேலானது. இத்தகைய ஒருநிலை, கோயிலில் சிறப்பு விழா இல்லாத சமயம், தனியாகத் தரிசிக்கும்போது தான் கிடைக்கும்.

சாமானிய மக்கள் கற்சிலைகளுக்கு வெள்ளிக் கவசம் முதலியன சாத்தி வழிபட ஆசைப்படுகிறார்கள். அறிவில் தாழ்ந்த நிலையையே இது காட்டுகிறது. வேறு சொல்வது மிகை.

இது வரையில் இறைவழிபாட்டில் ஆலய ஏகாந்த சேவையின் சிறப்பை ஒருவாறு கூறினோம். எனினும், பெரு விழாக்களில் பெருங்கூட்டத்தில் கலந்து வழிபடுவதில் ஒரு தனிச்சிறப்பு இருக்கவே செய்கிறது. உதாரணமாக, தில்லை நடராசப் பெருமானுடைய திருவாதிரை நடனம், குடந்தை கும்பேசுவரருடைய மகாமக தீர்த்த விழா, திருவண்ணாமலை அண்ணாமலையாருடைய கார்த்திகை தீபவிழா, மாயூரநாத சுவாமியின் துலா முழுக்கு விழா, சீகாழி திருஞானசம்பந்த ருடைய திருமுலைப்பால் விழா போன்றவற்றைக் குறிப்பிட லாம். இங்கெல்லாம் பல்லாயிரக்கணக்கான ஜனத்திரள்

ஒன்று சேர்ந்து ஒரே நோக்கத்தோடு, ஹரஹர என்ற ஒரே முழக்கத்தோடு, இறைவன் திருவுருவம் வருகின்ற திசையை நோக்கிச் சிந்தனையையும் பார்வையையும் செலுத்தி மெய்ம் மறந்திருப்பது மறக்க முடியாத ஒரு காட்சியாகும். தெய்வ நம்பிக்கை அற்றவர்கூட அந்த நேரம் ஒரு பரவசநிலை அடைகிறார். இறைவன் படைத்த பலகோடி உயிர்களில் தானும் அற்பமான ஓர் உயிர் என்ற உணர்வு தோன்றி, யான் என்னும் அகந்தையை அந்த நேரத்துக்காவது போக்கித் தெய்வ அருளுக்குப் பாத்திரமாகும் பாதையில், சிறிது நேர விழாக்காட்சி அவரைச் செலுத்துகிறது. இது பெறு தற்கரிய ஓர் அனுபவம். இவ்வனுபவம் இத்தகைய பெரு விழாக்களிலன்றிப் பிறசமயங்களில் எழாது. ஆதலால் சைவ ராயுள்ளோர் பெருவிழாக்களில் கலந்து வழிபடுதலும் அவசியமாகும். குறிப்பிடத்தக்க மற்றொரு பெருவிழா, கும்பாபிஷேக விழா.

சைவ மக்கள் ஒரு கருத்தை நன்குணர்தல் வேண்டும். சிவாலயம் சைவ மக்களுக்கே உரியது. சிவாலய வழிபாடு சைவர்களின் சாத்திர நூல்களில் விதிக்கப்பட்டது. அகம் பிரம்மாஸ்மி என்ற கொள்கையுடைய பிராமணருக்கு ஆலய வழிபாடு அவர்கள் சாத்திரத்தில் சொல்லப் பெறவில்லை. அவர்களாக, அபிமானத்தால், சைவர் செய்யும் வழி பாட்டைப் பார்த்துத் தாங்களும் சிவவழிபாட்டை மேற் கொண்டார்கள். இன்னும் பிராமணர் குடியிருப்புக்களில் நாராயணன் கோயில் கட்டுவார்களேயன்றி, சிவன் கோயில் கட்டுவது மிகவும் அருமை.

சிவாசாரியர் பிராமணர் அல்லர்; இவர்களைச் சிவ வேதியர் என்று கூறுவது உபசாரம். இவர்கள் முப்போதும் திருமேனி தீண்டும் அதிகாரம் பெற்றவர்கள்; பிராமணருக்கு இவ்வதிகாரம் இல்லை. ஆகவே, சிவாசாரியர் சைவாசாரத் தில் பிராமணரினும் உயர்வானவர்கள் என்பது சைவர்

கருத்து. இவர்கள் தங்களை வெறும் பிராமணர் என்று சொல்லித் தாழ்த்திக் கொள்வது வருந்தத்தக்கது. இந்த உண்மை நிலையை இனியேனும் சைவரும் சிவாசாரியரும் உணர்ந்து ஒழுகுவார்களாக.

## உருவ வழிபாட்டின் தத்துவம்

இனி, உருவவழிபாட்டைக் குறித்துச் சில கருத்துக் களைக் கூறி இந்த அத்தியாயத்தை முடிப்போம். உருவ வழி பாட்டை விக்கிரக ஆராதனை என்று சொல்லுகிறோம். விக் கிரக ஆராதனையைக் குறித்துப் பிறர் குறை கூறும்போது தங்கள் சமயநிலை இன்னதென்று அறியாமையினால் சைவர் பலர் தலைகுனியக் காண்கிறோம். இது மிக்க அவலநிலை.

உலகத்தில் மக்கள் தோன்றிய நாளாக எல்லா மதங் களிலும் உருவவழிபாடு என்பது, விக்கிரக ஆராதனை என்று சொன்னாலும் அல்லது வேறு பெயர் சொன்னாலும், ஏதோ ஒரு வகையில் இருந்து வந்திருக்கிறது. உலகத்தில் தோன்றிய எந்தச் சமயமும் இதற்கு விலக்கு அன்று. இந்து மதத்தின் எல்லாப் பிரிவுகளிலும் ஆரம்ப முதல் உருவ வழிபாடு இருந்தே வந்திருக்கிறது. காலப் போக்கில் புரட்சிகள் தோன்றி உருவ வழிபாட்டைப் போக்கும் முயற்சி ஒவ்வொரு மதத்திலும் நடைபெற்று இருக்கிறது. எனினும், அம் முயற்சிகள் தோல்வியுற்று, உருவ வழிபாடு ஏதோ ஒருவகையில் ஆங்காங்கு நிலவியே வருகிறது. பொதுவாக ஒரு கருத்தைச் சொல்லலாம். உலகெங்கும், எல்லா மக் களிடையேயும், ஏதோ ஒரு தத்துவம் இடையீடில்லாமல் நிலைத்து இருக்கிறது என்றால், அதில் அழிக்க முடியாத ஓர் உயிர்ப் பண்பு பொருந்தியிருக்கின்றது என்றே நாம் முடிவு செய்ய வேண்டும். அவசியமானால் அந்தத் தத்துவத்தை நாம் செம்மைப்படுத்த முயலவேண்டுமேயன்றி, அதை அடி யோடு அழிக்க முயல்வது அறிவுடைமையாகாது. உருவ வழிபாடு அத்தகைய ஒரு தத்துவம்.

நாமரூபம் கடந்த நிர்க்குணமான பரம்பொருளை, கருவி காரணங்களோடு தொழிற்படுகின்ற மனிதனுடைய மனம், வேதங்கள் சொல்வது போல, இதுவல்ல இதுவல்ல என்று சொல்லக்கூடுமேயன்றி, இதுதான் என்று சொல்லத்தக்க தாக ஒன்றுமில்லை. ஆதலால், இதுதான் என்று சொல்லத் தக்க ஒரு நிலை வேண்டி, நாமரூபம் உடைய ஒரு பொருள் ஏற்பட்டது. இதைச் சகுணத் திருமேனி என்றும், உருவத் திருமேனி என்றும் சொல்லுகிறோம். இந்தத் திருமேனியைத் தான் நம் மனம் இந்திரியங்களால் கண்டு வழிடவும் அனுப பவிக்கவும் முடியும்; இதைத்தான் இதய கமலத்தில் எழுந் தருளுவிக்க முடியும்; இதன் திருவடியில்தான் துள்ளுமறியாம் மனத்தைப் பலிகொடுக்க முடியும். இறைவனுக்கு என்ன என்ன சிறப்புக்கள் இருக்குமென்று கற்பனை செய்கிறோமோ அத்தனையும் இந்த உருவத்துக்கு ஏற்றுகிறோம்.

ஆகவே, சைவர் கோயிலில் உருவத்திருமேனியைக் காணும்போது, அங்குக் கல்லையும் செம்பையும் காணவில்லை; சர்வ வியாபகமாயும் சர்வ சக்திமானுயும், நித்தியனுயும் ஞான மயனுயும் கருணமூர்த்தியாயும் உள்ள பரம்பொருளையே காண்கிறார்: உருவத்தினுள் அருவமான பொருளைக் காண முடிகிறது. சைவத்தின் மற்றொரு சிறப்பு, அருவமும் அல்லாத தாய், உருவமும் அல்லாததாய், அருவுருவமாயுள்ள சிவ லிங்கத் திருமேனியையே வழிபடுகிறோம்: அருவுருவம் என்ற ஒரு படைப்பு மிக்க ஆச்சரியகரமானது. மனிதன் கல்லையோ செம்பையோ அல்லது ஒரு மரத்தையோ அதுவாகவே வழி படும்போது, அது அஞ்ஞானம் குடிகொண்ட நிலை. ஆனல், அதையே சர்வ வியாபகமான இறைவனின் வெளிப்பாட்டுக் குரிய இடமாகக் கருதி வழிபடும்போது, அளப்பருங் குண முடைய பெருமானுடைய இயல்பில் அவரவர் சக்திக்கு ஏற்ற அளவு மனத்தில் நிறுத்த இது உதவுகிறது. உருவம் இல்லாவிட்டால் தியானம் இல்லை. சொரூபமற்றதைத் தியானிக்கமுடியாது. தியானத்தின் மூலம் மனிதன் வளர்

வதற்கு உருவத் திருமேனியே உதவுகிறது. அருவுருவத் திருமேனி, அருவமாயுள்ள பரம்பொருளைச் சுட்டிக் காட்டு கிறது.

உருவவழிபாட்டில் சமூகம் முழுமையும் கலந்துகொள் கிறது. பலருடைய மனம் ஒரு பொருளில் வந்து குவிகிறது. எண்ணத்திற்கு ஆற்றல் உண்டு என்று சொல்லுவார்கள். பலருடைய எண்ணங்கள் ஒருமுகப்படும்போது, அந்த இடத்தில் தெய்வ சாந்நித்தியம் குடிகொள்கிறது. இப்படி பக்திக்கு நிலைக்களமாக அமைகின்ற உருவத்திருமேனி யானது, தலைமுறை தலைமுறையாக மனித குலத்தை ஆன்ம நெறியில் மேலும் மேலும் உயர்த்த வல்லதாக அமைகிறது.

கிரேக்கதேசம் போன்ற நாடுகளில், பொன்னிலும் வெள்ளியிலும், தந்தத்திலும் தெய்வ வடிவங்களை அமைத் தார்கள். அங்கு, அமைத்த மூலப் பொருளுக்கே பெரு மதிப்பு உண்டு. ஆனால் நம் நாட்டில்தான், மதிப்பில்லாத கல்லாலும் செம்பாலும் தெய்வ வடிவத்தை நிர்மாணித்திருக் கிறோம். இங்கு மூலப் பொருளுக்கு மதிப்பில்லை; எண்ணத் தினால்தான் மதிப்பு ஏறுகிறது. அந்தப் பொருளை ஒரு கலைஞன் தன் கைத்திறமையால் ஒரு கற்பனைத் தெய்வ வடிவமாக்கும்போது, அது பேரழகும் மதிப்பும் உடைய தாகிறது. மக்களுடைய பக்தி அதில் செல்லச் செல்ல, அது தெய்வத்தன்மை உடையதாகவும் ஆகிறது. கல்லிலும் செம் பிலும் ஒரு சிற்பி தெய்வவடிவத்தை அமைக்க முற்படும் போது, அவன், இரவிவர்மா படம் போல, உள்ள ஒரு உரு வத்தை அப்படியே பார்த்துச் செய்யவில்லை; தன் கற்பனை யினால் ஒரு லக்ஷ்ய வடிவம் அமைக்கிறான். இந்த லக்ஷ்ய வடிவம், உண்மையான லக்ஷ்யத்தை நோக்கி நம்மைச் செலுத்த உதவுகிறது.

அன்றியும், நம் பெண்மக்கள், நினைத்த மாத்திரத்தில் தெய்வத்தைச் சிருஷ்டித்து விடுகிறார்கள். ஒரு பிடிமணல், கொஞ்சம் மஞ்சள் அல்லது சந்தனம், அல்லது சிறிதளவு

சாணம்—இவை ஒரே விநாடியில் தெய்வத்தன்மை பெற்று விடுகின்றன. இது எப்படி சாத்தியம்? நெடுங்காலமாக பக்தி இரத்தத்தில் ஊறி ஊறி, ஒரே கணத்தில் மண்ணையும் சாணத்தையும் மறக்கச் செய்து, எங்கும் நிறைந்த ஒரே பரம்பொருளை அந்த நேரம் அங்குக் காணும் அகக்காட்சியைத் தருகிறது: அந்தப் பெண்களுக்கு மட்டுமல்ல, காண்கிற எல்லோருக்குந்தான். இது மிகப் பெரிய உண்மையான சாதனை. இது வெறும் குறியீடு என்று கருதி ஒதுக்க முயல்வது அறிவுடைமையாகாது.

கணித சாஸ்திரம் முழுமையுமே குறியீடுதான். அந்தக் குறியீட்டு மூலமாக அறிவை வளர்த்து வளர்த்து, படிகள் ஒவ்வொன்றாகக் கடந்து, கற்பனைக் கோட்டையாகக் கட்டிக் கட்டி, மனிதன் சந்திரமண்டலம் வரை இன்று போக முடிந்திருக்கிறது; போவது இன்று உண்மை. கற்பனை கட்டுமுன் முடிவை யாரும் கண்ணால் கண்டதில்லை; சொன்னாலும் நம்ப முடிவதில்லை. ஆனால் கற்பனையே, உண்மையாகக் காணுகிற நிலையைக் கைகூடச் செய்திருக்கிறது. ஆகவே, கணிதக் குறியீடு பொய் என்று சொல்ல முடியாது. இவற்றைப் புறக்கண் கொண்டு திட்டமாகக் காண்கிறோம்.

இதுபோலவே அகக்கண் கொண்டு காணவேண்டிய ஆரம்பக் குறியீடாகிய உருவத் திருமேனி, ஆன்மநெறியில் ஆரம்ப நிலை. இதன் முடிவானநிலை, பரம்பொருள் காட்சியான சிவானுபவம். கணித சாஸ்திரத்தில் குறியீடுகள் பொருளல்ல. அவை உணர்த்துகின்ற இயற்கை உண்மைகளே பொருள். அதுபோல, விக்கிரக ஆராதனையிலும், விக்கிரகம் பொருளன்று; அது குறியீடாக நின்ற பேருண்மையே பொருள். நாம் விக்கிரகத்தை வணங்குகிறோம், உருவவழிபாடு செய்கிறோம் என்றால், அவ்வழிபாடு நம் உள்ளத்திலிருந்து எழுந்து, காணும் உருவத்தையும் கடந்து. அறிய முடியாத ஒரு பொருளைச் சென்று பற்றுகிறது என்பதை நன்கு உணர்தல் வேண்டும்.

# சைவச் சடங்குகள்

## சடங்குகளின் அவசியம்

*கிரியைகள் அல்லது சடங்குகள் எல்லாச் சமயங் களிலும் உள்ளன. இவை சமய தத்துவத்துக்குப் போர்த்திய ஒரு போர்வையாகும். மக்களில் பெரும்பான்மையோர் இந்தப் போர்வையை மட்டுமே அறிவார்கள்; உள்ளே பொதிந்திருக்கும் உண்மையை அறிய மாட்டார்கள். இதற்கு அவரவர் பக்குவமே காரணமாகும். ஆனால், போர்வையில் லாமல் சமய தத்துவம் மட்டுமே தனித்து நின்று மக்களை நல்வழிப் படுத்தியதில்லை.*

*உள்ளிருப்பது அரிசியே யாயினும், அதை உமி மூடி யிருப்பது போல, சாரமான தத்துவத்தைச் சக்கையான சடங்கு மூடியிருக்கிறது. ஞானிக்கு மட்டுமே சடங்கு சக்கை யாகத் தோற்றும்; ஏனையோருக்கு இது உயிருள்ள உண்மைப் பொருளே. ஞானிகள் வித்தைக் குற்றி அரிசியை எடுத்து வறுத்து உண்டு விடுகிறார்கள்; அவர்களுக்கு வினை கிளைப்பதில்லை; பிறவி இல்லை. ஆனால் ஞானிகளல்லாத பிறர் போகத்தை விரும்புகிறார்கள்; மேலும் மேலும் தானியத்தைத் தேடுகிறார்கள். ஆகவே உமியோடு அரிசியைப் பேணிப் பாதுகாத்து முளைக்கவைத்து மேலும் மேலும் பெருக்குகிறார் கள். ஆதலால் அவர்களுக்கு உமி முக்கியம்; ஆகவே சடங்கு கள் இன்றியமையாதவை.*

## சடங்குகளின் பயன்

*சமயச் சடங்குகளுக்கு, சமூக வாழ்க்கையின் பல துறை களிலும் பொருள் காண முடியும். சடங்குகளே சமயத்தைச் சார்ந்த அனைவரையும் ஒற்றுமைப் படுத்துகின்றன. கூட்டு*

வழிபாட்டில் இதை நன்கு காணலாம். அப்படியே, குறித்த ஒரு சமுதாயத்தில் சமயவுணர்வின் தொடர்பு நிலைபெற்றிருப்பதற்கு முக்கிய சாதனம் சடங்குகளே. இவை சென்ற காலத்தில் வாழ்ந்த மக்கள் கொண்டிருந்த கொள்கைகளும் நம்பிக்கைகளும் இன்றுள்ள மக்களிடையே உயிரோடு நின்று நிலவவும், எதிர் காலத்தில் தொடர்ந்து மக்களை இயக்கி நல்வழிப் படுத்தவும், ஆதாரமாய் இருக்கின்றன. தில்லைத் திருநடனம் சைவ மக்களுக்கு மிகவும் புனிதமானது. இதைத் தரிசிப்பதற்காக இன்றும் பல்லாயிரம் மக்கள் எத்தனையோ வகையான அரசியல் தடைகளையும் மீறி வந்து கொண்டே இருக்கிறார்கள்-நோயோ, பயணத்துன்பமோ, உணவுக் கஷ்டமோ, பணத் தொந்தரவோ, அவர்களைத் தடுத்து நிறுத்த முடியவில்லை.

அடுத்து சடங்குகள், மக்கள் கொண்டுள்ள சமய நம்பிக்கைக்குக் குறியீடுகளாக அமைந்திருப்பதை நாம் உணரலாம். இறைவனுக்கு அளிக்கும் நைவேத்தியம் நம் நன்றியறிதலின் காணிக்கை. என்றும் தூயவனாக இருக்கும் ஆண்டவனுக்குச் செய்யும் அபிஷேகமும் தூபதீபமும், நம்மைப் புறத்திலும் அகத்திலும் தூய்மை செய்து கொள்வதைக் குறிக்கும் அடையாளங்களே. கருத்தளவில் மட்டும் பக்தி உணர்வின் வெளிப்பாட்டிற்கு வழியில்லை. ஆனால் புறத்தே செய்யும் சடங்குகளால் பக்தி உணர்வு, அமைதியும் நிறைவும் பெறுகின்றது. இது மனோதத்துவரீதியான உண்மை. மேலும், சைவருடைய கலை உணர்வை இவை எவ்வளவு தூரம் பேணி வளர்த்தன என்பதற்கு, இன்றுள்ள கோயில்களும் மூர்த்திகளும் கோயில் மேள இசையும் சான்று பகரும். சடங்குகள் இல்லாவிட்டால் இக்கலைகள் விளக்கம் பெற வாயில் இருந்திருக்காது.

அன்றியும், இவை சிறந்த ஒழுக்கத்தை வளர்க்க உதவுகின்றன. வேறு வகையிலே அமையப் பெறாத ஒழுங்கும்,

அடக்கமும், பணிவும், தியாகமும், ஒற்றுமையும் சடங்கு களால் அமைகின்றன. தேச பக்தி-நாட்டின் சுதந்திரம் என்ற ஓர் உணர்ச்சி சாமானிய மக்களை எவ்வளவு ஒற்றுமைப் படுத்திற்று, எத்தகைய தியாகத்துக்குத் தூண்டிற்று, எவ்வளவு சிறந்த வீரர்களாக்கிற்று என்று இந்த இருப தாம் நூற்றாண்டில் கண் முன்னே கண்டோம். இது போலவே, சமயச் சடங்குகள் பல்லாயிரம் ஆண்டுகளாக, எல்லா மக்களையும் ஒற்றுமைப் படுத்தி, அவர்களுடைய உணர்ச்சிகளையும் நோக்கங்களையும் ஒருமுகமாக்கி, சமூக நல்வாழ்வுக்கும் மேம்பாட்டுக்கும் ஆ தா ர மா ய் இருந்து வந்திருக்கின்றன.

சடங்குகள் இறை அனுபவம் ஆகமாட்டா. ஞான அனு பவத்தின் மூலம்தான் ஆன்மா இறைவனை உணர்ந்து தானும் அவனோடு ஒன்றி ஒத்த வியாபகத் தன்மைபெறுகிறான். இந்த ஒருமைப்பாடு கை கூடுவதற்கு, தக்க அக அமைதியையும் புற அமைதியையும் சூழ்நிலையையும் சடங்குகள் அமைத்துத் தருகின்றன. இறைவன் அறியப் படாதவன், அளவு படா தவன். அளவு பட்ட கருவிகளைக் கொண்டு அவனை அறிய முயல்கிறோம். நம்முடைய சிற்றறிவால் அறிய முடியவில்லை. சடங்குகளில் சில பகுதி நாம் அறிவன, சில பகுதி நம் அறி விற்கு உட்படாதன. இந்த உட்படாத தன்மையே அறிய முடியாத இறைவனைக் குறிப்பினால் உணர்த்துகின்றது. நாம் அறிந்து விட்டோம் என்று சொல்ல முடியாது; சடங் குகள் காட்டி விட்டோம் என்று சொல்லவில்லை. ஆனாலும் ஒரு சுட்டு, ஒரு குறிப்பு மட்டும் உள்ளது. இதுவே சடங்கு களின் சிறப்பு. இந்த உணர்வானது மொழிக்கும் அப்பாற் பட்டது.

குடும்பத்திலும் சமுகத்திலும், மனித சமுதாயத்திலும் உள்ள சைவ சமயச் சடங்குகள் யாவை, அவை எத்தன்மை யானவை என்பதைச் சுருக்கமாக இங்குக் கூறலாம். சில

ஓரிடத்தில் வழங்கலாம், மற்றோரிடத்தில் வழங்காமற் போகலாம்; எனினும், இவை சைவமக்கள் அனைவருக்கும் பொது.

## வைதிகச் சடங்குகள்—சமூகம்

வைதிக கர்மாக்கள் பல விதிக்கப்பட்டுள்ளன. அவற்றுள் சைவரிடையே வழக்கிலுள்ளவை சிலவே. தனி மனிதன் வாழ்க்கையைப் பொறுத்த சில இங்குக் குறிப்பிடத் தக்கன. குழந்தை பிறக்கு முன்னும், அதாவது தாய் கருவுற்ற காலத்திலிருந்தே, இவை தொடங்குகின்றன. ஏழு மாத கர்ப்பமாயிருக்கும் போது தாய்க்கு ஒருகாப்பு விழாச் செய்கிறார்கள். இதை வளையல் காப்பு என்றும், பூச் சூட்டல் என்றும், சித்திரான்னம் அருத்துதல் என்றும் பல சமூகங்களில் பல பெயரோடு நடை பெறுகின்றது. கருத்து, தாயையும் கருவையும் தெய்வங்கள் காக்க என்று வேண்டுவ தொன்றே. குழந்தை பிறந்தவுடன் செய்யும் சடங்கு ஜாத கர்மம் என்று பெயர் பெறும். பிறந்த பதினோரும் நாள் இல்லத்தைச் சுத்தம் செய்து தெய்வத்தை வேண்டிக் குழந்தைக்குக் காப்புச் சூட்டுதல் ஒரு விழா. இது நாம கரணம் எனப்படும். அப்போது குழந்தைக்குப் பெயரிடுவார்கள். சில சமயம் இதை முதலாண்டு நிறைவு விழாவுடன் சேர்த்துச் செய்வதும் உண்டு.

இந்தக் காப்புவிழா மிகவும் புராதனமானது. பண்டைய தமிழ் நாட்டு வீரர் தாங்கள் போரிட்டுக் கொன்ற புலியின் பல்லைக் கோத்துத் தங்கள் பிள்ளைகளுக்கு வீர உணர்வு வர வேண்டும் என்பதற்காக அணிவித்தார்கள். பின்னர் காத்தற்கடவுளாகிய திருமாலின் பஞ்சாயுதங்களையும் (சங்கு சக்கரம் வில் கதை தண்டு) பொன்னிலமைத்துக் கோத்து அணிவித்தார்கள். இது ஐம்படைத் தாலி என்று பெயர் பெற்றது. இன்றைய மண விழாவில் அணிவிக்கும் திருமாங்கல்யம் இவ்வைம்படைத் தாலியின் சின்னமேயாகும்.

உரிய காலத்தில் தொட்டில் இடுதல் என்ற விழா அவரவர் வசதிக்கு ஏற்றபடி கொண்டாடப்படும். ஐந்து வயதில் வித்தியாரம்பம்; அதாவது பள்ளிக்கு வைத்தல்: இது பிரா மணர் செய்கின்ற உபநயனத்தை ஒத்தது.

வாழ்க்கையில் மிகவும் முக்கியமான சடங்கு அடுத்து வருகின்ற திருமணவிழா. மாணக்கன் தன் பிரம்சரிய நிலையில் கல்வி கற்று முடித்து, இல்லறத்தில் புகுவதற்கான பெரு விழாவே இது. இலக்கியங்களில் மணம் எண்வகை என்று விரிவாகச் சொல்லப்பட்டிருந்துங் கூட, சைவரிடையே இருந்தது ஒரேவகை; அதாவது குலத்தாலும் தகுதியாலும் ஒத்த நிலையில் இருக்கும் இரு குடும்பங்களில் உள்ள பெண்ணுக்கும் பிள்ளைக்கும், சுற்றத்தார், இடையில் இருந்து பொருத்தம் பார்த்து, அக்கினி சாட்சியாகச் செய்து முடி கின்ற விவாகம். பெண் வீட்டார் தங்களுடைய தகுதிக்கு ஏற்றவாறு வரிசைகள் அளிப்பர்; இது கட்டாயம் இல்லை. இக் கல்யாணம் மணமகன் வீட்டில் நடக்குமேயன்றி, மண மகள் வீட்டில் செய்வது கௌரவக் குறைவு என்ற கருத்து முன்பு நிலவி வந்தது. இத்திருமணம், கன்னிகாதானம் பாணிக்கிரகணம் முதலான பல வகையாக இருக்கும். புரோ கிதர் இருந்து அக்கினி சாட்சியாக மணம் நடத்தி வைப்பர். மண விழா இரண்டு மூன்று நாள் வரை நடைபெறும். நிறை நாழி விளக்கோடு மணமகளை இல்லத்தில் அழைத்தல், புத்தாடை உடுத்தல், மாலை மாற்றுதல், சப்தசதி மந்திரம் சொல்லுதல், திருமாலின் பஞ்சாயுதங்கள் அமைத்த பொன் தாலி கட்டுதல், அக்கினி வலம் வருதல், அம்மி மிதித்து அருந்ததி காட்டுதல் என்பன மண விழாவின் முக்கிய அம்சங்கள். சுற்றத்தார் அனைவரும் விழாவில் பங்கு கொள்வர்.

இறுதியாகச் சொல்லத்தக்கது, ஆன்மா இவ்வுலகை நீத்துப் பிரிந்து செல்லும் நிலையில் செய்யும் மரண காலத்துச்

சடங்குகளாகும். இவை உயிர் பிரிந்த இடத்திலும் மயானத்திலும் நடக்கும். மறுநாள் மயானத்தில் செய்கின்ற பால் தெளி என்ற கிரியை, சிதையைக் கலைத்து எலும்புகளைக் கிரியா பூர்வமாகச் சேர்த்து ஆற்றிலிடுதல். பதினாறும் நாள் கிரியை விரிவாகச் செய்யப்பெறும். இறந்த உயிருக்குப் பிறந்தது முதல் இறந்தது வரை விடுபட்டிருந்த கிரியைகள் எல்லாவற்றையும் தொகுத்துச் செய்து, அக்கினி பூர்வமாகத் தேவதைகளுக்குப் பிரீதி செய்து, பிராமணர்களுக்குத் தானம் வழங்கி, சிவாலய வழிபாடு செய்து, அடியவர்களுக்கு அமுது செய்வித்தலோடு சடங்குகள் முடிகின்றன.

சிராத்தம் என்பது இறந்த தின ஆண்டு விழா. இறந்து போன பெற்றோர் முதலிய பெரியவர்களின் நாளை ஆண்டு தோறும் நினைவு கூர்ந்து, அவர்களுடைய ஆன்மா சாந்தியடைய வேண்டிப் பிண்டக்கிரியைகள் செய்து, பிராமணர்களுக்குத் தானம் கொடுத்து, ஏழை மக்களுக்கு உணவு வழங்குவதோடு இந்தச் சடங்கு முடிவுறும். இது, இறந்து போன முதாதையரிடத்து வைத்திருந்த பெருமதிப்பையும் அன்பையும் காட்டும் அம்சம்.

## ஆன்மார்த்தம்

இதுவரை கூறியவை, சமூகத்தில் அங்கமாக வாழும் மனிதன் செய்யத்தக்க பௌதிக அல்லது சமூகச் சடங்குகள் ஆகும். இவையன்றி, சைவன் ஆன்மார்த்தமாகவும் பரார்த்தமாகவும் செய்யத்தக்க வைதிகச் சடங்குகள் பல உள்ளன. இவை ஆகமங்களில் விதிக்கப்பட்டவை. ஆன்மார்த்த வழிபாட்டில் முதன்மையானது காலையும் மாலையும் செய்யத் தக்க சந்தியாவந்தனம் என்னும் அனுட்டான மாகும். இது தீக்ஷை பெற்றோர் செய்தற்குரியது. இவ் வந்தனத்துள் முக்கிய பகுதி, சிவகாயத்திரி ஓதுதலும் உபதேசம் பெற்ற பஞ்சாக்கர மந்திரத்தைச் செபித்தலும் ஆகும். மந்திர

செபம் முதலியன தீக்ஷா குருவினிடம் உபதேசம் பெற்றுச் செய்தற்குரியன.

இவற்ருேடு சேர்த்துச் சொல்லத்தக்கது ஆன்மார்த்த பூசை என்னும் இஷ்ட தெய்வ வழிபாடு. இஷ்டதெய்வ மாவது, பரம் பொருளாகிய பரம சிவத்தின் மூர்த்தங்களுள் ஒன்று. உதாரணம்: கணபதி முருகன் அம்பிகை நடராசர் தக்ஷிணமூர்த்தி சரபமூர்த்தி போன்ருர். இவர்கள் பரம் பொருளின் ஒரு தோற்றமேயாவர்; வேறு தெய்வம் என்று எண்ணலாகாது. இச்சிறப்பு வடிவங்களை வாயினுல் பாடி மனத்தினுல் சிந்தித்துக் கையினுல் மலரிட்டு வழிபடுதல் எல்லாச் சித்திகளையும் தரும். பரம் பொருள் வேறு இஷ்ட தெய்வம் வேறு என்று கருதுதல் ஆகாது. 'எங்கும் நிறைந்துள்ள பரம் பொருள் எளியேன் பொருட்டாக இந்த வடிவைத்தாங்கி வந்து அருள் செய்கிறது' என்று மனத் தினுலே பாவித்து வழிபடுவதே முறை. இப்படி யாதொரு தெய்வங் கொண்டவருக்கெல்லாம் அங்கே மாதொரு பாகனுர் தாம் வந்தருளுவார். பொதுவாக ஆன்மார்த்த மூர்த்தி வழிபாடு சிவலிங்க வழிபாடே யாகும்.

வழிபாட்டுக் கிரியையில் பலவகை உபசாரங்கள் அடங்கியுள்ளன. தூப தீப நைவேத்தியம் என்ற மூன்று சாதாரணமானது; கந்தம் புஷ்பம் இரண்டையும் சேர்த்து ஐந்தாகக் கொள்வதுமுண்டு. கோயில் வழிபாட்டு முறை களில் மேற்கொள்வது சோடசோபசாரம் என்னும் பதினுறு உபசாரங்கள்; ஆன்மார்த்த வழிபாட்டுக்கும் இவை உரியன. இவை ஆவாகனம், ஸ்தாபனம், சந்நிதானம், சந்நிரோதனம், அவகுண்டனம், தேனுமுத்திரை, பாத்தியம் அருக்கியம், ஆசமனம் புஷ்பம், தூபம், தீபம், நைவேத்தியம், பானீயம், செபம், ஆராத்திரிகம் என்பன. இவற்றுக்கான கிரியையும் தத்துவார்த்தப் பொருளும் குறிப்பிடத்தக்கன. ஆவாகனம் தெய்வத்தை வரவேற்று இருக்கச் செய்தல். ஆசனம் –

ஆசனம் அளித்தல். ஸ்தாபனம்-நிலைபெற்று அமரச்செய்தல். சந்நிதானம்-தெய்வம் ஆவேசித்திருக்கச் செய்தல். சந்நிரோதனம்-தெய்வ சந்நிதானத்தை ஓரிடத்தே நிலை பெறுத்துகை. அவகுண்டனம்-மூடுதல், கவசம் அமைத்தல். தேனு முத்திரை-பசுவின் மடிவழியாக அமுததாரை பொழிவதாகப் பாவித்தல். இது வரை மூர்த்தத்தை வரவேற்று நிலை பெறுத்துகை. இனிவருவனவே அம்மூர்த்திக்கான உபசாரங்கள். பாத்தியம்—பாதம் அலம்ப நீர் அளித்தல். அர்க்கியம்—போற்றுதலுக்கு அடையாளமாகச் சந்தனமும் அரிசியும் கலந்த அட்சதையளித்தல். ஆசமனம்-வாய்சுத்திக்கு நீர் அளித்தல். ஸ்நானம்-நீராட்டு. வஸ்திரம்-ஆடையளித்தல். உபவீதம்-பூணூல் அளித்தல். கந்தம்-வாசனைப் பூச்சுக்கான சந்தனம் அளித்தல். புஷ்பம்—மலர் சூட்டல். தூபம்—நறும்புகை போடுதல். தீபம்-கற்பூரவொளி காட்டுதல். நைவேத்தியம்—அன்னமோ பழ வர்க்கமோ கற்கண்டு போன்ற பொருளோ உணவுக்காக அளித்தல். பானீயம்—குடித்தற்கான பொருள். செபம்—மந்திரசெபம். ஆராத்திரிகம்—துதிசெய்தல். முகவாசம், தாம்பூலம், தருப்பணம் (கண்ணடி), சத்திரம் (குடை), சாமரம் அளித்தல், நிருத்தம் கீதம், வாத்தியம் என்பன இன்னும் அதிகமாகவும் சொல்வதுண்டு. இப்புறச் செய்கைகளுக்குத் தத்துவமான பொருளும் சொல்லப்படும். மனிதரில் ஞானத்தாலும் ஒழுக்க சீலத்தாலும் பதவி போன்ற பிற தகுதிகளாலும் பெரியோராயுள்ளோரை வரவேற்று உபசாரம் செய்கின்ற முறையிலே, சர்வவல்லமையுடைய ஞானமயனை பரம்பொருளைத் தான் வழிபடுமிடத்தில் வருவித்து வரவேற்று உபசரித்துத் தன் வழிபாட்டை ஏற்றருளுமாறு பிரார்த்தித்தலே இவ்வுபசாரங்களின் பொருளாகும்.

## சிறு தெய்வ வழிபாடு

சிறு தெய்வ வழிபாடு என்பது சைவத்தில் இல்லை. மாரி முதலான சிறு தெய்வ வழிபாடு இஷ்ட தெய்வ வழிபாடு

ஆகாது. இஷ்ட தெய்வம் என்பது, நிஷ்களமாயுள்ள (அருவமாயுள்ள) பரம்பொருள் சகளீகரித்து (உருவமாய்) வந்த ஒரு மூர்த்தி வடிவமாகும். "சென்று நாம் சிறு தெய்வம் சேர்வோம் அல்லோம்—சிவபெருமான் திருவடியே சேரப் பெற்றோம்" என்றும், "செத்துச் செத்துப் பிறப்பதே தேவென்று—பத்தி செய் மனப்பாறைகட்கு ஏறுமோ?" என்றும் அப்பர் சுவாமிகள் பாடியிருப்பதைச் சிந்திக்க.

## தினசரிக் கடமை

சைவர் தினசரி நிறைவேற்றவேண்டிய கடமைகள் ஐந்து. ஒன்று, திருமுறைகளையும் சிவ புண்ணியக் கதைகளையும் ஓதல், ஓதுவித்துக் கேட்டல். இரண்டு, தெய்வத்துக்கு உபசாரம் தூபதீப நைவேத்தியம் வழங்குதல். மூன்று, பிதிர்களுக்குத் தர்ப்பணம்; இது சந்தியாவந்தனத்தின் போது நிறைவேறுகிறது. நான்கு ஆவுக்கொரு வாயுறை—பசுவுக்கு ஒரு பிடி புல் அளிக்கவேண்டும் என்று சொல்லினும், எல்லாச் சீவராசிகளிடத்திலும் அன்பு பூண்டு ஒழுகுவதே இதன் விரிந்த பொருளாகும். ஐந்து விருந்தோம்பல்; முன்பின் அறியாது தோன்றும் அதிதியை இறைவனாகவே கண்டு அவனுக்கு உணவளித்தல்; நாயன்மார் வரலாறுகளில் பல இவ் உணவளித்தலின் சிறப்பையே கூறுவன. இந்த ஐந்தும் சைவர் வாழ்க்கையில் நித்திய கருமங்களாக அமையும்.

## விரதம்

இனி விரதமும் உபவாசமும் சைவர் வாழ்க்கையில் முக்கிய இடம் பெறுகின்றன. சிறப்பான தினங்களில் தெய்வ வழிபாட்டுக்காக ஒரு வேளையோ ஒரு நாள் முழுதுமோ உணவு கொள்ளாமல் உபவாசம் இருத்தல் இன்றும் நடைபெற்று வருகிறது. காந்தியடிகள் தம் உடலையும் உள்ளத்தையும் தூய்மைப்படுத்தும் சாதனமாக உபவாசத்தைக் கொண்டார். சைவ சமயத்திலும் இவ்வாறே இருந்து வந்திருக்

கிறது. கருவி கரணங்களைச் சிறிதளவேனும் உள்முகமாய்த் திருப்பும் வாய்ப்பு இதனால் மனிதனுக்குக் கிடைக்கிறது. கட்டுப்பாட்டையும் தன்னடக்கத்தையும் வளர்க்க உபவாசங்களும் விரதமும் சிறந்த சாதனங்கள் என்பது எல்லோரும் ஒப்புக்கொண்டது. விரதம் என்பது, மனத்தைக் கட்டுப்படுத்தி உணவை விலக்கி அல்லது குறைத்து, முக்கரணங்களாலும் மெய்யன்போடு கடவுளை வழிபடுதல். சிவராத்திரி, சோமவாரம் பிரதோஷ விரதம் என்பன சிவபெருமானைக் குறித்து இருக்கும் விரதங்களாகும். தேவி விரதங்கள், சுக்கிரவார விரதம் நவராத்திரி விரதம் என்பன. விநாயக விரதங்களுள் சிறப்பானது சதுர்த்தி விரதம். சுப்பிரமணிய விரதங்களுள் சிறப்பானவை கார்த்திகை விரதமும் ஐப்பசி மாதத்துக் கந்த சஷ்டி விரதமுமாகும். இத்தினங்களில் அடியவர் முழுநாளும் உபவாசம் இருப்பதுண்டு.

## மாத விழாக்கள்

இவையன்றி, மாதந்தோறும் சைவர் கொண்டாடத் தக்க விழாக்கள் பல. தமிழ் மக்கள் தோன்றிய காலந் தொடங்கிச் சிறப்பாக வீட்டிலும் சமூகத்திலும் விழாக்கள் பல கொண்டாடி வந்துள்ளனர். சைவர் இவ்விழாக்களைத் தெய்வத்துக்கு அர்ப்பணம் செய்திருக்கிறார்கள். இவ்வாறு விழாக் கொள்ளும் காட்சியை இளம் பிள்ளையாகிய திருஞானசம்பந்தர் நன்கு கண்டு பாடியிருக்கிறார். இவர் கூறியுள்ள முறையிலேயே சில மாத விழாக்களை இங்குக் குறிப்பிடுவோம்.

புரட்டாசி மாதம்—சிவனடியாருக்குச் சிறப்பாக அமுது படைத்தல் (இன்று இவ்விழா வழக்கில் இல்லை). கல்வித் தெய்வமாகிய சரசுவதிக்கு வழிபாடு; இதுவே ஆயுதபூசை; அனாதி காலந் தொடங்கி மனித வாழ்விற்கும் நாகரிக வளர்ச்சிக்கும் உதவிவந்திருக்கிற உழுதொழிற் கருவிகளுக்கு வழிபாடு; "உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்"

என்ற நவீனக் கொள்கை அக் காலத்திலும் நம் மக்களிடம் நிலை பெற்றிருந்தது என்பதை இது நன்கு காட்டும். ஐப்பசி: ஓணவிழா. ஆலயங்களில் கொடியேற்றம் நிகழ்ந்ததுபோலும். மற்றொன்று இன்றைய தீபாவளி. கார்த்திகை: திருவண்ணாமலையில் அடிமுடி தேடிய வரலாறும் முருகனுடைய சிறப்பு வழிபாடும் இம்மாதக் கார்த்திகையில் விளக்கீட்டு விழாவாக நடைபெற்று வந்தன. இதுவே பண்டைய தீப-ஆவலி (வரிசை). மார்கழி: இறைவனைத் திருப்பள்ளி உணர்த்தலும் சந்நிதியில் திருவெம்பாவை பாடுதலும்; நடராசப் பெருமானுடைய ஆனந்தத் தாண்டவத்தை நிகழ்த்திக் காட்டுகின்ற திருவாதிரை உற்சவம். தை: பொங்கல் மாட்டுப் பொங்கல் ஆகிய சங்கராந்தி விழா. முற்காலத்தில் இது "நெய்ப் பூசு வெண் புழுக்கல் நேரிழையார் கொண்டாடும்—தைப்பூச" விழாவாக இருந்தது போலும். மாசி: கடலாட்டாகிய மகவிழா; சிவராத்திரி. பங்குனி: உத்திரநாள் ஒலி: விழா. சித்திரை: வருடப் பிறப்பு; அட்டமி விழா. வைகாசி. முருகனுக்குச் சிறப்பான விசாகம்; பொன்னூசல் விழா நடந்தது போலும். ஆனி: பவித்திரோற்சவமாகிய பெருஞ் சாந்தி விழா. ஆடி: காவிரிப் பெருக்கு. ஆவணி: விநாயக சதுர்த்தி. இவ்விழாக்கள் யாவும் சைவ மக்கள் தங்கள் இல்லத்திலும் கோயிலிலும் கூடி நடத்துகின்ற பெருவிழாக்களாயிருத்தல் விளங்கும்.

## உற்சவம்

சிவாலயங்களில் ஆண்டுக்கொரு முறை ஒரு பெருவிழா பத்து நாள் நடக்கும். இது பிரம்மோற்சவம் எனப்படும் (உத்-பெரிய; சவ-படைத்தல் முதலான காரியங்கள்.) இதற்குப் பலவகையாகத் தத்துவார்த்தம் கூறப்படும். சிறப்பான ஒன்றை மட்டும் அறிந்துகொள்வோம். எல்லாக் கோயில்களிலும் கொடி நிலை (துவஜஸ்தம்பம்) என்பது உண்டு. அரசியலில் கொடி என்பது ஓர் அரசனுடைய ஆற்றலுக்கு அடை.

யாளமாக அமைந்தமைபோல, சிவபெருமானுடைய இடபக் கொடியும் அவருடைய அருளாற்றலை உணர்த்தி நிற்பதாகும். விழாவின் தொடக்கம் புற்று மண் எடுத்தலும் முளையிடு தலும்: இவை சிருஷ்டி(படைப்பு)த் தொழிலைக் குறிக்கும் கிரியைகளாகும். பின் கொடியேற்றம். பெருமானுடைய கொடி இடபக் கொடி. இடபம் தருமதேவதையின் வடிவம், காத்தற் கடவுளான திருமாலேயாகும். இக்கொடியை உயர்த்துவது, உலக பந்தத்தில் சிக்கிய ஆன்மாவை விடு வித்துச் சிவனோடு பந்திப்பது என்ற பொருளது. ஆன்மாவை உயர்த்தி உலகுக்கு நல்வாழ்வு தருவதே இதன் நோக்கம். பத்து நாளும் யாகம் நடைபெறும். இங்கு உயிர்ப்பலி இல்லை; தமிழ் நாட்டில் என்றும் இருந்ததில்லை. இது ஸ்திதி என்னும் காத்தல் தொழிலின் அடையாளமாகும்.

இரண்டாம் நாள் சூரிய சந்திர பிரபைகளில் எழுந் தருளுவித்தல். இது இறைவன் சூரிய சந்திரர் மூலமாக உல குக்கு உயிரையும் இன்பத்தையும் ஊட்டுகிறான் என்பதைக் காட்டும். இதனால் குறிக்கப்பட்டது ஸ்திதி என்னும் காத்தல் தொழில். மூன்றும் நாள் அதிகார நந்தி, பூதவாகனம்; இது சங்காரத்தின் அடையாளம். நான்காம் நாள் நாக வாகனம். நாகமாவது சுழுமுனை நாடி. இது திரோபவமாகிய மறைப்பு. ஐந்தாம் திருவிழா இடப வாகனம். இது இறைவன் உயிர் களுக்குப் பதி என்பதை உணர்த்துவது; திருவருள் செய் கின்ற கோலம், அனுக்கிரகம். சப்பரம் அல்லது தெருவடைத் தான் என்ற ஒரு புத்தமைப்புடைய சட்டத் தேரில் சிவ பெருமான் உலா வருகிறார். எல்லாவற்றையும் அடைத்து வரும் சப்பரம், அனைவருக்கும் அனுக்கிரகம் என்ற குறிப் புடையது. மேலும் இது, மக்கள் கலைத்திறனுக்கு ஒரு சிறந்த வெளிப்பாடு. இதனோடு ஒரு வகையில் தோற்றம் அல்லது வளர்ச்சிக் கிரமப்படிக்கான ஐந்தொழில்களும் நிறைவுபெறு கின்றன.

அடுத்த ஆறு நாளும் ஒடுக்கம் செய்கிற முறையில் வருகின்ற ஐந்தொழிற் கோலங்களாகும். ஆறும் திருநாள் யானை வாகனம்-சிருஷ்டித் தொழில். ஏழாம் திருநாள்-திருக் கலியாண உற்சவம், காத்தற் பொருளது. எட்டாம் திருநாள் கைலாய வாகனம், இராவணன் கைலையை எடுத்தல். சங்காரம் என்பது பொருள். ஒன்பதாந் திருவிழா பிக்ஷாடனர் திருவீதி உலா; இது திரோபவமாகிய மறைப்பு பத்தாம் திருநாள் திருத்தேர். திரிபுர சம்மாரமாகிய மும்மல காரியங்களின் அழிப்பும், அதன் மேல் விளைகின்ற அனுக்கிரகமும். இவற்றின்பின் சண்டேசானுக்கிரக உற்சவமும் கொடியிறக்கமும் நிகழ்ந்து, பிரம்மோற்சவ விழாக்கள் முடிவு பெறுகின்றன. இக் குறிப்புக்களால் பிரம்மோற்சவமானது ஐந்தொழில் அனுக்கிரகத்தை உணர்த்துவது என்பது தெளிவாகும். (தலவிசேடத்தால் விழா முறைகளில் மாறுதல் இருக்கக் கூடும்.)

## சடங்குகளின் பொருள்-சிவானுபவம்

சடங்குகளின் முடிவான பொருள் சிவானுபவம். இதன் பொருட்டுத்தான் உருவ வழிபாடு. நம்முடைய படிப்பறியாத பெண்கள் கூட வீட்டில் சாணத்தால் பிள்ளையார் பிடித்து வைக்கிறார்கள். மண விழாக்களில் புரோகிதர் சந்தனத்தாலும் மஞ்சளாலும் பிடித்து வைக்கிறார். மக்கள் மனத்தில் இவை எல்லாம் ஒன்றுதான். எங்கும் நிறைந்த பரம் பொருளைச் சிறிது நேரம் இங்கு எழுந்தருளுவிக்கிறோம். அந்த நேரம் அவ்விடம் இறைவன் சந்நிதி ஆகிறது. தெரிந்தோ தெரியாமலோ, புரோகிதரும் மக்களும் சொல்லுகின்ற மந்திரங்களும் செய்கின்ற முத்திரைகளும் நியாசங்களும், அந்த நேரம் அங்கு தெய்வ உணர்ச்சியைத் தேக்கிடச் செய்கின்றன. புஷ்பங்களும் சாம்பிராணிப் புகையும் கற்பூர ஜோதியும் ஒன்று சேரும் போது, புலன்கள் வேறிடம் போகாமல் ஒருமுகப் படுகின்றன. அந்நேரம் அது

உண்மையான தெய்வசந்நிதி ஆகிறது. மனிதனை இந்தச் சடங்குகள் சிறிது நேரமேனும் உயர்ந்த நிலையில் கொண்டு போய் நிறுத்துகின்றன என்பதை யாரே மறுக்கமுடியும்?

சடங்குகளுக்கு அடிப்படையாக இருந்து வருபவை புராண வரலாறுகள். ஞானிகளாய் உள்ள இடத்தில் புராணங்களுக்கு வேலையில்லை. பெரும்பான்மையான மக்கள் சாமானிய மக்களே. ஆதலால் இவர்களுக்குச் சடங்குகளும் பௌராணிகமும் தேவை. புராணம் என்ற சொல்லுக்கே பழங்கதை என்பதுதான் பொருள். பழங் கதை பொய்யல்ல; பழமை காலம் செல்லச் செல்லச் சமய மாகிறது. புராணமே சமயம் என்று சொல்லாவிட்டாலும் கூட, சமயத்திற்கு ஒரு கருவியாகவே அது அமைகிறது. சைவ சமயத்திலும், புராண வரலாறுகள் சமயபக்திக்கும் நல்லொழுக்கத்திற்கும் நிலைக்களங்களாக அமைகின்றன. நடைமுறையில், உயர்ந்த ஞானத்தையும் சாமானியப் புராணக்கதையையும் தழுவி எழுந்தவையே கோயில்கள். கோயில்களில் ஸ்தூலமான பொருள் புராணக் கதைகளே. சூக்ஷ்மமான பொருள் ஞான மார்க்கத்தின் தத்துவங்கள். சமயத்தின் குறியீடுகளுக்கும் சிலாரூபங்களுக்கும் சாமானிய மக்கள் மனத்தில் பொருள் அறிவிப்பது பௌராணிகம். இதன் வழியே சென்றுதான் உயர்ந்த ஞான தத்துவங் களையும் உணர முடியும். படிப்பு வாசனையற்றவனிடத்துக் கூட, அவன் தன் இஷ்ட தேவதையின் முன்பு மலரிட்டுத் தேங்காய் உடைத்துக் கற்பூரம் ஏற்றும் போது, இந்த ஸ்தூலம் சூக்ஷ்மம் ஆகிய இரண்டின் ஒருமைப்பாட்டைக் காண்கிறோம். அவன் தன்னை அறியாமலே தன் முன் காணும் இஷ்டதேவதைதான் எல்லாவற்றையும் கடந்த பரம் பொருள் என்ற உணர்ச்சியைப் பெறுகிறான். உலகில் தோன்றிய பழம் பெருஞ் சமயங்கள் பல அழிந்து போயிருக்க, தமிழன் தோன்றிய அன்றே தோன்றி அனாதி காலமாக வளர்ந்தும் விரிந்தும் வந்த சைவ சமயம் இன்றும் உயிரோடு நின்று நிலவுவதற்கு இந்தப் பண்புதான் காரண மாகும்.

# சைவ தருமம்

ஒவ்வொரு சமயமும், தன் சமய தத்துவங்களுக்கு அடிப்படையாகச் சில தருமங்களைக் கொண்டிருக்கிறது. இவற்றைத் தருமம் அல்லது ஒழுக்கம் அல்லது நீதி என்று கூறலாம். சைவ சமயத்தின் தருமங்களே இந்து சமயத்தின் தருமங்களாகச் சொல்லப்பட்டுள்ளன. ஆயினும் இடையில், பிந்தியதில் பொய்யும் வழுவும் புகுந்து விட்டன. ஆதலால், தனியான சைவ சமயத்தின் தருமங்கள் யாவை என்று சில சொற்களால் இங்கு வரையறை செய்து கொள்வது உதவி யாயிருக்கும்.

## தருமம்

ஒரு சமயத்தின் தருமம் என்பது, கால தேச வர்த்த மானங்களை அனுசரித்து மக்கட் சமூகம் கொண்ட வாழ்க்கைக் குறிக்கோளைத் தழுவியதாய் இருக்கும். உதாரணமாக, ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட இங்கி லாந்தில், சமூகநோக்கமானது லக்ஷ்ய மனிதன் பெருவீரனாக இருக்கவேண்டும், பெண்களின் பாதுகாப்புக்காக உயி ரையே கொடுக்கவேண்டும் என்பதாக இருந்தது. இன்று அந்த நோக்கமில்லை. ஆனால் இந்திய நாட்டில் என்றுமே நோக்கம் வேறு: இங்கு வாழ்க்கையின் நோக்கம் புறமுக மானதன்று; அகமுகமானது. "யாதும் ஊரே யாவரும் கேளிர்—தீதும் நன்றும் பிறர் தர வாரா" என்ற கொள்கை யுடைய மக்கட் சமூகத்தில், தனிமனிதன் ஆன்மவளர்ச்சியில் மேம்படவேண்டும் என்பதே குறிக்கோளாயிருந்தது. இந்தச் சமூகத்தில் நிலவிய மனித தருமங்கள் சில. தருமம் என்று சொல்லும்போது இங்கு உபகாரம் செய்தல் அல்லது பிச்சை போடுதல் என்ற பொருளில் சொல்லவில்லை. முற்

கூறியவாறு, நீதி, கடமை அல்லது ஒழுக்கம் என்ற ஆழ்ந்த பொருளைத்தான் கூறுகிறோம். தருமம் என்றாலும் அறம் என்றாலும் ஒன்றுதான். பிராணி நிலையைக் கடந்து ஆறறிவு படைத்த மனிதநிலைக்கு வந்தவனிடத்தில் புத்தி பூர்வமான நல்லொழுக்கம் அமைதல் வேண்டும். இதுவும் மனம் மொழி மெய் என்ற திரிகரண சுத்தியாக அமைதல் வேண்டும். இதுவே எல்லாத் தருமங்களுக்கும் அடிப்படை.

## பற்று

கடமையைச் செய்யும்போது பலாபலன்கள் என்ற பேச்சு எழாமற் போகாது. சில சமயம் நல்லவர் துன்புறு தலும் தீயவர் இன்புறுதலும் கண்முன்னே நிகழ்கின்றன. மனிதனுடைய அறிவு இவற்றை ஆராயும்போது, "ஏன் இப்படி?" என்ற கேள்வி எழுகிறது. காட்சிப் பிரமாணம் ஒன்றுமட்டும் இதற்கு விடையளிக்க முடிவதில்லை. ஆன்மா அழிவற்றது என்பதை ஒப்புக்கொள்ளுகின்ற நம் சமயம், நாம் செய்கின்ற நல்வினை தீவினைகள் இரண்டும் இந்தப் பிறவியில் மட்டுமல்லாமல், தொடர்ந்து பலன் கொடுத்து வரு கின்றன என்று கூறுகின்றது. ஆகவே, தொடர்ந்து பலன்களை அனுபவிப்பதற்கு மறுபிறவி உண்டு என்பதும் ஓர் அடிப்படைத் தத்துவமாகின்றது. பொதுவாக இந்து சமயங் களிலும் சிறப்பாகச் சைவ சமயத்திலும், மறுபிறவி நிச்சய மாக உண்டு, புல் பூண்டு பிராணி வர்க்கம் மனிதவர்க்கம் யாவும் ஒன்றுதான் என்பது ஒப்புக்கொள்ளப்பட்ட கருத்து. நாம் செய்யும் வினைகள் பயனைக் கருதிய வினைகள் ஆதலால், வினைக்குரிய பயனை அனுபவித்தே தீர்க்க வேண்டியிருக் கிறது. வினை தோன்றிப் பலன் தரும் தன்மையை ஒட்டி, அதைப் பலவகையாக ஆன்றோர் பாகுபடுத்திக் கூறுவர். பலன் கருதாத வினை செய்கிறவன் ஞானியாகிறான். பின்னால் அனுபவிக்க வேண்டிய வினையின் தொகுதி அவனைப் பொறுத்தவரையில் இல்லாமல் போகிறது. திரு

வருளாலே ஞானம் கைகூடப் பெருதவரையில், பயனிடத்துப் பற்றுதல் நீங்காது. ஆகவே, அனுபவிக்க வேண்டிய வினை, தொகுதியாகப் பெருகிக்கொண்டேதான் இருக்கும். ஆதலால் வினை செய்யும் காலத்து, பின்பும் இன்பமும் துன்பமும் தருகிற பிறவிக்கு ஏதுவாகாமல் மனிதன் மேல் நிலைக்குப் போக உதவும் பொருட்டே, நீதி போதனையும் நல்லொழுக்க போதனையும் ஏற்பட்டுள்ளன: நல்லொழுக்கம் பாவ நெறியை விலக்கிப் புண்ணிய நெறியிற் செலுத்துமாதலால்.

## பற்றின்மை

தருமங்களில் மேலானது தன்னை மறந்த சேவை. எந்தப் பணி செய்தாலும் அதை இறைவன் பணியாகக் கருதி, தன்னைக் கர்த்தாவாகக் கருதாமல் இறைபணியைச் செய்யும் ஒரு கருவியாக மட்டும் கருதி வினை செய்யும்போது, எதிர் காலத்தில் அனுபவிப்பதற்கான வினை திரளாமல் போகிறது; வினையை அனுபவிப்பதற்காகப் பிறவி எடுத்தலும் குறைகிறது. இதுவே முத்தி அல்லது விடுதலைக்கு வழி. வாழ்வின் நோக்கங்களாக வடநூலார் சொல்லுகின்ற தருமம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்ற நான்கும் தமிழிலும் சைவத்திலும், அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு உறுதிப்பொருள்களாக அப்படியே கொள்ளப்பட்டுள்ளன. மனித வாழ்க்கையின் நோக்கம், அறவழியில் பொருள் ஈட்டி அதனுல் வரும் இன்பம் துய்த்து, இவ்வாறு வரும் இன்பம் அழியும் நீர்மைத்து என்பது உணர்ந்து, அழியாத பேரின்பத்தை நாடி, இவற்றினிடத்துப் பற்றினின்றும் நீங்குதல் ஆகும். வாழ்வில் பெறும் அனுபவங்கள் உலகவாழ்க்கை நிலையற்றது என்பதை நன்கு உணர்த்துகின்றன. மரணம் ஆன்மாவின் அனுபவத்துக்கு ஓர் முடிவு அல்ல. இதை உணர்கின்ற மனிதன் நிலையற்ற வாழ்விலிருந்து நிரந்தரமான ஓர் விடுதலையைத் தேடுகிருன்.

இதுவே இந்து சமயப் பிரிவுகள் அனைத்தின் போதனையு மாகும்.

உலகவாழ்க்கையே சதம், பொருளும் இன்பமுமே சதம் என்று கருதுகின்ற சமயப்பிரிவுகள் பல; இவற்றை இந்து சமயமும் சைவசமயமும் பெரிதும் கண்டித்து ஒதுக்கின. இவை போலவே, அறமே முடிவான நோக்கம் என்று கருதியவரும் இருந்தனர். இக்கருத்து வாழ்வில் ஒரு நிறைவு தந்ததில்லை. ஏன் அறவழி ஒழுகவேண்டும் என்ற கேள் விக்கு, கொள்ளத்தக்க விடை இவர்கள் கூறியதில்லை. அறம் எதன் பொருட்டு என்றால், எல்லாவற்றினும் மேம் பட்டதான ஓர் ஆன்ம சுதந்திரத்துக்காகவே அறவாழ்க்கை; கட்டிலிருந்து விடுபட, அஞ்ஞானத்தை விலக்க, ஏற்பட்ட வழியே அறவழி. இவ் அஞ்ஞான நீக்கமும் கட்டின் நீக் கமும் சுதந்திரத்தைத் தருகின்றன. இங்குக் கருதுகின்ற சுதந்திரமாவது, சர்வ வியாபகமான ஒரு பேரின்பத்தில் தானும் இரண்டறக் கலந்துவிடுதல்.

**வருணம்**

இந்தப் பீடிகையோடு, அடிப்படைத் தருமங்கள் சில வற்றைக் கவனிக்கலாம். வருணாசிரம தருமம் என்ற தொடர் பழமையாக வழங்கி வருகிறது. இதுபற்றிச் சைவத்தின் கோட்பாடுகளைச் சற்றே அறிந்துகொள்ளுதல் நன்று. முத லாவதாக, சைவத்தில் 'ஒன்றே குலமும் ஒருவனே தேவ னும்' என்ற கருத்து அனாதிகாலமாக நிலவி வந்திருக்கக் காண்கிறோம். உயிர்கள் யாவும் ஒரே கடவுளின் படைப்பு என்று கருதி வருகிற சமூகத்தில், மனிதருக்கிடையில் பிறப் பினால் வேற்றுமை இருந்ததில்லை. வடநூலார் கருத்து சற்றே மாறுபட்டிருக்கும். நாலு யுகங்களிலும் நாலு வரு ணங்கள் ஆதிக்கம் பெற்றிருந்தன என்று இவர்கள் சொல் வார்கள். நான்கு வருணத்தார் பிராமணர் க்ஷத்திரியர் வைசியர் சூத்திரர் என்போர். இந்நால்வரும் அடிப்படை

யான தொழில் வேற்றுமைகள் காரணமாக இவ்வாறு பாகு பாடு செய்யப்பெற்றிருந்தனர். சாத்துவிக குணத்தின் பிரதி பலிப்பு பிராமண சமூகம்; இராசத குணத்தின் பிரதிபலிப்பு க்ஷத்திரிய சமூகம்; தாமச குணத்தின் பிரதி பலிப்பு மற்ற இரு சமூகங்களும் என்பர். இக்கூற்றுக்கள் யாவும் முழு மையும் பொருத்தமென்றோ, பொருள் உடையன என்றோ கருதுவதற்கில்லை. மக்களுள் கல்வியாலும் ஒழுக்கத்தாலும் உயர்ந்தார் பிராமணர் எனப்பட்டார்; பிற்காலத்தில் இது பிறப்பையொட்டிய பாகுபாடாகிவிட்டது. அவர்களுடைய தொழில் உபநிடதங்களில் சொல்லியபடி, சுவாத்தியாயமும், பிரவசனமும்; அதாவது ஓதலும், ஓதுவித்தலும். இவை ஒரு லக்ஷ்யமாகச் சொல்லப்பட்டனவே அன்றி, முழுமையும் அப்படியே செயல்முறையில் இருந்தன என்று கருதுவதற் கில்லை.

சைவம் என்று பார்க்கும்போது, அங்கு இவ்வகையான நாலு வருணப் பாகுபாடு இருந்தமை தெரியவில்லை. ஒன்றே குலமும் என்றமையினாலே, மக்கள் தங்கள் வழிபாட்டினாலும், வாழ்க்கை முறையினாலும், சைவர் என்றும் அல்லாதவர் என்றும் சொல்லப்பட்டனர். அறுபத்து மூவர் நாயன்மார் வரலாற்றை மேலெழுந்த வாரியாகப் பார்த்தாலும் கூட, இவ்வுண்மை நடைமுறையில் இருந்தமை நன்கு விளங்கும். அப்பரும் அப்பூதியும், அப்பரும் சம்பந்தரும், திருநீலகண்ட யாழ்ப்பாணரும் சம்பந்தரும், திருநீல நக்கரும் திருநீல கண்ட யாழ்ப்பாணரும் சம்பந்தரும் முதலான தொடர்புகளை சிறிது ஊன்றிக் கவனித்தாலும் இது நன்கு விளங்கும். இவர்கள் சாதியினால் வேறுபட்டிருந்தும் கூட, சைவம் என்ற அளவில் இவர்களுடைய சமூக வாழ்க்கை சாதியைக் கடந்த ஒரே சமூகமாக அமைந்திருந்தது.

சில சமயங்களில் இருந்தமைபோல சைவத்தில் பிறப் பினால் பெண்ணுக்குத் தாழ்வு இல்லை. நாயன்மார் வரலாற்

றிலும் சங்கநூல் புலவர் வரலாற்றிலும், பிற்காலச் சோழர் வரலாற்றிலும் இதை விளங்கக் காணலாம். வேறிடத்திலும் இக்கருத்தை விளக்கியிருக்கிறோம்.

### ஆசிரமம்

அடுத்து, பொதுவாக இந்தியச் சமயங்கள் அனைத்திலும், ஆசிரமம் என்ற கருத்துக்குத் தரப்பட்டுள்ள முதன்மை இங்குக் கருதத்தக்கது. ஆசிரமம் என்பது மனித வாழ்வின் நிலைகள் அல்லது படிகள். கல்வி பயிலும் பருவம் பிரமசரிய நிலை. அடுத்துச் சொல்லப்படுவது, மணம் செய்து கொண்டு ஒருவனும் ஒருத்தியும் கூடி வாழும் இல்லறம்; இல்வாழ்க்கையின் முடிவில் ஒருவனும் ஒருத்தியுமாகத் தொடங்கிய வாழ்க்கை முதிர்ந்து, குறுகிய குடும்பப் பற்றுக்களைக் களைந்து, மக்கட்குலம் முழுமையும் ஒரே குடும்பமாய்க் கருதும் பக்குவம் பெற்ற வானப்பிரத்த நிலை. இதன் பின் வருவது நான்காவதான பூரணத் துறவு நிலை; சன்னியாசம் என்று சொல்லப்படும். இந்நிலைகளையும், பொதுவாகத் தமிழ்நாட்டிலும், சிறப்பாகச் சைவ சமயத்திலும், இவற்றுக்கு அமைந்துள்ள இடத்தையும் நாம் ஊன்றிப் பார்க்கும்போது, சில கருத்துக்கள் தெளிவாகத் தெரிகின்றன.

முதலாவது, பிரமசரியம் ஆகிய மாணக்க நிலை. இது நூல்கள் மூலம் நன்கு புலப்படுகின்றது. இலக்கண நூல்களும் சமய நூல்களும், மாணக்கன் இலக்கணம் ஆசிரியன் இலக்கணம் என்று தெளிவாய்ப் பகுத்துக் கூறுமிடத்து, பிரமசாரிக்குரிய வாழ்க்கை முறையும் குறிக்கோளும் விளக்க மாகப் புலப்படுகின்றன. சமய தீக்ஷை மட்டும் பெற்றுச் சைவநிலையில் நின்று, சிவாலய வழிபாடும், ஆசாரிய வழிபாடும் செய்ய வேண்டியவன் மாணக்கன். எழுத்தறிவித்தவன் இறைவனாகும் என்ற சாமானியச் சொற்களெல்லாம் அவனுக்கு இருக்கவேண்டிய குறிக்கோளை நன்கு உணர்த்துகின்றன.

மாணக்கன் கல்வி கற்று முடிந்தபின் அக்காலத்தில் முறையாக ஒரு பெண்ணை மணந்து இல்லறத்தில் இருக்கவேண்டியவன். இல்வாழ்க்கை செம்மையுற நடந்தால்தான் பிற ஆசிரமங்கள் செம்மையுற நின்று நிலவும் என்பது எல்லா நூல்களுக்கும் ஒப்ப முடிந்த கருத்து. மேலும், சைவ சமயத்தில் அடியவர் வழிபாடும் ஒரு முக்கியமான கடமை. அன்றியும், ஐம்புலத்தாரை ஓம்பவேண்டும் என்று நூல்கள் கூறுகின்றன. இத்தனைக்கும் ஆதாரம் இல்லறம். மேலும், ஆலயங்களும் ஆட்சியும் நாடும் நின்று நிலவுவது இல்லறத்தோரால்தான். உணவு உற்பத்தி செய்பவன் இல்லறத்தான். 'அன்னத்தைப் பெருக்குவாயாக' என்பது, படிப்பு முடித்து இல்லறத்தில் அமரப்போகும் நிலையிலுள்ளவனுக்கு உபநிடதம் கூறும் உபதேசங்களுள் ஒன்று. ஆகவே இதை விரித்துச்சொல்ல அவசியமில்லை. இங்கு ஒரு கருத்தைக் குறிப்பிடலாம். இல்லறத்தில் இருந்து வாழ்பவன் ஒருகாலத்தில் ஓதலின் பொருட்டுத் தன் மனைவியையும் சுற்றத்தையும் பிரிந்து செல்வதுண்டு என்று நூல்கள் கூறும். இக்கருத்து சைவத்தில் கொள்ளத்தக்கதே. இல்லறத்தில் இருப்பவன் விசேட தீக்ஷையும் பெற்று ஆன்மார்த்த பூசையும் மாகேசுர பூசையும் செய்தற்குரியான். இவன் ஞானநூல்களை ஓதினால்தான் இப்பூசைகளின் சிறப்பு இவனுக்குப் பொருந்தும் ஆதலால், ஓதற்பிரிவு என்பது சைவத்திலும் கொள்ளத்தக்கதே.

இனி, மூன்றாவதாகிய வானப்பிரத்த நிலை. "காமஞ் சான்ற கடைக்கோட்காலை—ஏமம் சான்ற மக்களொடு துவன்றி—அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்—சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே" என்ற சூத்திரத்தில் தொல்காப்பியர் இந்த நிலையைக் குறிப்பிடுகிறார் என்று ஆன்றோர் கூறுவர். நாயன்மார்களுள் பலர் வரலாறுகள் இந்த நிலைக்கு எடுத்துக்காட்டுக்களாய் உள்ளன. உதாரணம், திருநீலகண்டத்துக் குயவனார். எனினும், வானப்

பிரத்த வாழ்க்கை சைவத்தின் அங்கமாய் இருந்தது என்று சொல்ல இயலாது.

இனி முடிவாகத் துறவு வாழ்க்கை. துறவு சைவத்தில் சிறந்த இடம் பெற்றிருக்கிறது. அகத்துறவும் அதன் அடையாளமாகப் புறத்தே உள்ள காவி உடையும், சைவம் தோன்றிய நாளாகப் பெருமதிப்புப் பெற்றிருக்கின்றன. சைவத்தின் திருவேடங்களான விபூதி உருத்திராக்கங்களோடு, துறவின் சின்னங்களான சடையும் காவி உடையும், சேர்த்துச் சொல்லுதலும் பொருந்தும். ஆண்டாள் காவி உடையைச் சைவத் துறவிகளுக்கே உரியதாகச் சொல்லுகின்றார். துறவிகள் உலகப்பற்றை உண்மையிலேயே துறந்து "உடை கோவணம் உண்டு, உறங்கப் புறந்திண்ணையுண்டு, உணவுக்கு இங்கு அடைகாய் இலையுண்டு, அருந்தத் தண்ணீருண்டு, அருந்துணைக்கே விடையேறும் ஈசர் திருநாமம் உண்டு" என்று வாழ்ந்தவர்கள். சைவத்தில் துறவின் சிறப்பை எவ்வளவு உயர்த்திச் சொன்னாலும் தகும். செல்வமனைத்தையும் ஒரே கணத்தில் துறந்து, சுடுகாட்டுச் சாம்பல் மேட்டின் மீது அமர்ந்திருந்த பட்டினத்தாரை நோக்கி, "ஐயா, இதில் என்ன சிறப்பைக் கண்டீர்கள்?" என்று கேட்ட அரசனுக்கு, அவர் சொன்ன மறுமொழியாகிய "நீ நிற்க, யாம் இருக்க" என்ற சில சொற்கள் துறவறத்தின் ஏற்றத்தை நன்கு காட்டும். சைவத்தில் குறிப்பிட்டுச் சொன்னால் இல்லறம் துறவறம் என்ற இரண்டே அறங்கள்; இரண்டும் ஒன்றை ஒன்று தழுவி உயர்த்தி நிற்பன.

சைன புத்த சமயத்தொடர்பு, துறவுக்கு அதிகச் சிறப்பு அளித்தது. பொதுவாகச் சைவம் இல்லறம் துறவறம் இரண்டுக்குமே சமமான சிறப்புத் தந்திருந்தது. ஆகவே, எல்லாம் துறந்த பரமயோகியாகிய திருமூலர், உடம்பை நன்கு பேணவேண்டும், உடம்பை ஒறுத்தால், வினைப்பயனை

அனுபவித்துக் கழித்தல் நிகழாது, ஆதலால் உடம்பை ஒறுக்கும் துறவு வேண்டுவதில்லை, உடம்பைப் பேணி வளர்ப்பதான இல்லற வாழ்க்கையில் குறைபாடு இல்லை என்று கருத்துப்படப் பாடியிருப்பதும் இங்குக் கருதத் தக்கது.

இங்ஙனம் வருணம் ஆசிரமம் என்ற இரண்டு தருமங் களையும் பற்றிச் சைவத்தின் கருத்தைத் தெளிவு படுத்திக் கொள்ளுதல் நல்லது. வருணம் என்பது சைவத்தில் பிறப் பினால் உயர்வு தாழ்வு கருதும் சாதி என்பதன்று எனவும், ஆசிரமங்களில் இல்லறம் துறவறம் என்ற இரண்டே சைவத்தில் விதந்து ஓதப்பட்டன எனவும் நாம் இதுவரை தெளிவுபடுத்தினோம்.

## விருந்தோம்பல்

அடுத்துச் சொல்லத்தக்கது விருந்தோம்பலாகிய பெருங் கடமை. இது இந்து சமய முழுமைக்கும் பொது. 'அதிதி தேவோ பவ' என்பது உபநிடதம். எனினும், சைவத்தில் இதற்குள்ள பெருஞ்சிறப்பு பிற சமயப்பிரிவுகளில் இல்லை. சைவ சமயத்தில், அதிதியைச் சிவமாகவே கருதிப்போற்ற வேண்டும். இதுவே அடியவர் வழிபாடு என்பதாகச் சமய தத்துவங்களில் ஒன்றாகவே இது அமைந்துள்ளது. அடியவர் வழிபாட்டின் இயல்பையும் அதன் சிறப்பையும் பெரிய புராண வரலாறுகள் நமக்கு நன்கு உணர்த்துகின்றன. உடன் கூறத்தக்கது ஆவுக்கோர் வாயுறை என்ற கருத்து. பசுவும் காளையும் சைவனுக்கு எல்லா விதத்திலும் சிறப்பு வாய்ந்தன. உண்ணுமுன் பசுவுக்கு ஒரு பிடி புல் அளிப்பது சைவ தருமங்களுள் அடிப்படையான ஒன்று. இதைச் சற்று விரித்துப் பொருள் கொண்டால், எல்லா உயிர்க ளிடத்தும் அன்பு காட்டுவதற்கு இது அடையாளமென்பது விளங்கும். இதன் பயனாக, உயிர்கள் யாவும் தெய்வத்தின் படைப்பு, அவை யாவும் புனிதத் தன்மை வாய்ந்தன, அவற்

றுள் உயர்வு தாழ்வு இல்லை, புல், பூண்டு, புழு, மனிதர், முனிவர், தேவர் ஆகிய யாவரிடத்தும் சைவன் சமமான பார்வை உடையவனாய் இருத்தல் வேண்டும் என்ற நீதி நன்கு உணர்த்தப்படுவது புலப்படும்.

## நல்லொழுக்கம்

தனி மனிதனிடத்து அமையவேண்டிய நல்லொழுக்கப் பண்புகளை எல்லா நூல்களும் விரித்துக் கூறுகின்றன. இவை இல்லறத்தாருக்கும் துறவிக்கும், கூடியும் குறைந்தும், பொருந்துவனவாகும். இந்த நூற்றாண்டில் மகாத்மா காந்தி தம் ஆசிரமத்தில் வாழ்ந்த தேசபக்தர் எல்லோருக்கும் அமைய வேண்டிய குணங்களென்று பலவற்றைத் தொகுத்துச் சொன்னார். அவர் புதிதாக எதையும் சொல்லவில்லை : நம் தரும சாத்திரங்களில் சிறப்பாய் வற்புறுத்திய பண்புகளையே அவர் மீண்டும் வலியுறுத்தினார். இவற்றைப் பேசாத தமிழ் நூல்கள் இல்லை. விரிவஞ்சிச் சிலவற்றை மட்டும் இங்கு சுட்டிக்காட்டி நிறுத்திக் கொள்கிறோம்.

காந்தியடிகளின் இருபெரும் தத்துவங்களான அகிம்சை சத்தியம் என்ற இரண்டையும் திருவள்ளுவர், 'ஒன்றாக நல்லது கொல்லாமை—மற்று அதன் பின்சாரப் பொய்யாமை நன்று' என்று அதே வரிசையில் எதிர்மறையாகச் சொல்லியிருக்கக் காண்கிறோம். உடன்பாட்டு முறையில் அகிம்சையே அன்புடைமையாகும். 'எவ்வுயிரும் நின்னுயிர்போல் எண்ணி இரங்கவும் நின் தெய்வ அருட்கருணை செய்யாய்' என்பது சைவருடைய பிரார்த்தனை. இப்பேருண்மையைப் பலவிடங்களிலும் விளக்கி யுரைத்திருக்கிறோம். உடன் கூறத்தக்கது சத்தியம். ஆண்டவன் சத்திய வடிவினன். இதுவே சத்-சித்-ஆனந்தம் என்ற கடவுள் இலக்கணத்தில் முதலாவது உள்ள சத் ஆகும். அனைத்துக்கும் அவனே ஆதாரமாயிருந்து தாங்கி நடத்துகிறான். மனிதன் தானும் திரிகரண சுத்தியாக, சத்தியத்தினின்றும்—உண்மை,

வாய்மை, மெய்ம்மை என்ற மூன்றினின்றும்—பிறழாத வாழ்க்கை வாழவேண்டியவன். இயல்பாகவே பாசங்களின் நீங்கியவன் என்பது இறைவன் குணங்களைப் பேசும் பெயர்களுள் ஒன்று. மனிதன் யான் எனது என்னும் பற்று அல்லது செருக்கு அறுத்து வாழ வேண்டியவன். இப்பற்றை அறுத்தால், பிறவி வேர் அறுபட்டுப் போகிறது. ஆறறிவு படைத்த மனிதன் புலன்களின் வழி தான் போவதை விட்டு, தன் வழிக்கு அவற்றைக் கருவிகளாகக் கொள்ளும்போது, வாழ்க்கையில் சமநிலை கைகூடுகிறது. சமநிலையுடையவன் வாழ்வில் கலக்கம் இல்லை, அச்சம் இல்லை. சமநிலை என்பது திருவருள் பேற்றுக்குத் தன்னைப் பாத்திரமாக்கி, தன் செயலற்று எல்லாம் அவன் செயலே என்று பாவித்து வாழும் நிலை. இந்த நிலை முதிர்ந்து முதிர்ந்து, தெய்வ நிலையை எளிதில் அணுக உதவுகிறது.

இறுதியாக, தூய்மை என்பது அதுவே தனியான பெருந்தத்துவம். எல்லாச் சமயங்களிலும் தூய்மை இறை நிலை என்றே சொல்லப்பெறும். மனம் மொழி மெய்களின் தூய்மையை வளர்த்துக் கொண்டவன் இறைநிலையை வளர்த்துக் கொண்டவனே என்று கூறுவது மிகையாகாது.

மேலே நாம் நற்குணங்களைக் குறிப்பிட்டோம். அப்படியே தீக்குணங்கள் தன்னைப் பற்றாதபடி மனிதன் காத்துக் கொள்ள வேண்டியவன் என்பது சொல்லாமலே அமையும். இவற்றை அறுபகை என்று தேவாரம் சொல்லும்; இவை யாவன: காமம் குரோதம் லோபம் மோகம் மதம் மாற்சரியம் என்பன. 'காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றின்— நாமம் கெடக் கெடும் நோய்' என்ற வரிகள் எல்லோரும் அறிந்தவை. இவற்றைப் பகை என்றே தமிழ் வேதம் குறிப்பிட்டது. பலவாகப் பிரித்துக் குறிப்பிட்ட போதிலும், அடிப்படையாகக் கருத வேண்டியது ஒன்றே: அதுவே, எனக்கு என்னும் அவா; இவ்வவா நீத்த மாத்திரத்திலேயே மீண்டு

வாராத பெருநெறி சித்திக்கும். அவா என்பது சுயநலத்தால் விளைந்த ஆசை. ஆசையை அறுக்கவேண்டும் என்று திருக் குறளும் திருமந்திரமும் நன்கு உபதேசிக்கின்றன. 'தூய்மை என்பது அவாவின்மை,' 'அவா என்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும்—தவாப் பிறப்பீனும் வித்து' என்ற கருத்துக் கள் இங்கு ஆழ்ந்து சிந்தித்தற்குரியன.

இவ்வாறு கூறிய குணங்கள் பொதுவாக, வளரும் சம யங்கள் அனைத்துக்கும் பொருந்துவன ; இந்து சமயப் பிரிவு கள் அனைத்துக்கும், சைவத்துக்கும் பொருந்துவன என் பதில் தடையில்லை. சைவ தருமம் இந்நற்குணங்களைப் பேணிக் காத்து வளர்ப்பதாகும்.

'ஈசா வாஸ்யம் இதம் சர்வம்' என்பது, தசோபநிடதங் களுள் முதல் உபநிடதத்தின் முதல் மந்திரத்தின் முதல் தொடர். இவை அனைத்திலும் ஈசுவரன் இருக்கிறன் என்பது இதன் பொருள். இது கொள்கையளவில் மட்டுமன்றி, தின சரி வாழ்வில் ஒவ்வொரு விநாடியும் சைவனை ஆட்கொள்ளும் தனித்தருமம். சைவம் என்ற சொல்லுக்கே புலால் உண் ணாமை என்ற பொருள் தோன்றி இன்றும் இருந்து வருவது, சைவ தருமத்துக்குரிய தனிப்பெருமையாகும். இது பற்றி முன்னமே விளங்கக் கூறியிருக்கிறோம்.

### சைவ தருமம்

சைவம் வெறும் தத்துவ சாத்திரம் மட்டுமல்ல, சமய மும் கலந்தது. இச்சமயத்தில் சிவாலய வழிபாடு முக்கிய மான ஓர் அடிப்படை. சைவர் தினந்தோறும் கோயில் வழி பாடு செய்ய வேண்டியவர். உயர்ந்தவர் தாழ்ந்தவர், கல்வி யாளர், ஞானி, கல்வியற்றவர், ஆடவர் பெண்டிர் என்ற எவ் வித வேறுபாடுமில்லாமல், சைவ மக்கள் அனைவரும் கோயிலில் சென்று சிவபெருமானை முறையாக வழிபடுவது சைவ தருமங்களில் முக்கியமானதொன்று.

இதுகாறும் கூறியவற்றைத் தொகுத்துச் சொல்வதானால், சைவ தருமம் என்பது காமக் குரோதம் முதலான பகைகளை வென்று, அன்பு சத்தியம் ஆகிய மேலான பண்புகளை வளர்த்து, எல்லா உயிர்களிடத்தும் அன்பு பூண்டு ஒழுகுதல்; வாழ்க்கையில் எழும் கடமைகளை இறைபணி என்ற கருத்தோடு பலனில் பற்றின்றிச் செய்தல்; தான் என்பதை மறந்து சேவையில் தன்னை அர்ப்பணித்தல் என்று கூறலாம். சைவ தருமத்தில் இல்லறம் துறவறம் இரண்டும் பெரும் சிறப்புடையன; சாதி என்ற பேச்சு இல்லை, அதனால் வரும் உயர்வு தாழ்வும் இல்லை. ஆலய வழிபாடும் அடியார் வழிபாடும் சிறப்பான தருமங்களாய் உள்ளன. வாழ்க்கையின் உறுதிப் பொருள்களில் இறுதியான வீட்டையே சைவம் பெரிதும் முதன்மையாய்க் கருதுகிறது. வீடு பேற்றுக்கு அறிவினால் ஞான மார்க்கத்தைப் பற்றித் திருவருள் துணையை நாடுவதை விட, பக்தி பூண்டு ஒழுகி அதன் மூலம் அருள் பெற்று வீடுபெறுதல் எளிது என்பதே சைவ தருமமாகும்.

சைவ தருமங்கள் அனைத்துக்கும் ஒரே அடிப்படை: இறைவன் ஒருவன் இருக்கிறான். அவன் கருணைமூர்த்தி, அருள் வடிவாயுள்ளவன். உயிர்களின் பக்குவத்துக்கு ஏற்ப அவனது அருள் வந்து பொருந்தும். அவனது பெருமையும் அவன் அருளின் காரணமும் நம்மால் அறியப்படாதது; நாம் அவற்றைச் சோதித்தறிய முற்பட்டுப் பயனில்லை. ஆதலால் அருளுக்குப் பாத்திரமாகும்படி நம்மைத் தயாரித்துக் கொள்வதைத் தவிர வேறு நாம் செய்யத்தக்க தொன்றும் இல்லை. இவ்வடிப்படை எப்போதும் சைவர் நினைவில் இருக்க வேண்டும்.

# சைவ சாதனம்

## நான்கு பாதம்

*சாதனம் என்பது மார்க்கம் அல்லது நெறி என்று பொருள்படும்; இங்கு சமயத்துறையில் முத்தி சேர்வதற் குரிய நெறியையே குறிப்பிடுகிறோம். சைவத்தில் இது நான்கு வகையாகச் சொல்லப்படும். சரியை, கிரியை, யோகம், ஞானம் என. சைவ வாழ்க்கை சிவார்ப்பிதமான வாழ்க்கை. இதனுள் சரியையாவது உடலேயும், கிரியை இந்திரியங்களேயும், யோகம் கரணங்களேயும், ஞானம் ஆன் மாவாகிய தன்னேயும் சிவார்ப்பிதம் செய்தல் என்று பொருள்படும்.*

*சிவபெருமான் திருக்கோயிலில் அமர்ந்துள்ள திருவுரு வத்தை நோக்கிச் செய்யும் புறத்தொழில் அளவான வழி பாடு சரியை எனப்படும். சிவபெருமானுடைய அருவுருவத் திருமேனியாகிய சிவலிங்கத்தை நோக்கிச் செய்யும் புறத் தொழிலும் அகத் தொழிலும் அளவான வழிபாடு கிரியை ஆகும். சிவபெருமானுடைய அருவத் திருமேனியை நோக்கி அகத்தொழில் அளவாக மட்டும் செய்யும் வழிபாடு யோகம் எனப்படும். உருவம் அருவுருவம் அருவம் என்ற மூன்றும் கடந்த முதல்வனிடத்து, அகம் புறம் என்ற இரு வகைத் தொழிலுமின்றி, அறிவளவாகச் செய்யும் வழிபாடு ஞானமார்க்கம் எனப்படும்.*

*இந்த நால்வகை மார்க்கமும் ஞானநெறியின் பிரிவுகள்; இவை நான்கும் ஞான மார்க்கத்தில் கூறுகின்ற சரியை முதலான நான்கு பிரிவுகள் என்று கருத வேண்டும்.*

இந்த நான்கும் ஒன்றிலிருந்து ஒன்று வேருனவையல்ல; கலந்தே வாழ்க்கையில் அனுசரிக்கப் பெறுபவை. அத னதன் சிறப்பியல்பு பற்றித் தனித்தனியாகக் கூறுகிறேம்.

## சரியை

இவற்றுள் சரியையாவது, சிவபெருமான் எழுந்தருளி யிருக்கின்ற திருக்கோயிலில் திருவலகிடுதல், திருமெழுக் கிடுதல், திருவிளக்கேற்றுதல், திரு நந்தவனம் வைத்தல், பத்திர புஷ்பம் எடுத்தல், திருப்பள்ளித் தாமத்துக்குத் திருமாலை இண்டை கண்ணி முதலியன புனைந்து அவன் திருமேனியில் அமைக்கச் செய்தல், சுகந்த தூபம் இடுதல், அவன் புகழை வாயார வாழ்த்துதல், ஆனந்தக் கூத்தாடல், பூசைத் திரவியங்கள் கொடுத்தல், அடியவரைக் கண்டால் வணங்கி அவருக்காகவும் பணிவிடை செய்தல் போன்றவை.

சிவனடியார் வழிபாடு சைவத்தில் ஒரு சிறப்பான பகுதி. சிவ பக்தர்கள் சிவன் எனவே வணங்குதற்கு உரியார். சிவனடியாரின் தினங்களைக் கொண்டாடுதல் மாகேசுவர பூசை எனப்படும். சைவ ஆசாரியரும், சைவ சந்தான ஆசாரியரும், பெரிய புராணம் கூறும் நாயன்மாரும் இவர் போன்ற பிறரும் முத்தியடைந்த தினங்களில் அவரவரை நினைத்து விசேஷ ஆராதனை செய்து அடியவர் களையும் ஏழை மக்களையும் அமுது செய்வித்தல் மாகேசுவர பூசை எனப்படும். மாகேசுவர பூசையில் எல்லோரையும் சமமாகவே பாவித்து அமுது படைக்க வேண்டும். இதனல் விளையும் சிவ புண்ணியம் மிகப் பெரிது. மாகே சுவர பூசை என்பது ஏழை அடியவருக்கு உணவளித்தல்; உறவினருக்கும் செல்வருக்கும் விருந்து செய்தலல்ல. இதற்குத் தற்கால மொழியில் பொருள் சொல்வதானல், ஒரு வரையறைக்குட்பட்ட சமூக சேவை என்று சொல் லலாம்.

## கிரியை

கிரியா மார்க்கம் என்பது, மணம் பொருந்திய மலர்கள் எடுத்து, தூபம் தீபம் திருமஞ்சனம் திருவாசம் திரு அமுது போன்றவற்றைத் தொகுத்து வைத்துக் கொண்டு, பூத சுத்தி தல சுத்தி திரவிய சுத்தி மந்திர சுத்தி இலிங்க சுத்தி ஆகிய பஞ்ச சுத்தி செய்து, உரிய ஆசனத்தில் அமர்ந்து, தன் இஷ்ட மூர்த்தியான பரம் பொருளை ஆசன மூர்த்தி மூலங்களினாலே ஆவாகனம் பண்ணி, ஞான ஒளி வடிவினனாகப் பாவித்து, தூய்மையான மெய் அன்பினால் அருச்சனை செய்து பூசித்து, உள்ளம் உருகித் துதித்து, வழிபாடு செய்து, நித்திய அக்கினி காரியமும் செய்தல் ஆகும். மலர்களை விதிப்படி எடுக்க வேண்டும். ஞானி உதிர்ந்த பூக்களும் எடுக்கலாம். பூவின்றிப் பசிய இலை கொண்டேயும் அருச்சிக்கலாம். இந்தப் பூசை ஆன்மார்த்த பூசை எனப்படும்.

## யோகம்

யோக மார்க்கம் அனுபவ பூர்வமாக ஆன்மாவில் தானே உணரத் தக்கது. இவ்வனுபவம் சொல்லுக்கு அப்பாற்பட்ட நிலை. எனினும், சாத்திரங்கள் கூறும் கருத்தை இங்குக் குறிப்பிடலாம். உலகப் பொருள்களில் செல்லும் ஐம்புலன்களையும் ஒடுக்கி, உள்ளும் புறமும் சஞ்சரித்துக் கொண்டிருக்கின்ற வாயுவைத் தடுத்து நிறுத்திச் சுழுமுனை நாடி வழியாக மேலே செலுத்தி, மனத்தின் தொழிலும் ஓய்ந்து ஆறுதாரங்களின் நிலையை உணர்ந்து அவற்றுக்குரிய தேவதைகளையும் பூசித்து, ஆங்கு அசபையானது சிவசொருபமாக நிற்கும் உண்மையை உணர்ந்து, மூலாதாரம் தொடங்கிப் பிரமரந்திரம் அளவும் அசபையுடனே மேலே சென்று, அங்கு சந்திர மண்டலத்திலே உண்டாகிய அமுதத்தினைத் தனது தேகம் முழுமையிலும் நிறைத்துத் தேக்கிப் பரம்பொருளைப் பூரண ஒளி வடிவமாகத் தியா

னித்து இருத்தலாகும். இந்த யோகத்தினுல் வினைகள் கெடும். இது அட்டாங்க யோகம் எனவும் பெறும். அட்டாங்க யோகத்தின் படிகள் எட்டு; இயமம், நியமம், ஆசனம், பிராணுயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பன. இந்தப் படிகள் இந்து சமயத்துக்குப் பொது. இவை சைவ யோகத்துக்கும் உரியன.

இவற்றுக்கும் மேலாக, பிராசாத யோகத்தைச் சைவ சமயம் கூறும்; மூலாதாரம் தொடங்கிப் பிரமதந்திரம் வரையுள்ள ஆன்மாவின் சஞ்சாரத்தை மேதை முதல் அநாசிருதை வரையில் பதினறு கலைகளாகக் கொண்டு இவற்றின் பெயர், வியாபகம், மாத்திரை, அளவு, ரூபம், ஒளி முதலியனவும் அறிந்து, இவற்றுக்குரிய தேவதைகளையும் தத்துவங்களையும் தரிசித்து, இவற்றுக்கப்பால் சென்று அங்குள்ள பரம் பொருளிடத்தே நிராதார பாவனையாலே தன்னையும் சிவனையும் வியாபகமாய்ப் பாவித்து, அந்த நிலையிலே நிற்றல் பிராசாத யோகமாகும். அட்டாங்க யோகம் இதற்குக் கருவியவ்வளவே. இது பரமுத்திக்கான யோகநிலை. இது எல்லோருக்கும் எளிதில் கைகூடுவதன்று.

**ஞானம்**

எல்லாக் கலை ஞானங்களையும் புராணம் வேதம் சாத்திரம் பிறநூல்கள் ஆகியவையும் ஆராய்ந்துணர்ந்து, உலகப் பொருள் பலவும் கீழ் என்று நீக்கி, பதி பசு பாசம் உணர்த்தலாகிய பொருள் ஒன்றே மேல் என்று தெளிந்து, பரசிவத்தைத் தரிசிப்பிக்கின்ற மேலான ஞான காண்டம் என்னும் நல்வழியைத் தானும் ஓதி, ஓதுவித்துக் கேட்டுக் கேட்பித்துச் சிந்தித்து—ஆக இந்த ஐந்து வழியினுலே அறிவானும், அறிகின்ற அறிவும், அறியப்படும் பொருளும் ஆகிய வேறுபாடின்றி அத்துவிதமாய்ச் சச்சிதானந்த வடிவமாய் நிற்கின்ற முதல்வனேடு கலக்கின்ற தன்மை

உடையது—ஞானமார்க்கம். தர்மங்கள் ஆகிய தவம் செபம் தியானம் ஆகிய இவை ஒன்றுக்கொன்று உயர்ந்துகொண்டு போகும். இவை யாவும் போகத்தை ஊட்டும். ஆதலால் வீடு எய்தும் நோக்கமுடையோர் இவ்வழியிலே சென்றாலும் கூட, இவற்றிற்கு மேலாகும் ஞானத்தால் சிவனை அருச்சிக்க வேண்டியவர்கள்.

இங்கு, பிற மார்க்கங்களில் கூறும் சாதனைகளோடு சைவத்தைப் பொருத்தி உணர்தல் பயனுடையதாய் இருக்கும். வேதாந்த மார்க்கத்தில் கர்ம யோகம், பக்தி யோகம், ஞான யோகம் என்பது வழக்கம். யோகம் என்ற சொல்லுக்கு ஒன்றாய்க் கூடுதல் என்பதே எங்கும் பொருள். விரிந்த பொருளில் இதை இறைவனோடு இரண்டறக் கலத்தல் என்று சொல்லலாம். சுருங்கிய பொருளில் இதை, எடுத்த காரியத்தோடு ஒன்றி நிற்றல் என்று கொள்ளலாம். வேதாந்தத்தில் இச்சொல் மார்க்கமென்றே பொருள் படுகின்றது. மக்கள் தங்கள் பக்குவத்திற்கும் அறிவு முதிர்ச்சிக்கும் ஏற்ப இந்த மூன்றில் ஒன்றைத் தாங்கள் பின்பற்றத் தக்க நெறியாகக் கொள்வர். இது இயல்பே. கர்ம யோகம் என்பது எல்லாப் பற்றுக்களையும் விட்டு இறைவனையே பற்றாகக் கொண்டு, தான் எடுத்த கருமத்தின் பலனைச் சிவார்ப்பணம் செய்து, நிறைவேற்றுதல். சைவத்தில் சரியா மார்க்கமும் கிரியா மார்க்கமும் ஓரளவு இதனுள் அடங்கும். ஞான யோகம் என்பது ஞானத்தாலேயே வீடு அடையும் மார்க்கம். பக்தி யோகம் என்பது, ஞானம் கைவந்த பின்னும் அல்லது அதற்கு முன்னும் கூட, இறைவனையன்றி வேறொன்றையும் அறியாத அனன்னிய பக்தி பண்ணுதல்; இது கிரியை ஞானம் ஆகிய இரண்டின்பாலும் படும்.

சைவ நாயன்மார் வரலாறுகள் யாவும் இந்த மார்க்கங்களுள் அடங்கும். பெரும்பான்மையோர் வரலாறு சரியை

யுள்ளும் பக்தி யோகத்தினுள்ளும் அடங்கியிருக்கக் காண லாம். கண்ணிடந் தப்பிய கண்ணப்பர் வரலாறும், தந்தை யைத் தாள் துணித்த சண்டேசர் வரலாறும், பக்தி மார்க்கத் திற்கு எடுத்துக் காட்டாக உள்ளவை. இவ்விருவர் வரலாறும் தமிழ்நாட்டில் மிக மிகப் புராதனமானவை.

## முத்தி நிலை

சரியை முதலான நான்கு மார்க்கங்களும் முறையே தாச மார்க்கம்—அடிமைத் திறம், சற்புத்திர மார்க்கம்—கடமையைச் செய்தல், சகமார்க்கம்—யோகப் பயிற்சி, சன் மார்க்கம்—ஞானநூல் ஓதி அதன் வழி நிற்றல் எனவும் சொல்லப்படும். சமயாசாரியர் நால்வரும் இந்நான்கு நெறி களுக்கும் எடுத்துக்காட்டாகச் சொல்லப் பெறுவர். இது உலகுக்கு உணர்த்தும் முகமாகக் கூறியதே அன்றி, பூரண உண்மையை விளக்கியது ஆகாது. நால்வரும் அவரவர் அந்தந்த நெறியில் நின்று எங்கும் வியாபகமாய் உள்ள இறை வனைத் தம்மிடத்திலே கண்டு தம்மையும் அவ்விறைவனோடு வியாபகமாய் உணர்ந்து, பூரண சத்திய ஞானனந்த வடி விலே இரண்டறத் தோய்ந்தவர்கள்.

மேலும் சரியையுள் நிற்போர் சாலோகம் பெறுவர் என் றும், கிரியையில் நிற்பவர் சாமீபம் பெறுவர் என்றும், யோகத் தில் நிற்பவர் சாரூபம் பெறுவர் என்றும், ஞானத்தின் வழிச் சென்றோர் மட்டுமே சாயுச்சியம் ஆகிய அத்துவித முத்தி பெறுவர் என்றும் சாத்திரங்கள் சொல்வதுண்டு. இக்கருத்து ஓரளவுக்கே பொருந்தும். ஞான மார்க்கத்தினுள் சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய மார்க்கங்களில் எதனில் நின்றோரும் உண்மையான பரமுத்தியாகிய சிவ சாயுச்சியத்தையே பெறுகிறார்கள். சாலோக, சாமீப, சாரூபம் என்பன பதமுத்தி நிலை என்பர் பெரியோர்; இந் தப்படி பதமுத்தி நிலை கைவரப் பெற்றோருக்கு மீண்டும் வந்து பிறத்தல் உண்டு. ஆனல் சாயுச்சியம் பெற்றோர் மீண்டு

வாரா நெறி பெற்றவர். இவர்கள் சிவபரம்பொருளோடு இரண்டறக் கலந்தவர்கள். இவர்களுக்கு மீண்டும் பிறப்பு எக்காலத்தும் இல்லை. நாயன்மார் அறுபத்து மூவரும் இந்த நெறியில் சென்றவர்களே. அவர்கள் பெற்றது பதமுத்தி யன்று, பரமுத்தியே.

## சிவசின்னங்கள்—திருநீறு

சைவருடைய வாழ்க்கையில் சிவ சின்னங்கள் முக்கிய இடம் பெறுகின்றன. சின்னங்கள் மூன்று. புறத்தே சரீரத்திலே அணிகின்ற திருநீறு, உருத்திராக்க மணி என இரண்டும், அகத்திலே எப்போதும் சிந்திக்கத் தக்க திருவைந்தெழுத்து என ஒன்றும் ஆகும்.

திருநீறு வடமொழியில் விபூதி எனப்படும்; இச்சொல்லின் பொருள் மேலான ஐசுவரியம் என்பதாகும். பலவகையாலும் இங்குப் பொதுவாக வழக்கில் உள்ள விபூதி பசுவின் சாணத்தை எடுத்து விதிப்படி சுட்டுப் பெற்ற சாம்பலே ஆகும். விபூதி தரிக்க வேண்டும் என்பதை உபநிடதங்கள் வலியுறுத்திக் கூறியிருக்கின்றன. தமிழ் வேதத்தில் திருஞான சம்பந்தர் பாண்டியன் சுரத்தைத் தீர்த்தபோது விபூதியின் பெருமையைக் கூறித் தனியாக ஒரு திருநீற்றுப் பதிகம் பாடியிருக்கிறார். விபூதியை மணமுள்ள மலர்கள் இட்டு வைப்பது முறை. வடக்கு அல்லது கிழக்கு முகமாக இருந்து அண்ணாந்து தரித்தல் முறை. நீரிட்டுக் குழைத்து விதிப்படி உரிய தானங்களில் இடலாம்; அல்லது தூளாகப் பூசிக் கொள்ளலாம். விபூதியைச் சிந்தலாகாது. பெரியோர் தரும்போது வணங்கிப் பெற வேண்டும். விபூதி அணிதலானது, ஞான ஒளியால் சுட்ட பசு மல நீக்கத்தின்போது விளங்குகின்ற சிவத்துவப் பேற்றிற்கு அறிகுறியாகும்.

## உருத்திராக்கம்

உருத்திராக்கம் என்பது சிவபெருமான் திருக்கண்ணில் தோன்றிய மணி என்று பொருளாகும். திரிபுரத்து அசுரர்

மூவரால் நிகழ்ந்த துன்பத்தைத் தேவர்கள் பெருமானிடம் விண்ணப்பித்தபோது அருள் சுரந்த அவரது திருக்கண்கள் பொழிந்த நீர்த்துளிகளே அம் மணிகள். இப்போது கிடைக்கின்ற உருத்திராக்கம் இமயமலையில் உள்ள ஒரு மரத்தினுடைய வித்து. சிவாசாரியரும் சைவரும் எந்த நேரமும் அக்கமணி அணிதல் சிறப்பு. சைவக்கிரியைகள் செய்யும் பொழுதேனும் அணிதல் இன்றியமையாதது. உருத்திராக்கமானது திரு அருட்பேற்றிற்கு அடையாளமாய் விளங்கும்.

## ஐந்தெழுத்து

மூன்றாவது சின்னம், திரு ஐந்தெழுத்து. திருவைந்தெழுத்து தக்க ஆசாரியரிடத்து உபதேச மூலம் பெறத் தக்கது. உபதேசிக்கின்ற குரு சாமானிய மனிதராயினும், அவரைப் பரம்பொருள் என்றே கருதி மாணக்கன் உபதேசம் பெறல் வேண்டும். உபதேசம் பெற்ற பஞ்சாக்கரத்தைக் காலை மாலை இரு சந்திகளிலும் உருத்திராக்கச் செபமாலை கையில் ஏந்திச் செபிக்க வேண்டும். நூற்றெட்டு உரு செபித்தல் முறையானது. பஞ்சாக்கர மந்திரத்தை மனத்திலே செபிக்க வேண்டும். மந்திரம் என்ற சொல்லிற்கு, "நினைப்பவனைக் காப்பது" என்பது பொருள். காலையில் கிழக்கு முகமாகவும், மாலையில் வடக்கு முகமாகவும் தக்க ஆசனத்தில் அமர்ந்து சிந்தனையை மந்திரத்தின் பொருளில் செலுத்திச் செபிக்க வேண்டும். மந்திரத்தின் தூலமான பொருள், மாயையை விலக்கி வினையைச் சுட்டு ஆன்மா அருளோடு சென்று சிவபரம் பொருளிடத்து ஒன்றுதல்; பிற பொருள்களைக் குருமுகமாய் அறிக.

## குருவழிபாடு

எல்லா வைதிக சமயங்களிலும் உள்ளது போலவே, சைவத்திலும் குருவைப் பரம்பொருளாகக் கருதி வழிபடுதல் வேண்டும். இக்காலத்தில் சுவானுபூதி பெற்றோர் மிகமிக

அரியர். இது காலத்தின் கோளாறு; அறிவியல் மட்டும் வளர்ந்து வளர்ந்து, ஆன்மவியல் மங்கிப் போயிற்று. ஆன்மானுபவம் பெற்றோரே இறையனுபவத்தை மாணுக்கருக்குத் தரமுடியும். இவ்வனுபவம் ஆசாரியனுக்கு இன்று இல்லாது போயினும், பாவனையாலே தான் கொள்ள வேண்டும். பாவனை உறைப்பால், ஒரு காலத்தில் ஆசாரியனிடத்தேனும் சீடனிடத்தேனும் உண்மையனுபவம் விளைதல் கூடும்; இது உலக அனுபவமும் சுருதி வாக்கியமும் கூட. திருவருள் அனுபவம் பெற்ற ஆசான் இருப்பின், அவன் பார்வைக்குட்பட்ட சீடனிடத்து ஞானம் தோன்றச் செய்யும் வலிமை அவனுக்குண்டு. விவேகானந்தருக்கு இறையனுபவத்தைத் தந்த இராமகிருஷ்ணபரமஹம்சர் போன்ற அனுபூதிமான்கள் நூற்றாண்டுக்கு ஒருவர் தோன்றுவது அருமை. இல்லாதவரை, கிடைத்த குருவைச் சிவமாகவே கருதி வழிபட வேண்டும்.

இக் காலத்தில் போலிக்குருமார் ஏராளமாய் முளைத்திருக்கிறார்கள். இரு வகையில் யோகி எனப் பெயர் வைத்துக் கொள்கிறார்கள். ஒரு வகையார் யோகாசனப் பயிற்சி செய்து உடலை வசப்படுத்தி வியக்கத்தக்க சில சாதனை செய்து காட்டுகிறார்கள். இது சர்க்கஸ் வித்தை போன்றது. இதற்கும் ஞானமார்க்கத்தில் நாம் கருதுகின்ற யோகத்துக்கும் சம்பந்தமே இல்லை. இந்த யோகம், திருவருள் துணையால், ஆன்மா தன்னைப் பரம் பொருளின் திருவடியில் ஒன்றச் செய்யும் ஒரு பக்குவமாகும். இதுபோலவே, சிலர் ஏதோ ஒரு வினையின் பயனாகச் செய்தற்கரிய செயல்கள் செய்யும் ஆற்றல் பெற்றிருக்கிறார்கள். அந்தரத்திலிருந்து தேங்காயும் பழமும் திருநீறும் கற்கண்டும் பிற பிரசாதங்களும் வரவழைக்கிறார்கள். பார்ப்பவர்களுக்கு இதுபெரிதும் பிரமிக்கத் தக்கதாய் இருப்பது இயல்பு. சென்ற தலைமுறையில் மக்கள் மெய்ஞ்ஞான நாட்டம் உடையவர்களாய் இருந்தபடியால், இவற்றையெல்லாம் ஒரு சித்து விளையாட்டு என்று ஒதுக்கி

விட்டுத் தங்கள் காரியத்தைப் பார்ப்பார்கள்; இவற்றைப் பெரிதுபண்ண மாட்டார்கள். ஆனால், ஆடம்பர நாட்டமே கொண்ட இக்காலத்தில், அறியாத மக்கள் இந்த விளையாட்டுக்களும் பயிற்சியும் சிவானுபவம் என்றே மயங்கி விடுகிறார்கள்; அறிவு படைத்தோர் என்போரும் மயங்குகிறார்கள். இது பெரிதும் இரங்கத் தக்க நிலை. இப்படிப் பட்ட போலி யோகிகள் தமிழ் நாட்டிலும் ஆந்திர நாட்டிலும் அனேகர் முளைத்திருக்கின்றார்கள். இவர்களே தெய்வம் என்று கருதுகின்ற அடியார் கூட்டங்கள் ஏராளம். இவர்களைக் கருதியே "குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வர். குருடும் குருடும் குருட்டாட்டமாடிக் குருடும் குருடும் குழிவீழுமாறே" என்று திருமூலர் பாடினார். இந்த விளையாட்டுக்கள் ஞான மார்க்கமல்ல; கடவுளை அணுகுவிக்கும் நெறி அல்ல. இவ் யோகிகள் நம் போன்ற சாமானிய மக்களே. அருள்நெறியில் ஓர் அடிகூட எடுத்து வைத்தவர்கள் அல்ல.

### தீக்ஷை

சீடன் சமய ஆசாரத்தில் அடியெடுத்து வைத்து வளர்ந்து மேல் நிலைக்குச் செல்ல உதவுவது ஆசாரியனுடைய அருள் நோக்கம்; இது தீக்ஷை எனப்படும். தீக்ஷைகள் பலவிதம். இப்பல வகைகளுள் மூன்று தொகுப்புக்கள் சிறப்பானவை. இவை சமய தீக்ஷை, விசேஷ தீக்ஷை, நிர்வாண தீக்ஷை என்பன. இவற்றுள் முதலாவதான சமய தீக்ஷை, ஆரம்ப தீக்ஷை ஆகும். இது சைவர் எல்லோரும் பெறத் தக்கது. தீக்ஷை பெற்றவனே சைவ சமயத்துக்குரிய கிரியைகள் யாவும் செய்யும் தகுதியுடையவன். பிராமணர் சந்தியா வந்தனம் செய்வது போல, காலை மாலை இருவேளைகளிலும் சைவர் செய்யும் வழிபாட்டுச் சடங்குக்கு அனுட்டானம் என்பது பெயர். தீக்ஷை பெற்றோர் அனுட்டானம் செய்யத் தக்கார். அனுட்டானத்தில் சிவ சூரிய வணக்கமும்.

சிவ காயத்திரி மந்திர செபமும், ஆசாரியன் உபதேசித்த பஞ்சாக்கர மந்திர செபமும் அடங்கியுள்ளன. விசேஷ தீக்ஷை என்பது இதனினும் அதிகச் சிறப்புடையது. இது ஆன்மார்த்தமாகச் சிவபூசை செய்யும் தகுதியைத் தருவது. இப்பூசை தினந்தோறும் காலையில் நீராடி உரிய முறையில் உணவு கொள்ளுமுன் ஆயுள் உள்ளவரை செய்யத் தக்கது. அடுத்த நிர்வாண தீக்ஷை என்பது இன்னும் சிறப்புள்ளது; இது மோக்ஷம் தரத்தக்க மார்க்கத்தில் சாதகன் தன்னைப் பயிற்ற உதவுவதாகும்.

தீக்ஷை என்ற சொல்லின் பொருள் அருள் நோக்கம் அதாவது, அருளைக் கொடுக்க மருளை நீக்குதல். பரம் பொருளாய் உள்ள சிவபெருமான், ஆசாரியனை அதிட்டித்து நின்று தீக்ஷை பெறுபவனிடத்து உலக வியாபாரத்தை விலக்கி, பிறவிக்கு ஏதுவாகிய மலத்தைக் கழித்து, சர்வ வியாபகமான சிவம் பிரகாசித்தற்கு ஏதுவாகிய ஞானத்தைக் கொடுத்துப் பிறவியைப் போக்குகிறான் என்பது கருத்து. சைவர் என்று சொல்லப்படும் தகுதிக்கு முதல் படி தீக்ஷை.

ஆன்மாக்கள் மல பந்தத்தை ஒட்டி மூன்று வகையாகச் சொல்லப்படுவர். விஞ்ஞான கலர் என்போர் ஆணவ மலம் ஒன்றினால் மட்டும் பந்திக்கப்பட்டவர். இவர்களுக்கு இறைவனே உள்நின்று உணர்த்தி ஆணவ மலத்தைப் போக்கி முத்தி அளிப்பன். இரண்டாவது பிரளயாகலர் என்போர்; ஆணவம் கன்மம் ஆகிய இருமலம் உடையோர், இவர்களுக்குப் பரமேசுவரன் இடபாரூடராகக் காட்சி அளித்து இரு மலங்களையும் போக்கி முத்தி அளிப்பன். இவ்விரு வகையினரையும் இன்று நாம் காணுதல் அரிது. நாம் காணும் மக்கள் அனைவருமே மும் மலம் உடையோர் ஆகிய சகலர். இவர்களை ஆணவம், கன்மம், மாயை ஆகிய

மும்மலங்களும் பந்தித்து நிற்கும். உள்நின்று உணர்த்த உணரும் தன்மை இவர்களுக்கில்லை; இடபாருடராய்க் காணும் தன்மையும் இல்லை. ஆகவே இறைவன் இவர்களுக்கு மனித உருவத்தோடு ஆசாரியனாக வந்து பக்குவமறிந்து உபதேசம் செய்து, மலத்தைப் போக்கிப் பக்குவ நிலை வரும்போது முத்தி அளிப்பன். இந்தச் சகலருக்கே தீக்ஷை போன்ற கிரியைகள் எல்லாம் உரியன.

குரு உபதேசத்தில் மந்திரம் முக்கியமான பகுதி. மந்திரங்களில் காயத்திரி மந்திரம் ஒன்று. காயத்திரி என்பது வட மொழியில் ஒரு யாப்பின் பெயர்; அவ்வளவே. பிராமணர் சொல்வது சூரிய காயத்திரி. சைவர் சொல்லத் தக்கது சிவ காயத்திரி. (இது மந்திரமாகையால் இங்கே சொல்ல வில்லை. குரு முகமாய் அறிக.)

உபதேசத்தின் இறுதியில் பஞ்சாக்கர செபம் மிக முக்கியமானது, பஞ்சாக்கர மந்திரமாகிய திருவைந்தெழுத்து 'நமசிவாய' எனப்படும். இது ஸ்தூல பஞ்சாக்கரம். சிவாய நம என்பது சூக்கும பஞ்சாக்கரம், பின்னும் அதி சூக்குமம் பஞ்சாக்கரம் முதலாயின திருமுறைகளிலும் சாத்திரங்களிலும் பயின்று வருகின்றன. குரு பஞ்சாக்கரத்தைச் சீடனுக்கு உபதேசிக்கும் போது சீடனது பக்குவத்துக்கு ஏற்ப ஐந்தெழுத்துக்களையும் முறைப்படுத்தி மாற்றியமைத்து மந்திரமாக உபதேசிக்கிறார். ஐந்தெழுத்துக்களில் ஒவ்வொன்றும் வெறும் எழுத்தன்று: சிவம், திருவருள், ஆன்மா, மறைக்கும் சக்தி, மலம் ஆகிய பெரும் தத்துவங்களின் குறியீடுகளாகவே எழுத்துக்கள் நிற்கின்றன. ஆகவே, எழுத்துக்களின் நிரல் பெரிதும் பொருளுடையதாகிறது. இது குருமுகமாய் உபதேசிக்கப் பெற வேண்டிய பொருளாதலால் இங்கு விரித்துச் சொல்லவில்லை.

*திருவைந்தெழுத்து வேதத்தில் உள்ளது. கிருஷ்ண யஜுர் வேதம் (தைத்திரீய சங்கிதை), நாலாம் காண்டம் ஐந்தாம் பிரபாடகத்தில்,* **ஓம்** *நம: சிவாய ச சிவதராய ச எனவரும் உருத்திராத்தியாய மந்திரத்தில் பிரணவத்தோடு கூடிய பஞ்சாக்கரம் பயில்வது காண்க.*

# சைவ சமய தத்துவம்

## (சைவ சித்தாந்தம்)

இதுவரையில் சைவ சமயத்தின் பல அம்சங்களை வெவ்வேறு தலைப்புக்களில் சிறிதளவு ஆராய்ந்து வந்தோம். சைவம் என்ற சொல்லால் குறிப்பிடப்படும் கருத்துக்கள் யாவை, சைவ சாத்திரங்கள், ஆசாரியர், வழிபாட்டு முறைகள், சடங்குகள் யாவை, சைவ தருமம் என்பது யாது என்றும் கண்டோம். சைவ சாதனம் என்று பார்த்தபோது ஓரளவு சமயக் கருத்துக்களையும் கலந்தே சொல்ல நேர்ந்தது. இனி, சைவம் என்ற சமயத்தின் தத்துவம் அல்லது கோட்பாடுகள் யாவை என்று பார்க்கலாம்.

### சைவ சித்தாந்தம்

சைவ சமயக் கோட்பாடுகள் பிற சமயக் கோட்பாடுகளினின்றும் தனியே பிரித்துச் சைவ சித்தாந்தம் என்று வழங்கப் பெறும். சித்தாந்தம் என்பது, இதுவே சமயம் அனைத்தினும் முடிந்த முடிவு என்பதைப் புலப்படுத்தும். சைவ சமயத்தைத் தோற்றுவித்தவர் என்று ஒருவர் இல்லை. சைவ சமயம் அனாதியானது. ஆதலால் சங்கரருடைய அத்வைதம், இராமானுசருடைய விசிஷ்டாத்வைதம், மத்வருடைய துவைதம் என்று சொல்வது போல, சைவ சமய முடிவாகிய சுத்தாத்வைதத்தை ஓர் ஆசாரியர் பெயரைச் சார்த்தி வழங்கும் வழக்கம் இல்லை. முன்னமே நாட்டிலும் நாயன்மார் பாடலிலும் வழங்கிய கருத்துக்களைத் தொகுத்து, பின்வந்த மெய்கண்டார் என்ற ஆசாரியர் புதிதாகச் சைவ சமய இலக்கணம் எழுதினர். அதனால் இவரைப் பிரதம ஆசாரியராகச் சைவர் கொள்கிறார்கள். மெய்கண்டாருக்கு

முன்னமே வடமொழிச் சைவாகமங்கள் இருந்தன என்று குறிப்பிட்டோம். இருப்பினும், இன்றைய சைவ சித்தாந் தத்துக்கு முக்கிய பிரமாண நூல்கள், ஞான மார்க்கத்தில் மெய்கண்டாரும் அவருக்குப் பின் வந்த சந்தான ஆசாரியரும் செய்த தமிழ் மெய்கண்ட சாத்திரங்களே; கிரியா மார்க் கத்தில் வடமொழி ஆகமங்கள். தமிழ்ச் சைவ சித்தாந்த ஆசாரியரான உமாபதிசிவம், 'வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தம்' என்று கூறியிருப்பதும், இங்கு முதன்மையாய் அறியத் தக்கது.

## முப்பொருள்

எல்லாச் சமயங்களிலும் ஆராய்ச்சிக் குரிய பொருள் மூன்றே. முதலாவது, தான்—நான் எனது என்று சொல்லு கின்ற பொருள். இதுவே உயிர் என்றும் ஆன்மா என்றும் ஆவி சேதனன் ஜீவன் ஜீவாத்மா என்றும் பல பெயர் களால் வழங்கப் படுகிறது. இரண்டாவது, இப் பொருளின் அனுபவத்துக்கு விஷயமாய் இந்திரியங்களால் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியப்படுவதாய் உள்ள, வெளி உலகம், அதை யொட்டிய கருத்துக்கள், தொடர்பு கள். உலகம் என்று கூறுவது ஸ்தூலமான பொருள்; பந்தம் என்றும் பாசம் என்றும் குறிப்பிடுவது சூக்ஷ்மமான கருத்து. பிரகிருதி என்றும் மாயை என்றும் பாசம் என்றும் சமயங் கள் இதை வெவ்வேறுய்ச் சொல்லும். சொல்லிலேயே அதனதன் கருத்து வேற்றுமைகள் அடங்கிக் காணப்படும். மூன்ருவது, இவற்றுக்கும் அப்பால் உள்ளதாகிய, இவற்ருல் எட்ட முடியாததாகிய, பரம் பொருள்—பரமாத்மா, பிரமம், பதி, கடவுள் இறைவன் என்று சொல்வதெல்லாம் இப் பொருளையே. இம் மூன்றின் தன்மைகளையும் இவற்றுக் கிடையுள்ள தொடர்புகளையும், முதலில் சொல்லிய உயி ரானது இரண்டாவது சொல்லிய பந்தத்திலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு, மூன்ருவது சொல்லிய பதியாகிய

இறைவனை அடையும் மார்க்கத்தையும் கூறுவதில்தான் சமய வேறுபாடுகள் எழுகின்றன.

## பதி-சிவம்

இனி, சைவ சித்தாந்த தத்துவங்களைச் சுருக்கி இங்குக் கூறுவோம். சைவத்தில் பரம் பொருளைப் பதி என்று சொல்லுகிறோம். ஏனைய பசு பாசங்கட்கு அப்பாற்பட்டு, எல்லாவற்றுக்கும் தலைமை பூண்டிருத்தலினால் இப் பெயர். பதி என்ற சொல்லுக்குக் காப்பவன் என்பது பொருள். ஆன்மாக்களாகிய பசுக்களைக் காத்தலினால் பசுபதி என்பதும் ஒரு பெயர். இப் பெயரும் யஜுர் வேதத்தில் காணப்படுவது. உயிர்கள் தோறும் தங்கி இயக்குதலால் இறைவன். மனம் மொழி மெய்களையும் பிற எல்லாவற்றையும் கடந்திருத்தலால் கடவுள். பிரமம் என்று வேதாந்தம் கூறும் பொருளே சைவத்தில் சிவம் என்று சொல்லப் பெறும். சிவம் அருவமும் அல்லர், உருவமும் அல்லர்; அருவுருவப் பொருளும் அல்லாதவர்; இருப்பினும், யார் எந்தத் தெய்வமாக எண்ணினாலும், அந்தத் தெய்வமாக வந்து அருள்புரிபவர். அவர் குணங்கடந்த பொருள். (நிர்க்குணர்). தன்வயத்தன் ஆதல், தூய உடம்பினன் ஆதல், இயற்கை உணர்வினன் ஆதல், முற்றும் உணர்தல், இயல் பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருள் உடைமை, முடிவு இல் ஆற்றல் உடைமை, வரம்புஇல் ஆற்றல் உடைமை என்ற எண் குணங்களை உடையவன் இறைவன் என்று சொல்வர்; இது உபசாரமாகத் தொகுத்துச் சொன்னதே யாகும். எனினும், அப் பரம்பொருளின் தன்மையைப் பின் வருமாறு கூறலாம். அப்பதி, பிறவற்றுக்குத் தோற்றமும் ஈறும் செய்பவராகி, தமக்கு இவை இல்லாதவர்; ஆதியும் அந்தமும் இல்லா அரும் பெரும் சோதி. எங்கும் எக் காலத்தும் நிறைந்தவர். சிவபெருமானுக்கு ஒருகாலத்தும் அவதாரமில்லை, மாயா காரியமாகிய உடம்போடு அவருக்

குத் தொடர்பில்லை. பூதகாரியமல்லாத அருளே உடம்பாக உடையவர். ஏகதேசமில்லாது, சர்வ வியாபக அறிவுடையவர்; ஞானமயமானவர். சைவ சமயம் சொல்லுகின்ற பாசத் தொடர்புகளை அவர் ஊட்டுகின்றவர்; இயல்பாகவே அவருக்கு அவற்றின் தொடர்பு இல்லை. அவர் சர்வ சக்திமான். பிரமா விஷ்ணு ருத்திரர்களைக் கொண்டு உலகில் தோற்றல் காத்தல் அழித்தல் ஆகிய தொழில்களைச் செய்விக்கிறார். மூவரையும் அதிட்டித்து நின்று இத் தொழில்களைச் செய்கிறார் என்று சாத்திரம் சொல்லும். உருத்திரன் வேறு; அவர் அழித்தல் தொழில் மட்டும் செய்கிற ஒரு மூர்த்தி; சிவம் வேறு; சிவம் பரம்பொருள், அவர் ஒருவரே பரம்பொருள், மற்றொரு பரம் பொருள் இல்லை. அவர் என்றும் உள்ளவர், பிற யாவும் தோன்றும் ஒடுங்கும், அவர் அவற்றைத் தோற்றுவித்து ஒடுக்குவார். அவர் பூரணர்; எல்லாவற்றிலும் எங்கும் எக்காலத்தும் நிறைந்து நின்றாலும், தாம் பின்னப் படாதவர், போக்குவரவு இல்லாதவர். உயிர்களுக்கு அறிவாக விளங்குபவர். குணாதீதர் (குணங்களைக் கடந்தவர்); எனினும், ஆனந்தமே வடிவாக உள்ளவர். அவன் அருளே கண்ணாக, அவன் தன்னைக் காட்டினாலன்றி இவன் இறைவன் என்று சுட்டிக் காண முடியாதவர். என்றைக்கும் உள்ள பொருள் அவர் ஒருவரே. அணுவிற்கு அணுவாயும், அப்பாலுக்கு (எவ்வளவு பெரிய பொருளுக்கும்) அப்பாலாயும் விளங்குபவர். ஆன்மகோடிகளால் கிட்டுதற்கு அரியவர்; எனினும், அவரே எல்லாப் பொருளுக்கும் புகலிடமாய் இருப்பவர். கருணையே வடிவாக உள்ளவர். வினையை ஆன்ம கோடிகளுக்கு அவர் ஊட்டுவிப்பார். அவருக்கு வினையில்லை. ஆதலால் அவர் ஒருபோதும் பிறருக்குக் கட்டுப்பட்டவரல்லர்; எப்போதும் தம் வயமே உடையவர்.

பரம் பொருளுக்கு சைவத்தில் சொரூப லக்ஷணம், தடத்த லக்ஷணம் என இரண்டு நிலைசொல்லப்படும். இவற்றை முறையே பொது இயல்பு, சிறப்பு இயல்பு என

லாம். சொரூப லக்ஷணம் என்ற நிலையில், கடவுளுக்கு ஒரு நாமம் ஓர் உருவம் ஒரு குணம் ஒன்றும் இல்லை; உருவம் அருவம் அருவுருவம் எதுவுமில்லை; இந்தப் பொருள் மனம் வாக்குக் காயம் மூன்றினாலும் அறிய முடியாதது; இப் பொருளே பரம் பொருள், பரமசிவம் அல்லது சுத்த சிவம். இந்த நிலையில் உள்ள சிவம் தானாக உயிர்களிடத்துக் கருணை கூர்ந்து தன் நிலையிலிருந்து இழிந்து வருகிறது; ஏன் என்று கேட்டால், உயிர்களிடத்துள்ள துன்பத்தைப் போக்கவேண்டும் என்ற பேரருளே காரணம். இந்த சிவம் பிரமா விஷ்ணு ருத்திரன் முதலான பல நிலைகளில் உள்ள தெய்வங்களை அதிட்டித்து நின்று அவர்கள் மூலமாக ஆணையைச் செலுத்தி ஐந்தொழிலைச் செய்கிறது. ஒன்றிலும் தோய் வில்லாமல் தன்னுண்மையில் நிற்கும் பொருள் சிவம். உலகெலாம் ஆகி உடனுமாய் வேறாய் உயிர்களின் வழி நிற்கிற தன்மையில் இப்பொருள் சக்தி. ஐந்தொழில் முதலான தொழில்களை இயற்றுவிக்கும் தன்மையில் இதே பொருள் பதி என்று பெயர் பெறுகிறது. இவ்வாறு பிரமன் முதலானவர்களை அதிட்டித்து நின்று தொழில் செய்யும் நிலையே சிவத்தின் தடத்த லக்ஷணம் என்று சொல்லப்படும்.

## பசு

அடுத்த பொருள் பசு. பசு என்றாலும் உயிர், ஆன்மா என்றாலும் ஒன்றுதான். பதியைப்போலவே பசுவும் அநாதியாக உள்ளது, நித்தியமானது, அழிவற்றது. ஆன்மாக்கள் எண்ணிக்கை இல்லாதன. ஆன்மாவை இறைவன் படைக்கவில்லை. இறைவன் படைப்பது உயிர்களுக்கான உடல் கருவி கரணங்கள் உலகங்கள் போகங்கள் மட்டுமே. உயிர்கள் புல் பூண்டு முதல் மனிதர் தேவர் வரை எண்ணற்ற வகையாகப் பிறக்கும். அநாதியாக இவை பாசத்தால் பிணிப்புண்டு கிடக்கும். உயிருக்கு இயல்பு சார்ந்ததன்

வண்ணமாயிருப்பது. அசத்தான உலகைச் சார்ந்து அசத்துப் பொருளாகவும், அருள் வசத்தால் இறையைச் சார்ந்தால் சத்தாகவும் இருக்க வல்லது. அழிவது உயிரன்று ; உயிருக்கு அமைந்த உடல் முதலான கருவி கரணங்களே. ஆணவ மலத்தோடு பொருந்திக் கேவலநிலையில் கிடக்கும் ஆன்மா, சூக்கும நிலையிலுள்ள கன்மத்துக் கீடான உடம்பைத் திருவருளாலே பொருந்தும். அவ்வாறு பொருந்துமிடத்து, உயர்திணை அஃறிணைப் பொருள்களாக உடம்பெடுத்து, அவ்வுடம்பினாலே எல்லையில்லாத போகங்களை நுகரும். நுகரும்போது செய்கிற வினை காரணமாக மீண்டும் புண்ணிய பாவங்களைத் தேடி, மீண்டும் மீண்டும் பிறப்பிலும் இறப்பிலும் ஊசலாடும். இவ்வாறு சுழலுங் காலத்தில், அருள் வசத்தால், செம்பில் களிம்புபோல அனாதியே பொருந்தின ஆணவ மலம் பரிபாகமடையும் காலம் வரும். அப்போது ஞானாசிரியன் தோன்றி அருள் உபதேசம் செய்வான் ; செய்து ஆன்மாவை முத்தி நெறியில் செலுத்துவான். குரு உபதேசத்தால் பெற்றஞானம் சிவ ஞானமாகும். அச்சிவஞானம் ஆன்மாவிடத்துள்ள ஆணவ மலத்தின் வலியைப் போக்கும். அந்த நிலையில் ஆன்மாவானவன் இறைவன் திருவடியில் இரண்டறக் கலந்து சிவானுபவத்தை அனுபவித்துக் கொண்டிருப்பன்.

நான் நான் என்று பேசும்போது அந்த நான் என்ற சொல்லால் குறிப்பிடப்படும் பொருளாக உள்ளது உயிர். இது பிராணவாயுவினும் வேறானது. ஐம் புலன்களாலும் மனம் புத்திபோன்ற கரணங்களாலும் அறிவது உயிர். உயிருக்கு நினைப்பும் மறப்பும் உண்டு; இறைவன் ஒருவனே முற்றுணர்வினன்.

## பாசம்

மூன்றாவது பொருள் பாசம். பாசம் என்ற கருத்து வேறு, வேதாந்தத்தில் மாயை என்று சொல்வது முழுமையும் வேறான கருத்து.

**ஆணவம்**

உயிரை அநாதியே பிணித்திருக்கிற பாசம் என்பது மூவகை. பிணிப்பதால் பாசம் என்று பெயர். பாசம், கட்டு, தளை, பந்தம் என்பதும், மலம் என்பதும் ஒன்றே. ஆன்மாவைப் பிடித்த அழுக்காதலால் இது பொதுவாக மலம் என்று சொல்லப்படும். ஆணவம் கன்மம் மாயை என மலம் மூன்று. இவற்றுள் ஆணவமானது அணுத்தன்மையைச் செய்வது. சங்கார காலத்தின் பின் மாயையில் உயிர்கள் யாவும் செயலும் அறிவுமின்றி ஒடுங்கிக் கிடக்கும், படி செய்த பொருள் ஆணவமாகும். ஆணவத்துக்கு இருள் என்று ஒரு பெயருண்டு. பூத இருளானது புறப்பொருளைக் காட்டாது, மறைக்கும்; ஆயினும் தான் இருள் என்று காட்டிக் கொள்ளும். ஆனால் அருவமாயிருக்கின்ற இந்த ஆணவ இருள், புறப் பொருளையும் மறைத்துத் தன்னையும் காட்டாமல் மறைத்துவிடும். இதனால் ஆணவ இருளில் அழுந்திக் கிடக்கின்ற ஆன்மா நாம் இருளில் அழுந்தியிருக்கின்றோமென்று உணரமுடிவதில்லை. இவ்விருள் ஒன்றாயிருப்பினும் அளவில்லாத சக்தியுடையது. செம்பிலே பொருந்திய களிம்புபோல அநாதியாக உள்ளது. இது அழிவில்லாத மூல மலம். ஆன்மாவினுடைய இச்சா சக்தி, கிரியாசக்தி, ஞானசக்தி என்ற மூன்றையும் முழுதும் மறைப்பது. ஆணவ மலமென்பது ஆன்மாவின் தன்மையன்று; அதனிடத்து ஏற்பட்ட அழுக்கு.

**கன்மம்**

இரண்டாவதான மலம் கன்மம். கன்மம் என்பது வினை நல்வினை தீவினை இரண்டும். கன்மமே பிறவிக்குக் காரணம். எல்லா உயிர்களும் ஒரே விதமான பிறவி எடுப்பதில்லை. பிறவியின் தன்மையும் ஆற்றலும் அதில் விளங்கும் அறிவும் வெவ்வேறு வகையாக இருக்கின்றன. இதற்குக் காரணம் மூல கன்மம் என்று சொல்லப்படும். கேவல நிலையில் ஆண

வத்தில் அழுந்திக் கிடந்த உயிர்களுக்கு ஆணவத் தொடர்பில் வன்மையும் மென்மையும் உண்டு. இப்படியே திருவருள் தொடர்பிலும் உயர்வு குறைவு உண்டு. இவற்றால் உடலெடுக்குமுன் உயிருக்கு அநாதியாகவே நல்வினை தீவினைகள் பொருந்துகின்றன. இனி பிறவி எடுத்தபின் செய்கின்ற வினைகளும் உள்ளன. இந்தக் கன்மமானது வித்தும் முளையும்போல நாசத்தையும் தோற்றத்தையும் உண்டாக்குவது. ஆன்மாக்கள் தோறும் சூக்குமமாய் உள்ளது. மனம் வாக்குக் காயம் மூன்றினாலும் கன்மம் விளையும். உயிர்கள் தோறும் இது இன்ப துன்பங்கள் விளைவதற்குக் காரணமாகிய புண்ணிய பாவங்களாகப் பொருந்தும்.

உயிர்கள் எடுக்கின்ற எண்ணில்லாத பிறவிகள் தோறும் செய்த வினைகளின் தொகுதி மிகப் பெரியதாகும். இத்தொகுதியை ஆன்றோர் மூன்றாகப் பாகுபடுத்திச் சொல்லியிருக்கிறார்கள். வினை ஒரு வகையில் நாம் உண்ணும் உணவு போன்றது. நாம் பின்னால் எடுத்துப் பயன்படுத்திக் கொள்வதற்காகக் களஞ்சியத்தில் நெல்லைச் சேமித்து வைத்திருக்கிறோம். இது போன்றதே உயிர்கள் முற்பிறவிகளில் செய்த வினைகளின் தொகுதி. இது சஞ்சிதம் எனப்படும். ஒரு பகுதி நெல்லை அரிசியாக்கி உலையிலிட்டுச் சமைத்து இப்பொழுது உண்கிறோம். இதைப் போலவே இப்பொழுது எடுத்திருக்கிற பிறவிக்கு வித்தாகவும் இப்பொழுது அனுபவிக்கிற, இன்ப துன்பத்திற்குக் காரணமாகவும் உள்ளது வினையின் ஒரு பகுதி: இதற்குப் பெயர் பிராரத்தம். இனி மூன்றாவதாக, வயலில் சில நாள் கழித்து அறுவடை செய்து களஞ்சியத்தில் கொண்டு வந்து சேர்ப்பதற்காக இப்போது விளைந்து பக்குவப்பட்டு வருகிற நெல் ஒரு வகை. இதை ஒப்பது இப்போது எடுத்த பிறவியில் செய்யும் செயல்களால் வந்து திரளக் கூடிய வினைத் தொகையாகும். இதற்கு ஆகாமியம் என்பது பெயர். இங்ஙனமாக

மூன்று வகை வினைகள் உள்ளன. மூன்றும் நீங்கும் வகையும் வெவ்வேறு.

**மாயை**

மூன்ருவதாகச் சொல்லப்படும் மலம் மாயை என்பது. மா யா என்ற சொல்லுக்குத் தோன்றி ஒடுங்குவதற்கு இடமா யுள்ளது என்று பொருள். மாயை எல்லாக் காரியங்களும் தன்னிடத்தில் ஒடுங்கவும், தன்னிடத்தில் தோன்றவும் காரணமாக இருப்பதால் இது மாயை எனப்படும். (மா—ஒடுங்குதல், யா—தோன்றுதல்.) மாயை உலகத்தைப் படைப்பதற்கு ஒரு காரணப் பொருள். இது அருவமாய் உள்ளது. உலகிற்கு முதற்காரணம் மாயை என்பதாகும். சூக்குமமான மாயையிலிருந்து தூலமான உலகு உண்டாகிறது. உலகத் தோற்றத்திற்கு இறைவனுடைய சத்தி துணைக் காரணம்; இறைவன் நிமித்த காரணன் எனப்படுகிருன். ஆன்மாக்கள் வினைகளின் பயனை அருந்தி இருவினை ஒப்பு ஏற்படுத்துவதற்காக, இறைவன் தனது பரம கருணையினுல் மாயையிலிருந்து தனுகரணபுவன போகங்களைப் படைத்தான். தனு-உடம்பு; கரணம்-அனுபவிப்பதற்குரிய கருவிகள்; புவனம்-உலகங்கள்; போகம்-அனுபவிப்பதற்குரிய பொருள்கள். இவை மாயையின் காரியம் எனப்படும். ஆணவமானது ஆன்மாவை இருளில் அழுந்திக் கிடக்கும்படிச் செய்ய, கேவல நிலையில் அறிவிழந்து கிடக்கும் ஆன்மாவுக்கு மாயையே உடலும் கருவியுமாக அமைந்து, ஆன்மாவிடத்தில் அறிவாகிய ஒளி சிறிது விளக்கம் பெறச் செய்வதாகும். இதனுலேயே 'மாயாதனு விளக்கு' என்று சொல்லப்பட்டது. எனினும், ஆணவத்தின் தொடர்பால் சில சமயம் மாயையே ஆன்மாவின் அறிவுச் செயல்களை மறைப்பதும் உண்டு.

மாயை என்று இங்கு பேசுவது வேறு. வேதாந்த மார்க்கத்தில் பேசுகின்றது வேறு. அங்கு மாயையின் மறைப்

பினால் ஆன்மாவுக்கு, நானே பிரமம் என்ற அறிவு இல்லாமற் போகிறது; மாயை விலகிய பின் ஆன்மா தன்னைப் பிரமமாகக் காண்கிறான். ஆனால் சைவ சித்தாந்தத்தில் மாயையின் நிலை வேறு; இது ஆன்மாவுக்குத் தனுகரண புவன போகங்களைத் தந்து வினை அனுபவித்துக் கழிய உதவி செய்கிறது; தான் சூக்குமகாரணமாக இருந்து ஸ்தூல காரியங்களை உண்டாக்குகிறது. இது மறைப்பல்ல.

இம் மாயை சைவ சித்தாந்தத்தில் மூன்று விதமாகச் சொல்லப்படும். இவை சுத்தமாயை அசுத்த மாயை பிரகிருதி மாயை என்பன. இந்த மூன்று வகை மாயைகளுக்கும் விளக்கம் கூறினால் அதுவே சைவம் ஒப்புக் கொள்ளும் முப்பத்தாறு தத்துவங்களுக்கும் விளக்கம் கூறியதாகும்.

**சுத்த மாயை**

சுத்தமாயை (விந்து எனவும் பெயர்) என்பது, இறைவன் நேரே ஐந்தொழில் நடத்துவதற்குரிய மூலப்பொருள். இது நித்தமானது, வியாபகமானது, மயக்கம் செய்யாதது. சுத்த மாயையில் தோன்றுவன சிவ தத்துவங்களாகிய சுத்த வித்தை, ஈசுரம், சதாசிவம், சத்தி, சிவம் என்னும் ஐந்தும். இந்தத் தத்துவங்கள் ஐந்தினையும் கலந்து நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை என்ற ஐந்து கலைகளும் நிற்கும். வாக்குக்கள் நான்கு: வைகரி, மத்திமை, சூக்குமை, பைசந்தி என. இவை தூலவைகரி, சூக்கும வைகரி, மத்திமை, சூக்குமை, பைசந்தி என ஐந்தாகப் பிரிந்து, முறையே இவ்வைந்து கலைகளையும் பற்றி நிற்கும்.

ஆன்மாக்கள் மலபந்த பேதத்தினால் மூவகையர்: மூன்று மலங்களாலும் பிணிப்புண்டவர் சகலர், மாயையொழிந்த மற்றக் கன்மம் ஆணவம் ஆகிய இரண்டாலும் பிணிப்புண்டவர் பிரளயாகலர், ஆணவம் ஒன்றினால் மட்டும் பிணிப்புண்

டவர் விஞ்ஞான கலர் என்று முன்னமே கூறினேம். மேற் கூறிய சுத்த மாயையாகிய புவனம், ஆணவ மலம் மாத்திர முடைய விஞ்ஞான கலருக்கு உறைவிடம். இம் மாயை துன்பத்தோடு விரவுதலின்றி இன்பம் மாத்திரையே பயப்பது ஆதலின் சுத்தம் எனப்படும்.

## அசுத்த மாயை

அசுத்த மாயை (அதோ மாயை என்றும் மோகினி என்றும் பெயர்) என்பது, சுத்த மாயையில் தோன்றும் சிவ தத்துவங்களில் குறைந்த சுத்த வித்தைக்கும் கீழ்ப்பட்டது. இதுவும் நித்தமாய் அருவமாய் வினைக்குப் பற்றுக் கோடா யிருந்து, வித்தியா தத்துவங்களின் பிறப்பிடமாய் இருப்பது. இவை ஏழு: காலம் நியதி கலை வித்தை அராகம் புருடன் மாயை (இதுவே பிரகிருதி மாயை) என்பன. இவற்றுள் புருடன் என்று இங்குப் பேசுவது, மற்றவை போல ஒரு சட தத்துவமன்று; அதற்கு முன்னுள்ள ஐந்து வித்தியா தத்துவங்களும் கூடப் பெற்று, அடுத்த தத்துவமாகிய பிரகிருதி மாயையில் போக நுகர்ச்சியைக் கருதி நிற்கின்ற உயிரின் நிலையே புருட தத்துவம் என்று சொல்லப்படும். காலம் நியதி கலை வித்தை அராகம் ஆகிய தத்துவங்களி லுள்ள புவனங்களில் உறையும் ஆன்மாக்கள், ஆணவம் கன்மம் என்னும் இரு மலங்களால் பந்திக்கப்பட்டவர். இவர் களுக்குப் பிரளயாகலர் என்பது பெயர். முற்கூறிய சுத்த மாயை அல்லாதபடியால் இது அசுத்தமாயை எனப்படும்.

## பிரகிருதி மாயை

பிரகிருதி மாயை (மான் என்றும் பெயர்) என்பது முற் காட்டியபடி வித்தியா தத்துவங்களில் இறுதியாகச் சொன்ன தத்துவமாகிய மாயையாகும். இது போக நுகர்ச்சி நிகழ் வதற்கு மூலமாதலால், மூலப்பிரகிருதி, மூலப்பகுதி என்றும் பெயர் பெறும். அவ்வியக்தம் என்ற ஒரு பெயரும் இதற்

குண்டு. முக்குணங்களும் இதனிடத்துச் சூக்குமமாய் வெளிப் படாமல் (அவ்வியக்தமாய்) நிற்பதால் அப்பெயர். மூலப்பிர கிருதியே பஞ்சக்கிலேசமாகிய அவிச்சை ஆங்காரம் அவா ஆசை கோபம் என்பன விளைதற்குக் காரணம். மூலப்பிர கிருதியே வித்தியா தத்துவங்கள் இருபத்து நான்கும் தோன்றுவதற்கு மூலம். இவ் விருபத்து நான்கும் பின் வருவன: பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசம் எனப் பூதம் ஐந்து, சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் எனத் தன்மாத் திரை ஐந்து, கன்மேந்திரியமான வாக்கு பாதம் பாணி பாயுரு உபத்தம் என ஐந்து, ஞானேந்திரியமான மெய் வாய் கண் மூக்கு செவி என ஐந்து, மனம் புத்தி சித்தம் அகங்காரம் என அந்தக் கரணம் நான்கு—ஆக 24.

ஆணவம் கன்மம் மாயை என மூன்று மலங்களாலும் பந்திக்கப் பட்டவர்கள் மூன்றுவது வகையினரான சகலர் என்போர். இவர்கள் உறைவிடம் பிரகிருதிமாயை. நாம் அனைவரும் சகலர்.

## பஞ்ச மலம்

பஞ்ச மலம் என்று கூறும் ஒரு வழக்கும் உண்டு. ஆண வம் கன்மம் மாயை என்ற மூன்றோடு, திரோத மலம் மாயே யம் என்ற இரண்டும் சேர்ந்து ஐந்தாகும். மூல மலமான ஆணவ மலத்தோடு பொருந்தி நின்று அதைப் பக்குவப் படச் செய்வது திரோதான சத்தி என்பது. இதுவும் இறை வனது அருட் சத்திதான். இது வினைப்பயனை ஆன்மாக்கள் அனுபவித்துத் தீர்த்தற் பொருட்டு, உண்மையை உணர வொட்டாமல் சிறிதளவு மறைத்தலால் இதுவும் ஒரு மலம் எனப்படும். (திரோதானம்—மறைத்தல்.) இம் மறைப்பு உயிருக்கு உதவியேயாகும்.

மற்றொரு மலம் மாயேயம் என்பது. இது சுத்த மாயை யின் திரட்சி அல்லது காரியமாகிய சுத்த தத்துவங்களே யாம்; ஆணவத்தால் மறைக்கப்பட்ட ஆன்மாவின் ஞானக்

கிரியா சக்திகளை வெளிப்படுத்தும் பொருட்டும், வினைப் பயன்களை அனுபவிக்கும் பொருட்டும், இன்றியமையாத தனுகரண புவன போகங்கள் காரியப்படும் நிலையில் அசுத்த மாயா காரணத்தில் சிவசக்திகளால் தோற்றுவிக்கப்படுவது. மாயையின் காரியமே மாயேயம் என்று சொல்லப்படும்.

## ஐந்தொழில்

இவ்வாறு அனாதியே மூவகை மலத்தாலும் தொடக்குண்டு கிடக்கும் ஆன்மாக்களை மலபந்தத்திலிருந்து விடுவித்துப் பேரின்ப வாழ்வு அளிக்க வேண்டுமென்ற பெருங் கருணை முதல்வனுக்கு உண்டு. இக் கருணையின் வெளிப்பாட்டை விளையாட்டு அல்லது லீலை என்பார்கள். இக் கருணையின் செயல்கள் ஐந்தாகச் சொல்வது மரபு—படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என. இவற்றைச் சிவபெருமானின் ஐந்தொழில் என்று சைவம் கூறும். ஐந்தொழில் செய்யும் அவசரம் நடராசப்பெருமான் என்பதாகும். சைவ வழிபாட்டைக் கூறிய இடத்தில் இவ்வைந்தொழில்களையும் நடராச தத்துவத்தையும் விளங்க உரைத்தோம்.

படைத்தல்—சிருஷ்டி, தோற்றுவித்தல். இறைவன் உயிர்களையோ உலகையோ சூனியத்திலிருந்து உண்டாக்கவில்லை. உயிர்களும் உலகத் தோற்றத்துக்குக் காரணமான சூக்குமப் பொருளும் இறைவனைப் போல என்றைக்கும் உள்ள பொருள். இவை ஒரு காலத்திலும் அழிவதில்லை என்பதை முன்னமே குறிப்பிட்டோம். இது சைவ சித்தாந்தத்தின் அடிப்படைக் கருத்து. இது போலவே உள்ளது போகாது, இல்லது வாராது என்பது மற்றொரு கருத்து. இதைச் சற்காரிய வாதம் என்பார்கள். சூனியத்திலிருந்து எதுவும் உண்டாகாது, உள்ளதெதுவும் சூனியமாகாது என்பது இதன் பொருள். இறைவன் மாயையை முதற் காரணமாகவும் தான் நிமித்த காரணமாகவும்

இருந்து உலகைப் படைக்கிறான் என்பர். இது பானை வனையும் குயவன் மண்ணை முதற் காரணமாக வைத்து, சக்கரமும் கோலும் துணைக் காரணமாய்க் கொண்டு, தான் நிமித்த காரணமாயிருந்து, பானை வனைவது போல. சிருட்டி எப்போதும் நிகழ்ந்து கொண்டே இருப்பது; இதற்கு முடிவில்லை.

உலகத்துப் பொருள்கள் யாவும் ஒரு காலத்தில் உண்டாகிச் சிறிது காலம் இருந்து பின் அழியும் தன்மையுடையன. உயிர்கள் வாழ்வதற்கு இடமாயுள்ளது உலகம். படைக்கு முன் உயிர்கள் கேவல நிலையில் ஆணவ இருளில் அழுந்தி அறிவு விளங்கப் பெறாமல் மாயையில் வினையால் கட்டுண்டு கிடந்தன. இந்தத் துன்ப நிலையைப் போக்கி ஆன்மாவைப் பேரின்ப நிலைக்குச் செலுத்த எண்ணிய இறைவன் வினை அனுபவித்துத் தீரவும், ஆணவம் விலகி ஞானம் விளங்கவும் வேண்டி, உயிருக்கு உடலும் கண் காது முதலான கருவிகளும், வாழ்வதற்கு உலகும், போகத்துக்குப் பல பொருள்களும் தோற்றுவித்தான். இதுவே படைப்பு. படைப்பின் முடிவான நோக்கம் இங்குக் கூறிய மும்மல நீக்கமே.

காத்தல் என்பது ஸ்திதி. இத்தொழிலின் கருத்தாவது, உயிர்களையும் தோற்றுவிக்கப்பட்ட தேகாதிப் பிரபஞ்சங்களையும் அவ்வவற்றுக்குரிய கால எல்லை வரையில் நிலை பெறுமாறு காத்து, உயிர் வினைப்பயனை அனுபவிக்கத் துணை செய்தலாகும். உலகைப் படைத்த இறைவன் உயிர்களுக்குப் பல வகையான உடல்களைத் தருகிறான். உடல்களும் வாழ்நாளும் பெற்று வாழும் உயிர்கள் வினை செய்கின்றன. வினை பிறவியைத் தருகிறது. பிறவியில் ஊசலாடும் உயிர், வினைக்கு ஏற்ப அறிவு விளக்கம் பெறுகிறது. இவ்வாறு அனுபவித்தற்குப் பொரு

ளாக உலகையும் கருவிகளாக உடல் முதலியவற்றையும் தந்து நிலை பெறச் செய்தலே காத்தல்.

மூன்ருவது சங்காரம், அழித்தல். உயிர்களுக்கும் பாசங்களுக்கும் அழிவு என்பது இல்லை. ஆகவே, இங்கு அழித்தலின் பொருள் இளைப்பாற்றுதல் என்று சாத்திரம் கூறும். மகாப்பிரளயம் என்பது அனைத்தும் ஒடுங்கும் கால எல்லை. அப்போது எல்லா உலகங்களும் உயிர்களும் சூக்கும நிலையில் மறைந்து நிற்கும். பிறப்பினிலும் இறப்பினிலும் பட்டுச் சுழன்று களைத்த உயிருக்குச் சில காலம் இளைப்பாறச் செய்வதே அழித்தல் என்னும் பொருளது. இதன் நோக்கம், மீண்டும் சிருட்டிக் காலத்தில் அவ்வுயிர் இளைப்பு நீங்கித் தனுகரண புவன போகங்களுடன் கூடி வினைப்பயனை அனுபவித்துத் தீர்ப்பதற்கு வேண்டிய வலிமையைத் தருவதாகும்.

திரோபவம் என்பது மறைத்தல். மறைத்தலால் உயிர் வினையிலீடுபட்டு அனுபவிப்பதால் காலக்கிரமத்தில் இருவினையொப்பு நிகழ்கிறது. இது மல முதிர்ச்சிக்கு, அதாவது பரிபாகத்திற்கு, உதவியாகிறது.

அனுக்கிரகம் அருள் செய்தல். இருவினை ஒப்பு நிகழ்ந்து மலம் பரிபாகப்பட்ட அளவில், அனுக்கிரகம் நிகழ்கிறது. இதை அருட்சத்தி பதிதல்—சத்தி நிபாதம் என்பார்கள். பாசங்கள் யாவும் விடவே, முத்திப் பேறு கைகூடும்.

இறைவன் சந்நிதியில் எப்போதும் இந்த ஐந்தொழில் இடையருது பல படிகளில் நிகழ்ந்து கொண்டேயிருக்கும். சூரியனுடைய சந்நிதியிலே சில மலர்கள் மொட்டாகியும், சில மொட்டு விரிந்தும், சில நன்கு மலர்ந்தும், சில கூம்பியும், சில உதிர்ந்தும் போவது போல, இறைவன் சந்நிதியில்

இவ்வைந்தொழில்கள் உயிரின் பக்குவத்திற்கேற்ப நிகழ்ந்து கொண்டேயிருக்கும்.

**சத்தி**

சிவம் என்ற பொருள் ஒன்றே. சிவத்தின் ஆற்றலைத் தனியே பிரித்துச் சத்தி என்று சொல்லுகிறோம். சிவத்தையன்றித் தனியே சத்தி என்பது இல்லை. சத்தியின் செயற்படும் தன்மையை வைத்துச் சத்தி பலவாகச் சொல்லப்படும். சத்தியின் சொரூபம் உயிர்களுக்கு அனுக்கிரகம் மாத்திரங் குறித்த ஞானமொன்றே; அதுவே பராசத்தி என்பது. உயிர்களுக்கு மலபரிபாகம் வருவித்தல் குறித்து ஐந்தொழில் செய்விக்கும் நிலையில், அதன் ஒரு கூறு திரோதான சத்தி எனப்படும். முதல்வன் சர்வான்மாக்களையும் முத்தியில் சேர்ப்பிக்க வேண்டும் எனக் கொண்ட கருணையே இச்சா சத்தியாகும். ஆன்மாக்கள் செய்த இருவினைப் பயன்களை அனுபவித்துத் தீர்க்க வேண்டும் என்று முதல்வன் நினைப்பது ஞான சத்தி. அதே கருணையால், சிருட்டி முதலான காரியங்களை நடத்தி வருதல் கிரியா சத்தி. இச்சா சத்தியால் அனுக்கிரகமுண்டாய் ஞானசத்தியால் வினைகளை அறிந்து, கிரியாசத்தியால் வினைக்கீடாகத் தேகாதிப் பிரபஞ்சங்களைத் தோற்றுவித்தல் நிகழ்கிறது. இச் சத்திகள் முதல்வனுக்குக் கருவியேயாம்.

சிவத்தினுடைய சத்தியானது சிவத்திலிருந்து வேறு பிரிக்க முடியாத ஆற்றல் அளவேயாகும். தீயிலிருந்து பிரிக்கமுடியாத வெப்பம் போல, சிவ்மும் சத்தியும் இரண்டும் ஒரு பொருளேயன்றி, இரு பொருள்களல்ல. சிவபெருமான் 'ஆணல்லை பெண்ணல்லை அலியுமல்லை' என்றார் அப்பர் சுவாமிகள். அவரையே 'அம்மையே அப்பா' என்றும், 'அப்பன் நீ அம்மை நீ' என்றும் நம் ஆசாரியர் பாடினர். ஆற்றலைப் பெண்ணாகவும், ஆற்றலுடையவனை ஆணாகவும்

சொல்வது, சமயத் துறையில் எத்தனையோ பொருள்களிற் காண்பது போல, உபசார மொழியத்தனையே. இதையே புராண காவியக்காரர்கள் 'ஜகத்துக்குப் பிதா மாதாக்கள் இவ்விருவரும்' என்று சொன்னார்கள். புராணக் கதைக்கு இது வேண்டுவதே; ஆனால் தத்துவக் கருத்துக்கு இது சற்றும் பொருந்தாது.

### தசகாரியம்

தசகாரியம் என்ற ஒரு தொடர் சித்தாந்தத்தில் சொல்லப் பெறும்; ஆன்மா உலகின் இயல்பைக் கண்டு, பின் உயிரின் இயல்பைக் கண்டு, பின் சிவத்தின் இயல்பு கண்டு, இறுதியில் சிவத்தோடு ஒன்றும் நிலை வரையில் பெறும் அனுபவ முறைகளைப் பத்துப்படிகளாக வகுத்துக் கூறுவது ஒரு மரபு.

பிருதிவி தத்துவம் முதல் சிவ தத்துவம் ஈறாக உள்ள முப்பத்தாறு தத்துவங்களையும் இவை தத்துவங்கள் என்று வடிவு காண்பது தத்துவரூபம். இவை சடம் என்று உணர்தல் தத்துவ தரிசனம். சிவன் ஆசாரிய மூர்த்தமாய் எழுந்தருளி வந்து இவை சடமென்பதையும், ஆன்மாவின் ஞானம் தத்துவாதீதமாய் நிற்பதுஎன்பதையும், உணர்த்த உணர்ந்து நிற்பது தத்துவ சுத்தி. தத்துவங்கள் நீங்கின நிலையில், வந்த அதீத ஞானத்தைத் தானென்று காணுதல் ஆன்மரூபம். தனது செயல் இல்லையென்று கண்டு, தான் என்பது தோன்றாமல், அந்தச் சிவமென்னும் பரமானந்தப் பொருளில் கூடி அதுவாவது ஆன்ம சுத்தி. திருவருளையே இடமாக நின்று காணுதல் சிவரூபம். சிவப்பேற்றில் கைகூடும் அறிதற்கரிய பரமானந்தத்தைச் சேருதல் சிவதரிசனம். அறிவிக்க அறியும் ஆன்ம போதமும் கன்மப்புசிப்பும் அவனொழிய வேறில்லை என்று கண்டு, அகமும் புறமும் அந்தச் சிவத்துடனே கூடிநிற்றல் சிவயோகம். அந்த நிலையில், சிவன் இவன் உடலும் உயிருமாய் நின்று, பிராரத்தமாகிய விஷய

போதத்தையும் சிவ போதமாய்ச் செய்து, இவனைப் போத மற நின்று தானாக்கி விடுவன். ஆன்மலாபமான பரமானந் தம் பொங்கிக் கரை புரண்டு அவசமுறும் நிலை சிவபோகம் எனப்பெறும். இவ்வாறு காண்கிற தத்துவரூபம் தரிசனம் சுத்தி, ஆன்மரூபம் தரிசனம் சுத்தி, சிவரூபம் தரிசனம் யோகம் போகம் ஆகிய பத்துமே தச காரியம் எனப்படும்.

## முத்தி நிலை

சைவ சித்தாந்தத்தின் ஒரு முக்கியமான கோட்பாடு முப்பொருள் உண்மை என்பது. இதன்படி, பதி பசு பாசம் ஆகிய முப்பொருள்களும் அநாதியானவை, நித்தியமானவை (அழிவில்லாதவை) என்பது. ஆன்மாக்களுக்கு அழிவு இல்லை. ஆன்மா இறைவனோடு இரண்டறக் கலந்தபின், அதாவது முத்தி நிலையிலும், பாசங்களிலிருந்து விடுபட்ட பின்னும், சிவத்தோடு பூரணமாய் ஒன்றுவதில்லை. பிறப்பி லிருந்தும் இறப்பிலிருந்தும்-வினையின் தொடக்கிலிருந்து - விடுபட்டது உண்மை. விடுபட்ட ஆன்மா, இறைவனோடு இரண்டறக் கலந்து அவனது ஐந்தொழில்களில் சம்பந்த மின்றி, அவன் பேரின்பம் அளிக்கத் தான் அவ்வின்பத்தை அனுபவித்துக் கொண்டிருப்பன். இதுவே இரண்டறக் கலத்தலின் உண்மைப் பொருள் என்று சித்தாந்திகள் கூறுவர். இந்த நிலை ஏகமும் அல்ல, துவைதமும் அல்ல; உண்மை அ-த்வைதம். ஆதலால் இது சுத்தாத்துவைதம் என்பது சைவருடைய கருத்து. இவ்வாறு ஆன்மா ஒன் றாகாமல் இரண்டுமாகாமல் உள்ள ஆனந்தானுபவ நிலையில், மூன்றாவது பொருளான மலம் என்ன ஆகிறது என்பது கேள்வி. இதற்கும் அழிவில்லை என்பர்; மலமானது வறுத்த வித்துப் போல, முத்தியடைந்த ஆன்மாக்களைப் பந்திக்கும் வலிமையற்றுப் போன போதிலும், பூரணமாய் அழிந்துவிட வில்லை; பெத்தான்மாக்களைப் பந்தித்துக் கொண்டுதா னிருக்கிறது. மகாசங்கார காலத்தில் இது, மாயையில்

ஒடுங்கி, மீண்டும் சிருட்டிக் காலத்தில் ஆன்மாக்கள் உட லெடுத்தவுடனே அவர்களுடைய பரிபாகத்துக்குத் தக்க வாறு அவர்களுடைய அறிவை மறைத்துத் தன் தொழிலைச் செய்து கொண்டுதான் இருக்கிறது. இதனால் முத்தியிலும் மூன்று முதலும் உள்ளன என்று சொல்லுகிறோம்.

(தசகாரியமும் முத்தி நிலையும் மிகவும் நுணுக்கமான சிக்கல் பொருந்திய கருத்துக்கள். சாமானியமாய்ச் சம யத்தை அறிய முயல்வோர் இவற்றினுள் புகவேண்டுவ தில்லை.)

### முத்தி சாதனம்

இதுவரை பதி பசு பாசங்களின் இலக்கணங்களையும், சக்தியின் தன்மை, ஐந்தொழிலின் பொருள், தசகாரிய விளக்கம், முத்தி இலக்கணம் ஆகிய பொருள்களையும் கூறினோம். இனி முத்தி சாதனம் என்பது பற்றிக் கூறி இப்பகுதியை முடிக்கலாம்.

ஓர் அரசனுடைய புதல்வன் இளமையில் யாது காரணத்தாலோ அரண்மனையை விட்டு வேடர் கூட்டத்திலே சேர்ந்து வேடரால் வளர்க்கப் பட்டான். தான் இன்ன சிறப் புடையவன் என்பது அவனுக்குத் தெரியவில்லை. வேட னென்றே தன்னை மயங்கி இருக்கிறான். அந்த நிலையில் அரசன் வந்து, 'நீ என்னுடைய மகன்' என்று அவனுக்கு உணர்த்தி வேடர் கூட்டத்திலிருந்து பிரித்துச் சிறப்புச் செய்து தன்னைப்போல அரசகுமாரனாக்கினான். அதுபோல, உயிரானது, தன்னையும் அறியாது, தன் தலைவனையும் அறி யாது, ஐம்புல வேடர் சுழலிற்பட்டுத் துயருறுகின்றது. அப் போது தலைவன், தனது அருள் காரணமாக அவனுக்கு ஒரு குருவாக எழுந்தருளி வந்து, புலன்கள் முதலான தத்துவங் கள் நீயல்ல என்று அவனுக்கு உணர்த்தி, அவற்றை உள்ள படி உணரச்செய்து, அவற்றினின்றும் பிரித்து, அவனுடைய

அஞ்ஞானத்தைப் போக்கி, அவனைத் தானாக்கித் தனது திருவடியில் சேர்க்கிறான். குருவடிவாக வருகிற இறைவன் தனது தீக்ஷையால் அவ்வான்மாவைச் சுத்தனாக்குகிறான். குருவின் பார்வையாலும் பரிசத்தாலும் சஞ்சித வினை தீரு கிறது. செய்கின்ற செயலெல்லாம் சிவன் செயலென்ற பாவனையோடு இவ்வான்மா வினைசெய்து வரவே, ஆகாமியம் ஏறாமற் போகிறது. உடல் உள்ள அளவும் பிராரத்த வினை இருந்து அனுபவித்து, உடல் நீங்கவே, அதுவும் இல்லாமற் போகிறது. இவ்வாறு இருவினையொப்பு கைகூடுகிறது. பசுஞானத்தைப் போக்கி, குரு செய்த பதிஞான உபதேசத் தால் ஆணவ மலமும் அகல்கிறது. இவ்வாறு இருவினை யொப்பும் மலபரிபாகமும் கைகூடவே, அவ்வான்மாவிடத்துத் திருவருள் பதிகிறது; பதிந்த உயிர் பரமுத்தியில் சேர்கிறது.

திருவருள் நெறியில் நின்று சிவத்தைக் கூட விரும்பு வோர் பின்பற்றத்தக்க வாழ்க்கை நெறிகள் சரியை கிரியை யோகம் ஞானம் என நான்கு.

இவை முன்னமே விளக்கி உரைக்கப்பட்டன. இவ் வாழ்க்கை நெறிகளில் நிற்கும் காலத்து, அடியார் வழிபாடு செய்தல் மிக்க சிறப்புடையது, அவசியமானது. சிவஞா னிக்குச் செய்யும் தானமானது, சிறிதாயினும் மேலான பெரும் பயனைத் தரும்; நல்ல பிறப்பிற் பிறக்கச் செய்து, முதன் மூன்று மார்க்கங்களிலும் சாராது உண்மை ஞானத் தைத் தந்து, பிறவியை அறுத்து நாதன் அடிக்கமலங்களை நணுகுவிக்கும்.

எந்த நிலையில் நின்றோரும், சிவனுடைய திருவைந் தெழுத்தை விதிப்படி உச்சரிக்க, அஞ்ஞானம் நீங்கி ஆன்மா வில் அரன் உதிக்க, மலம் அறும். புறத்திலும் அரனைப் பூசிப்பது அடியார் செய்கையாகும். யான் எனது என்னும் கோணை ஞான எரியால் எரித்தவர்களுக்கு, வினையைப்

போக்கி இறைவன் தன்னையளிப்பான். அக்கினித் தம்பம் வல்லவனுக்கு அனல் சுடாதது போலவும், மருந்தும் மந்திரமும் உடையவனுக்கு விடம் ஏறாதது போலவும், ஞானிக்கு வினை ஏறாது. சுற்றுவதைக் குயவன் நிறுத்திய போதிலும், வேகம் உள்ளவரை சக்கரம் சுழல்வதுபோல, உடல் உள்ள வரை அதை ஒட்டிய வாதனைகள் இருந்து, உடல் மாயும் போது மலம் முதலிய யாவும் மாய்ந்து போம்.

இந்த நிலையில் சீவன் முத்தர் இருப்பர். ஆயினும், இறைவன் அடியார்களோடு கூடியிருந்து, சிவ வேடங்களாகிய திருநீறு உருத்திராக்கம் முதலியவற்றைப் பூண்டு அவற்றினிடம் அன்பு செலுத்தி, ஆலயங்களெல்லாம் அரனெனத் தொழுது, 'என்றும் நாம் யாவர்க்கும் இடைவோம் அல்லோம் இருநிலத்தில் எமக்கு எதிராவாரும் இல்லை' என்ற பெருமித நிலையில் வாழ்வார்கள். ஈசனுக்கு அன்பில்லாதவர், அடியவருக்கோ எவ்வுயிருக்குமோ தமக்கோ அன்பில்லாதவர்கள்; அவர்களுடைய சேர்க்கை பிறப் பிறப்பைக் கூட்டுவிப்பது; ஆகவே அதை நீங்கி அடியாருடன் கூடியிருக்க வேண்டும். திருக்கோயிலுள்ளிருக்கும் திருமேனியைச் சிவன் எனவே கண்டவர்க்கும், மந்திரத்தாலே நினைப்பவர்க்கும், இறைவன் ஆங்காங்கே உறைந்து வெளிப்பட்டு அருள் செய்வான். ஞான குருவே சிவன் என்று வழிபட்டோருக்குப் பரம்பொருளாகிய சிவன் இவனாகி, நயனம், வாசகம், மானதம் என்னும் மூன்று தீக்ஷைகளாலும் இவனைச் சிவமாகவே ஆக்கிவிடும்.

## திருவருள்

சைவ சமயத்தில் இறைவனது திருவருள் என்ற கருத்து மிக்க சிறப்பான இடம் வகிக்கிறது. இதைப் பல இடங்களில் குறிப்பிட்டிருக்கிறோம். திருவருள் என்பது, உயிர்கள் உய்யவேண்டும் என்று இறைவன் கொண்ட பெருங்கருணை. இது காரணமாகவே இறைவன் உயிர்கள்

களைப்படைந்த காலத்தே ஒடுங்கச் செய்து, மீண்டும் வினைக் கேற்பப் பிறவியைத் தந்து, மாயையிலிருந்து தனுகரண புவனபோகங்களைத் தோற்றுவித்து வினையருந்தச் செய் கிறான். உயிர்கள் வினையை அனுபவித்து முடிக்கவேண்டும், ஆணவ மலபந்தத்திலிருந்து விடுபடவேண்டும் என்பதே இதன் நோக்கம்.

பாற்கடலில் வாழும் மீன் அப்பாலை உண்ண எண்ணுமல், கடலின் கண் உள்ள பிற சிற்றுயிர்களான பூச்சி முதலிய வற்றை உண்டுவாழ முயல்கிறது. அதுபோல, உயிர்கள் தம்மையும் அறியாமல், தலைவனையும் அறியாமல் உலகப் பொருள்களில் பற்றுவைத்து உழல்கின்றன. இவ்வுழற்சியி லிருந்து மீளச் செய்வதே உடல் கொடுத்ததன் நோக்கம். அழுக்குத் துணியில் வண்ணன் சாணம் உவர்மண் முதலிய வற்றைப் போட்டு நனைத்து, தோற்றத்தில் பின்னும் அழுக் காக்கி, பிறகு அவற்றைத் துவைத்துச் சுத்தமாக்குவதுபோல, இறைவனும் உயிர்களை உலகப்பொருள்களிலே தோயச் செய்கிறான். கன்ம வலியால் இன்பம் வரும்போது எல்லோ ருக்கும் மகிழ்ச்சிதான். துன்பம் விளையும்போது வருந்தி இறைவனைக் கண்ணில்லாதவன் என்றுகூட மக்கள் குறை கூறுகிறார்கள். ஆனல் வைத்தியன், புண் உடையவனுக்கு வலி உண்டான போதிலும் கூட, கத்தியால் புண்ணை அறுத்துப் பிறகு அதை ஆற்றுகிறான். துன்பங்களும் இத் தகையனவே.

தாய் தந்தையர் பெற்ற பிள்ளைகள் தாம் சொல்லுகின்ற நல்வழியில் சில சமயம் நடக்காதபோது கோபித்துப் பிரம்பா லடித்துக் கடுமையான தண்டனையும் கொடுப்பார்கள். இவ் வளவும் பிள்ளையின்மேல் ஏற்பட்ட பரிவினாலேயாம். அது போலவே, இறைவன் சிலரிடத்துக் கோபித்து அருள் செய்வ தற்குப் பதிலாகத் துன்பமே தருவதுபோலத் தோன்றுவதும். இதுவும் அவரவருடைய தீவினையை அனுபவித்துக் கழிய வேண்டும் என்ற கருணையினால் நிகழ்வதேயாகும்.

இவ்வாறு இறைவன் உயிர்களுக்கு இன்பமும் துன்பமும் தருவது வினையை அனுபவித்துத் தீர்ப்பதற்காகவே. ஆயினும், இறைவனுடைய அருளின் தன்மையை வரையறை செய்து சொல்ல முடியாது. மாணிக்கவாசகரை மிகவும் சோதித்துத் துன்பத்தில் ஆழ்த்திய இறைவன் அதே நேரத்தில் அந்த இடத்திலேயே வந்தி என்ற பிட்டு வாணிச்சிக்கு அருள் செய்தானென்று நூல்களினால் அறிகிறோம். ஆகவே, திருவருளின் போக்கை உணர்ந்து அளவிட்டுச் சொல்ல முடியாது. இருவினையொப்பு நிகழ்ந்து, அந்த நிலையில் மல பரிபாகமும் உண்டாகி, சத்திநிபாதம் விளையும் என்று அருள் நூல்கள் பேசுகின்றன. அதாவது, பற்றில்லாமல் நல்வினை தீவினை இரண்டையும் அனுபவித்துப் பலனை சிவார்ப்பண மாகக் கருதி இருக்க, மேல் ஆகாமிய வினை வருவது நின்று, வினை உடலோடு கழிகிறது. இருவினை ஒப்பு விளைகிறது. இத்தகைய உத்தமர்களுக்கு, ஆணவ மலம் பரிபாக மடையவே, திருவருள் வந்து பதியும் என்பது கருத்தாகும்.

வயலில் உழுகிறவன் வயலை உழுது புழுதியாக்கி வரம்பு கோலிக்கொண்டு மடையை எதிர்நோக்கி இருக்கிறான். ஆனால் மழை பெய்விக்க அவனால் இயலாது. அதுபோல, நாம் நம்மைப் பக்குவப்படுத்தித் திருவருளை எதிர்நோக்கி இருக்கலாமேயன்றி, திருவருளைப் பெறுதல் நம்முடைய புத்தி பூர்வமான ஆற்றலுக்கு அடங்காது என்று சாத்திரம் சொல்லும். ஆதலால் இப்படி நடந்துதான் திருவருள் பெற வேண்டும் என்று சொல்ல முடியாது. வந்திக்குத் திருவருள் கைகூடியதுபோல, யாருக்கும் எந்த நேரத்திலும் எவ்விதக் காரணம் இல்லாமலும் இறைவனது அருள் நோக்கம் வந்து பொருந்தலாம். இதை நிர்ஹேதுக கடாட்சம் என்பார்கள். 'ஆட்பால் அவர்க்கு அருளும் வண்ணமும் ஆதி மாண்பும்- கேட்பான் புகில் அளவில்லை. கிளக்க வேண்டா' என்பது சம்பந்தர் வாக்கு. இதுவே திருவருளின் இயல்பு.

# தோத்திர சாத்திரப் பாடல்கள்

*இந்நூலகத்துக் கூறப்பட்ட கருத்துக்களுக்கு ஆதரவான பாடல்கள் சில கீழே கொடுக்கப்பட்டுள்ளன. இடமின்மை கருதி மிகச் சிலவே இங்குக் காணமுடியும். இவை பெரும்பான்மை திருமுறைகளிலிருந்தும் மெய்கண்ட சாத்திரங்களிலிருந்தும் எடுக்கப்பட்டுள்ளன.*

*திருமந்திரம்*

படமாடக் கோயில் பகவற்கொன் றீயில்
நடமாடக் கோயில் நம்பற்கங் காகா
நடமாடக் கோயில் நம்பற்கொன் றீயில்
படமாடக் கோயில் பகவற்கஃ தாமே.

அன்பு சிவம்இரண் டென்பர் அறிவிலார்
அன்பே சிவம்ஆவ தாரும் அறிகிலார்
அன்பே சிவம்ஆவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே.

*அப்பர்*

விரிவிலா அறிவி னார்கள் வேறொரு சமயம் செய்தே
எரிவினால் சொன்னா ரேனும் எம்பிராற் கேற்ற தாகும்
பரிவினால் பெரியோர் ஏத்தும் பெருவேளூர் பற்றி னானை
மருவிநான் வாழ்த்தி உய்யும் வகையது நினைக்கின் றேனே.

*சித்தியார்*

அறுவகைச் சமயத் தோர்க்கும்
அவ்வவர் பொருளாய் வேறும்

குறியது உடைத்தாய் வேதா-
கமங்களின் குறிஇறந் தங்கு
அறிவினில் அருளால் மன்னி
அம்மையோ டப்ப ளுகிச்
செறிவொழி யாது நின்ற
*சிவனடி சென்னி வைப்பாம்.*

ஓதுசம யங்கள் பொருளுணரும் நூல்கள்
ஒன்றோடொன் றொவ்வாமல் உளபலவும் இவற்றுள்
யாதுசம யம்பொருள்நூல் யாதிங்கு என்னில்
இதுவாகும் அதுவல்ல தெனும்பிணக்க தின்றி
நீதியினுல் இவையெல்லாம் ஓரிடத்தே காண
நின்றதுயா தொருசமயம் அதுசமயம் பொருள்நூல்
ஆதியினுல் இவையெல்லாம் அருமறைஆ கமத்தே
அடங்கியிடும் அவைஇரண்டும் அரனடிக்கீழ் அடங்கும்.

*திருமந்திரம்*

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
*நன்றே நினைமின் நமனில்லை நாணுமே*
சென்றே புகும்கதி இல்லைநும் சித்தத்து
நின்றே நிலைபெற நீர்நினைந்து உய்ம்மினே.

*திருவிளையாடற்புராணம்*

மும்மலம் வேறுபட் டொழிய மொய்த்துயிர்
அம்மலர்த் தாள்நிழல் அடங்கும் உண்மையைக்
கைம்மலர்க் காட்சியில் கதுவ நல்கிய
செம்மலை அலதுஉளம் சிந்தி யாதரோ.

*அப்பர்*

சாத்தி ரம்பல பேசும் சழக்கர்காள்
கோத்தி ரமும்குல மும்கொண் டென்செய்வீர்
*பாத்தி ரம்சிவம்* என்று பணிதிரேல்
மாத்தி ரைக்குள் அருளும்மாற் பேறரே.

நம்க டம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்க டம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்க டன்னடி யேனையும் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே.

*சித்தியார்*

அறிவரியான் தனையறிய ஆக்கை யாக்கி
அங்கங்கே உயிர்க்குயிராய் அறிவுகொடுத் தருளால்
செறிதலினல் திருவேடம் சிவனுருவே யாகும் ;
சிவோகம்பா விக்கும்அத் தாற் சிவனு மாவர் ;
குறியதனல் இதயத்தே அரனைக் கூடும்
கொள்கையினல் அரனவர் ; குறியொடுதாம் அழியும்
நெறியதனற் சிவமேயாய் நின்றிடுவர் என்றல்
நேசத்தால் தொழுதிடுநீ, பாசத்தார் விடவே.

*திருமந்திரம்*

ஆய பதிதான் அருட்சிவ லிங்கமாம்
ஆய பசுவும் அடலே றெனநிற்கும்
ஆய பலிபீட மாகும்நற் பாசமாம்
ஆய அரனிலை ஆய்ந்துகொள் வார்கட்கே.

*சித்தியார்*

திருக்கோயி லுள்ளிருக்கும் திருமேனி தன்னைச்
சிவனெனவே கண்டவர்க்குச் சிவனுறைவன் அங்கே;
உருக்கோலி மந்திரத்தா லேநினையும் அவர்க்கும்
உளன்எங்கும் இலன்இங்கும் உளனென் பார்க்கும்
இருப்பாய வடிவாகி இந்தனத்தின் எரிபோல்
மந்திரத்தின் வந்துதிப்பன்; இருஞ்சுரபிக் கெங்கும்
உருக்காண வொண்ணத பால்முலைப்பால் விம்மி
ஒழுகுவது போல்வெளிப்பட் டருளுவன், அன் பருக்கே.

*உண்மை விளக்கம்*

மாயை தனைஉதறி வல்வினையைச் சுட்டுமலம்
சாய அமுக்கிஅருள் தானெடுத்து – நேயத்தால்

ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தானழுத்தல்
தானெந்தை யார்பரதம் தான்.

தோற்றம் துடியதனில் தோயும் திதிஅமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்—ஊற்றமா
ஊன்றும் மலர்ப்பதத்தில் உற்றதிரோ தம்முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு.

*அப்பர்*

குறிக ளும்அடை யாளமும் கோயிலும்
நெறிக ளும்அவர் நின்றதோர் நேர்மையும்
அறிய ஆயிரம் ஆரணம் ஓதினும்
பொறியி லீர்மனம் என்கொல் புகாததே.

*திருமந்திரம்*

யாவர்க்கு மாம்இறை வற்கொரு பச்சிலை
யாவர்க்கு மாம்பசு வுக்கொரு வாயுறை
யாவர்க்கு மாம்உண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்கு மாம்பிறர்க் கின்னுரை தானே.
உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே.

*சம்பந்தர்*

ஆட்பால் அவர்க்கு அருளும் வண்ணமும் ஆதி மாண்பும்
கேட்பான் புகில் அளவு இல்லை ; கிளக்க வேண்டா ;
கோட்பா லனவும் வினையும் குறுகாமை எந்தை
தாள்-பால் வணங்கித் தலைநின்று இவை கேட்க, தக்கார்.

*சித்தியார்*

தந்தைதாய் பெற்ற தத்தம் புதல்வர்கள் தம்சொ லாற்றின்
வந்திடா விடின், உறுக்கி வளாரினால் அடித்துத் தீய

பந்தமும் இடுவர் : எல்லாம் பார்த்திடில் பரிவே யாகும் ;
இந்தநீர் முறைமை யன்றோ ஈசனார் முனிவு மென்றும்.

*அப்பர்*

நிலைபெறுமாறு எண்ணுதியேல், நெஞ்சே ! நீ வா ;
நித்தலும் எம்பிரானுடைய கோயில் புக்கு,
புலர்வதன்முன் அலகிட்டு, மெழுக்கும் இட்டு,
பூமாலை புனைந்து ஏத்தி, புகழ்ந்து பாடி,
தலை ஆரக் கும்பிட்டு, கூத்தும் ஆடி,
'சங்கரா ! சய, போற்றி, போற்றி !' என்றும்,
'அலை புனல் சேர் செஞ் சடை எம் ஆதீ !' என்றும்,
'ஆரூரா !' என்றென்றே அலறு நில்லே.

*திருமந்திரம்*

கங்காளன் பூசுங் கவசத் திருநீற்றை
மங்காமற் பூசி மகிழ்வரே யாமாகில்,
தங்கா வினைகளும் சாரும் சிவகதி,
சிங்கார மான திருவடி சேர்வரே.

அரகர என்ன அரியதொன் றில்லை
அரகர என்ன அறிகிலர் மாந்தர்
அரகர என்ன அமரரும் ஆவர்
அரகர என்ன அறும்பிறப் பன்றே.

சிவசிவ என்கிலர் தீவினை யாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளும்
சிவசிவ என்றிடத் தேவரு மாவர்
சிவசிவ என்னச் சிவகதி தானே.

*அப்பர்*

விண்ணுற அடுக்கிய விறகின் வெவ்வழல்
உண்ணிய புகில்அவை ஒன்றும் இல்லையாம்

பண்ணிய உலகினில் பயின்ற பாவத்தை
நண்ணிநின் றறுப்பது நமச்சி வாயவே.

*திருமந்திரம்*

குருவே சிவமெனக் கூறினன் நந்தி
குருவே சிவமென் பதுகுறித் தோரார்
குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்
குருவே உரையுணர் வற்றதோர் கோவே.

குருட்டினை நீக்கும் குருவினைக் கொள்ளார்
குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வார்
குருடும் குருடும் குருட்டாட்ட மாடிக்
குருடும் குருடும் குழிவீழு மாறே.

*சிவப்பிரகாசம்*

பலகலைஆ கமவேதம் யாவையினும் கருத்து,
பதிபசுபா சந்தெரித்தல்; பதிபரமே: அதுதான்
நிலவும்அரு உருவின்றி, குணம்குறிக ளின்றி,
நின்மலமாய், ஏகமாய், நித்த மாகி,
அலகில் உயிர்க் குணர்வாகி, அகில மாகி,
அகண்டிதமாய், ஆனந்த உருவாய், அன்றிச்
செலவரிதாய், செல்கதியாய், சிறிதாகி, பெரிதாய்,
திகழ்வதுதற் சிவம்என்பர், தெளிந்து ளோரே,

*காரைக்காலம்மையார்*

அறிவானும் தானே அறிவிப்பான் தானே
அறிவாய் அறிகின்ருன் தானே—அறிகின்ற
மெய்ப்பொருளும் தானே விரிசுடர்பார் ஆகாயம்
அப்பொருளும் தானே அவன்.

*அப்பர்*

மைப்படிந்த கண்ணாளும் தானும், 'கச்சி
 மயானத்தான், வார் சடையன்' என்னின் அல்லால்,
ஒப்பு உடையன் அல்லன் ; ஒருவன் அல்லன் ;
 ஓர் ஊரன் அல்லன் ; ஓர் உவமன் இல்லி ;
அப்படியும் அந்நிறமும் அவ் வண்ணமும்
 அவன் அருளே கண் ஆகக் காணின் அல்லால்,
இப்படியன், இந் நிறத்தன், இவ் வண்ணத்தன்,
 இவன் இறைவன்' என்று எழுதிக் காட்டொணாதே.

*திருமந்திரம்*

ஒன்றுகண் டீர்உல குக்கொரு தெய்வமும்
ஒன்றுகண் டீர்உலகு குக்குயி ராவது
நன்றுகண் டீர்இனி நமசிவா யப்பழம்
தின்றுகண் டேற்கிது தித்தித்த வாறே.

*சிவப்பிரகாசம்*

எண்ணரிதாய், நித்தமாய், இருள்மலத்தின் அழுந்தி
 இருவினையின் தன்மைகளுக் கீடான ஆக்கை
அண்ணலரு ளால்நண்ணி, அவை அவராய், அதனால்
 அலகில் நிகழ் போகங்கள் அருந்தும் ஆற்றால்
புண்ணியபா வம்புரிந்து, போக்குவர வுடைத்தாய்ப்
 புணரும் இருள் மலபாகம் பொருந்தியக்கால் அருளால்
உள்நிலவும் ஒளியதனால் இருளகற்றிப் பாதம்
 உற்றிடும்நற் பசுவருக்கம் எனஉரைப்பர் உணர்ந்தோர்

*திருவாசகம்*

போற்றி ! அருளுக, நின் ஆதி ஆம் பாத மலர்.
போற்றி ! அருளுக, நின் அந்தமாம் செந்தளிர்கள்.
போற்றி ! எல்லா உயிர்க்கும் தோற்றம் ஆம் பொற்பாதம்.
போற்றி ! எல்லா உயிர்க்கும் போகம் ஆம் பூங் கழல்கள்.
போற்றி ! எல்லா உயிர்க்கும் ஈறு ஆம் இணை அடிகள்.

போற்றி ! மால், நான்முகனும், காணாத புண்டரிகம்.
போற்றி! யாம் உய்ய, ஆட்கொண்டருளும் பொன்மலர்கள்.
போற்றி ! யாம் மார்கழி நீர் ஆடு '—ஏல் ஓர் எம்பாவாய் !

*திருமந்திரம்*

பதிபசு பாசம் எனப்பகர் மூன்றிற்
பதியினைப் போற்பசு பாசம் அனாதி
பதியினைச் சென்றணு காப்பசு பாசம்
பதியணு கிற்பசு பாசம் நில்லாவே.

*சித்தியார்*

மன்னவன்தன் மகன்வேட ரிடத்தே தங்கி
வளர்ந்து அவனை அறியாது மயங்கி நிற்ப,
பின்னவனும் 'என்மகன்நீ' என்றவரிற் பிரித்துப்
பெருமையொடும் தானாக்கிப் பேணு மாபோல்,
துன்னியஐம் புலவேடர் சுழலிற் பட்டுத்
துணைவனையும் அறியாது துயருறும்தொல் லுயிரை
மன்னும்அருட் குருவாகி வந்து அவரின் நீக்கி,
மலம் அகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன்.

யான் செய்தேன், பிறர்செய்தார், என்னதுயான் என்னும்
இக்கோணை ஞானஎரி யால்வெதுப்பி நிமிர்த்துத்
தான்செவ்வே நின்றிட,அத் தத்துவன்தான் நேரே
தனையளித்து முன்நிற்கும், வினையொளித்திட் டோடும்;
நான்செய்தேன் எனுமவர்க்குத் தானங் கின்றி,
நண்ணுவிக்கும் போகத்தைப் பண்ணுவிக்குங் கன்மம்;
ஊன்செய்யா ஞானந்தான் உதிப்பின் அல்லால்
ஒருவருக்கும் யானெனதிங்கு ஒழியா தன்றே.

அங்கித்தம் பனைவல்லார்க் கனல்சுடா தாகும் ;
ஔடதமந் திரமுடையார்க் கருவிடங்கள் ஏறா;
எங்கித்தைக் கன்மமெலாஞ் செய்தாலும் ஞானிக்(கு)
இருவினைகள் சென்றணையா; முற்செய்வினை இங்குத்

தங்கிப்போம்: பாத்திரமும் குலாலன்வினை தவிர்ந்த
சக்கரமும் கந்தித்துச் சுழலு மாபோல்;
மங்கிப்போய் வாதனையால் உழல்விக்கும் எல்லா
மலங்களும், பின் காயமொடு மாயு மன்றே.

ஈசனுக் கன்பில்லார், அடியவர்க்கன் பில்லார்,
எவ்வுயிர்க்கும் அன்பில்லார், தமக்கும்அன் பில்லார்;
பேசுவதென்? அறிவில்லாப் பிணங்களைநாம் இணங்கில்,
பிறப்பினிலும் இறப்பினிலும் பிணங்கிடுவர், விடுநீ;
ஆசையொடும் அரனடியார் அடியாரை அடைந்திட்டு,
அவர்கருமம் உன்கரும மாகச் செய்து,
கூசிமொழிந்து, அருள்ஞானக் குறியில் நின்று,
கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடித் திரியே.



